# சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கு.கோ.உமா மகேஸ்வரி**

பதிவு எண் : 3897

மேற்பார்வையாளர்

**முனைவர் ஜலஜா கோபிநாத்**

இணை மேற்பார்வையாளர்

**முனைவர் எஸ். விஜயன்**






திருக்குறள் ஆய்வகம்

சமயங்கள் தத்துவம் மற்றும் மனிதநேயச் சிந்தனைப்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை – 625 021


டிசம்பர் 2019

**முனைவர் ஜலஜா கோபிநாத்,**
பேராசிரியர் மற்றும் தலைவர் (ஓய்வு),
திருக்குறள் ஆய்வகம்,
சமயங்கள் தத்துவம் மற்றும் மனிதநேயச் சிந்தனைப்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

## மேற்பார்வையாளரின் சான்றிதழ்

**"சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு"** என்னும் பொருள் குறித்து அமைந்த இந்த ஆய்வேடு திருமதி **கு.கோ.உமா மகேஸ்வரி** அவர்களால், மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகத் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இவ்வாய்வின்மீது வேறு எந்தப் பட்டமும் இதற்கு முன்பு ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம்: மதுரை

நாள்:

இணை மேற்பார்யாளர்
**முனைவர் எஸ். விஜயன்**
முதல்வர்(ஓய்வு),
செந்தமிழ் கல்லூரி,
மதுரை.

மேற்பார்வையாளர்
**முனைவர் ஜலஜா கோபிநாத்,**
பேராசிரியர் மற்றும் தலைவர் (ஓய்வு),
திருக்குறள் ஆய்வகம்,
சமயங்கள் தத்துவம் மற்றும்
மனிதநேயச் சிந்தனைப்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

**கு.கோ. உமா மகேஸ்வரி,** எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,
பகுதிநேர ஆய்வாளர்,
திருக்குறள் ஆய்வகம்,
சமயங்கள் தத்துவம் மற்றும் மனிதநேயச் சிந்தனைப்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு"**

என்னும் தலைப்பில், மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியின் பயனாக உருவானது என்றும் இதற்குமுன் எந்த ஆராய்ச்சி பட்டத்திற்கும் இவ்வாய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

இடம்: மதுரை **(கு.கோ. உமா மகேஸ்வரி)**
நாள்: ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
**(முனைவர் எஸ். விஜயன்)**

உறுதிக் கையொப்பம்
**(முனைவர் ஜலஜா கோபிநாத்)**

இணை மேற்பார்யாளர்
**முனைவர் எஸ். விஜயன்**
முதல்வர்(ஓய்வு),
செந்தமிழ் கல்லூரி,
மதுரை.

மேற்பார்வையாளர்
**முனைவர் ஜலஜா கோபிநாத்,**
பேராசிரியர் மற்றும் தலைவர்
(ஓய்வு),
திருக்குறள் ஆய்வகம்,
சமயங்கள் தத்துவம் மற்றும்
மனிதநேயச் சிந்தனைப்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 21.

என்னைத் திறம்பட வழி நடத்தும் என் தாய் தந்தையருக்கும் என்னை முனைவர் பட்டம் பெறுவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து, இவ்வாய்வேட்டினை அழகாக வடிவமைத்து தட்டச்சு செய்து தந்த என் கணவர் திரு.கே.கண்ணன் அவர்களுக்கும் மற்றும் எனது மகள் தேவதர்ஷினிக்கும் நன்றி! நன்றி! நன்றி!

"நன்றி மறப்பது நன்றன்று"

# நன்றியுரை

அன்பில் அன்னை போலவும் பாசத்தில் சகோதரி போலவும் என்னைப் பல நிலைகளில் வழிநடத்தி, ஊக்கப்படுத்தி, நெறிப்படுத்திய திருக்குறள் ஆய்வக முன்னாள் தலைவர் பேராசிரியர் முனைவர் ஜலஜா கோபிநாத் அம்மா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுரையைத் திறம்பட முடிக்கப் பலவாறு உதவிய இணை வழிகாட்டி செந்தமிழ்க் கல்லூரியின் முன்னாள் முதல்வர் பேராசிரியர் முனைவர் எஸ்.விஜயன் ஐயா அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றிகூற கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுரையின் தலைப்பு தேர்ந்தெடுத்தது முதல் இறுதிவரை எனக்குப் பல நிலைகளில் ஆலோசனை தந்து உதவிய பண்பாளர் சௌராஷ்டிரக் கல்லூரியின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் பு.மு.சாந்தமூர்த்தி ஐயா அவர்களுக்கும் மற்றும் அவருடைய துணைவியார் திருமதி சுசீலா சாந்தமூர்த்தி அவர்களுக்கும் கனிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்குப் பல வகைகளில் வழிகாட்டியுடன் இணைந்து என்னை ஊக்கப்படுத்திய திரு. கோபிநாத் ஐயா அவர்களுக்கு என் மனம் உவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்கு அனுமதி வழங்கிப் பேருதவிப்புரிந்த சௌராஷ்டிர மகளிர் கல்லூரி செயலாளருக்கும் கல்லூரி முதல்வர் முனைவர் ஜே.எஸ். ஊர்மிளா அவர்களுக்கும் எனது துறைச் சார்ந்த உடன்பிறவாச் சகோதரிகள் மற்றும் பேராசிரியர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்கான நூல்களை வழங்கி உதவி செய்த செந்தமிழ்க் கல்லூரி பேராசிரியர் முனைவர் நேருஜி, நண்பர்கள் முனைவர் ராஜதுரை, முனைவர் சரவணகுமார் மற்றும் செந்தமிழ்க் கல்லூரி நூலகருக்கும் என் உளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இறுதிவரை மனந்தளராது பலப்பணிகளுக்கிடையில் தட்டச்சு செய்து இவ்வாய்வேடு சிறப்புற அமைய உதவி புரிந்த திரு.கி.கண்ணன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

*"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது"*

அன்புடன்,
**கு.கோ. உமா மகேஸ்வரி**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகப். | - | நாற்கவிராச நம்பி அகப்பொருள் விளக்கம் |
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலிங். | - | கலிங்கத்துப்பரணி |
| கலித். | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| ச.இ. | - | சங்க இலக்கியம் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல்.பொருள். | - | தொல்காப்பியம் - பொருளதிகாரம் |
| நம்பி. | - | நாற்கவிராச நம்பி |
| நற். | - | நற்றிணை |
| ப.பா. | - | பத்துப் பாட்டு |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பு.வெ. | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநராற். | - | பொருநராற்றுப்படை |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக் காஞ்சி |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

0.1 ஆய்வு நோக்கம்

0.2 ஆய்வுக் கருதுகோள்

0.3 ஆய்வு முன்னோடிகள்

0.4 ஆய்வு எல்லை

0.5 முதன்மைச் சான்றாதாரம்

0.6 துணைமைச் சான்றாதாரம்

0.7 ஆய்வு அணுகுமுறை

0.8 ஆய்வுப் பகுப்பு

# ஆய்வு முன்னுரை

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டை, கலாச்சாரத்தை, நாகரீகத்தை கண்முன் கொணர்ந்து நிறுவத்துவது சங்க இலக்கியங்களே ஆகும். உலகின் மிகத் தொன்மையான தமிழ்மொழியில் இலக்கியத்தை வளர்த்தப் பெருமை சங்ககாலப் புலவர்களுக்கும் அரசர்களுக்கும் சேரும். இலக்கியப் படைப்புகள் தனி இலக்கியமாகத் தோன்றாமல் தொகை நூல்களாகவே வடிவெடித்துள்ளன. இவ்விலக்கியங்களில் புலவர்கள் தாம் கண்ட சமூகத்தைத் தன் சொந்த உணர்வுகளுடன் பாடல்களாகப் படைத்தனர். அப்படைப்புகளில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் அக்காலத்தில் இருந்த போதிலும் அவற்றின் தாக்கம் இல்லை. இலக்கியத்தைப் பொறுத்தவரையிலும் சமயங்களைத் தாண்டி மக்கள் வாழ்க்கையின் இன்பதுன்ப உணர்வுகளுக்கே முதலிடம் தருகிறது. அகம், புறம் என்ற இருப்பொருள் கொண்ட இலக்கியத்தில் அகப்பாடல்கள் மாந்தர்களின் ***‘காதல், அன்பு, இல்லறம்’*** போன்ற உள்ளத்து உணர்வுகளை உயிரோட்டமாக உருவாக்கித் தந்துள்ளன. புறப்பாடல்களில் தொல்காப்பியர் காட்டிய நால்வகைக் குலத்தோரான ***‘அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்’*** போன்றோர்களின் கல்வி, வீரம், கொடை, புகழ் போன்ற அனைத்துப் புறக் கூற்றுகளையும் அழகுறக் கூறியுள்ளனர்.

சொல்லோவியமாகத் திகழும் சங்க இலக்கிய அகமாந்தர்களின் வாழ்வியலை ஐந்திணைவழி எடுத்துரைக்கிறது தொல்காப்பியம். இயற்கைச் சூழலில் வாழ்ந்தவர்களில் பிறரறியாத காதலைக் (களவு) குறிஞ்சியும், நெய்தலும் உணர்த்துகின்றது. நிலவளச் செழிப்புடைய மருதமும் காடான முல்லையும் கற்பில் நிகழும் மணவாழ்க்கைக்கு ***‘அகப்பொருள்’*** வழி தொல்காப்பியரும் நாற்கவிராச நம்பியும் இலக்கணம் வகுத்துள்ளனர். அகவாழ்விற்குத் தலைவன் தலைவி தலைமாந்தர்களாகவும் தோழி, நற்றாய், செவிலித்தாய், பாணன் போன்றோர்கள் துணைமாந்தர்களாகவும் வலம் வருகின்றனர். தலைவன் தலைவிக்கிடையே ***‘பரத்தை’*** என்ற கதாப்பாத்திரம்

வருவதுடன் ஊடலுக்கும் தலைவியின் துன்பத்திற்கும் அவள் காரணமாகிறாள்.

வளமான மருதத்தில் தலைவிக்கு நிகராக உலாவருபவள் பரத்தையாவாள். தலைவனின் அன்பையும் காதலையும் பெறும் தலைவி பரத்தையின் வரவால் துன்பமும் அடைகிறாள். கற்பின் இலக்கணத்தைப் பெண்களுக்கே (தலைவி) வகுத்த ஆண்கள் அக்கற்பின் ஒழுக்கத்தைப் புறக்கணித்து விதிமீறலாகப் பரத்தமை மேற்கொண்டனர். ஒழுக்க மீறலான (பரத்தமையை) இப்புறவொழுக்கம் தலைவிக்குச் சில நேரங்களில் தெரிந்தும் பலநேரங்களில் தெரியாமலும் இருந்தது. தலைவனின் பரத்தமை-யொழுக்கத்தால் அக்காலச் சமூகத்தில் பரத்தையர் தலைவிக்கு நிகரான மகிழ்ச்சியும் உரிமையும் பெற்றிருந்தனர் என்பதை எட்டுத் தொகை நூல்களில் தலைவி, தோழி, பரத்தைக் கூற்றுகளால் உணர முடிகிறது. இவர்களின் கூற்றுக்களை உற்று நோக்கி அக்காலச் சமுதாயத்தில் பெண்கள் பெற்றிருக்கும் இடத்தை அறிவதே ***‘சங்க இலக்கியங்களில் பரத்தமை –ஓர் ஆய்வு’*** ஆகும்.

***0.1 ஆய்வு நோக்கம்:***

அகப்பாடல்கள் திணை இலக்கியங்களாக அமைந்தவை. அவற்றை முதல், கரு, உரி என முப்பொருளாகத் தந்த புலவர்கள், தலைவி, தலைவன், தோழி, நற்றாய், செவிலித்தாய் ஆகியோர் கூற்றுகளாய்ப் பேரளவில் பாடியுள்ளனர். இவற்றினின்றும் சிறிது வேறுபட்ட நிலையில் பரத்தையர் கூற்றுக்களாகவும் சில பாடல்கள் காணப்படுகின்றன.

பரத்தையர் காமப்பரத்தை, இற்பரத்தை, சேரிப்பரத்தை என முப்பிரிவினர் ஆவர். அப்பரத்தையரின் செயல்களையும் அக இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக,

***“ ……………………………………….யாவரும்***
***காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்***
***பொலங்கலஞ் சுமந்த பூண்தாங் கிளமுலை***
***வருக மாளஎன் னுயிரெனப் பெரிதுவந்து***
***கொண்டனள் நின்றோள் கண்டுநிலைச் செல்லேன்***
***மாசில்குறு மகள் எவன்பே துற்றனை***

*நீயுந் தாயை இவற்கென யான்தன்*
*கரைய வந்து விரைவனென் கவைஇக்*
*களவுடம் படுநரில் கவிழ்ந்து நிலங் கிளையா*
*நாணி நின்றோள்...................."* (அகம்.16:7-16)

என்னும் வரிகளில் தலைவனின் குழந்தையைக் கண்டு வாரி அணைத்த பரத்தையின் செயலைக் கண்டு தலைவி பேசுவதும்,

*"அணை மென்றோள் யாம்வாட அமர்துணைப் புணர்ந்துநீ*
*மணமனையாய் எனவந்த மல்லலின் மாண்பன்றோ*
*பொதுக்கொண்ட கவ்வையிற் பூவணிப் பொலிந்தநின்*
*வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை"* (கலித்.66:9-12)

என்ற வரிகளில் தலைவன், பொதுமகளான பரத்தையை மணந்து கொண்டான் என்று வருவதும்,

*"நலத்தகை யெழிலுண்கண் நல்லார்தங் கோதையால்*
*அலைத்தபுண் வடுக்காட்டி அன்பின்றி வரினெல்லா*
*புலப்பேன்யா னென்பேன்மன் அந்நிலையே அவற்காணின்*
*கலப்பே னென்னுமிக் கையறு நெஞ்சே"* (கலித்.67:6-9)

என்ற வரிகள் தலைவி பரத்தையை ஏசுவதாகவும், தலைவனைத் தன்னகத்தேனின்று கூடுவேனென்றும் பாடுவதாகவும் அமைந்துள்ளன. மேலும், தலைவி பரத்தையை எள்ளி நகையாடுவதும், பரத்தை தலைவியை எள்ளி நகையாடுவதும் சங்க அகப் பாடல்களில் காணக் கிடக்கின்றன. அகப்பொருள் இலக்கியங்கள்வழிப் பரத்தையர்கள் அக்காலச் சமுதாயத்தில் பெற்றிருந்த இடத்தை வெளிப்படுத்துவதே ஆய்வின் நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

### *0.2 ஆய்வுக் கருதுகோள்:*

வளமையும் செழுமையும் மிக்கது மருதநிலம். வயலும் வயல் சார்ந்த இடத்தை முதற்பொருளாகக் கொண்ட மருதம், ஊடலை உரிப்பொருளாகக் கொண்டது. வளமை காரணமாகவும், ஊடல் காரணமாகவும், உரையாசிரியர்கள் கூறுவதைப்போல் போரின் காரணமாகவும், ஆடவர்

தொகை குறைந்து மகளிர் தொகை மிகுந்ததன் காரணமாகவும், மகப்பேற்றின் காரணமாகவும் பரத்தையர் பிரிவு சங்ககாலச் சமுதாயத்தில் காணப்பட்டது. இதனால் சமுதாயத்தில் பரத்தையர்க்கு ஒருதனி இடம் வழங்கப்பட்டு வந்தது. அவர்கள் அச்சமுதாயத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டனர் என்பது வெளிப்படை. எனவே இப்பரத்தையர் அச்சமுதாயத்தில் பெற்றிருந்த முக்கியத்துவத்தைக் காட்டுவதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### *0.3 ஆய்வு முன்னோடிகள்:*

வ.சுப.மாணிக்கனாரின் தமிழ்க்காதல், தமிழண்ணலின் சங்க மரபு, அகநானூறு, குறுந்தொகை, கலித்தொகை, ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள் போன்ற நூல்கள் இவ்வாய்விற்கு முன்னோடிகளாகத் திகழ்கின்றன.

### *0.4 ஆய்வு எல்லை:*

***‘சங்க மரபு’*** என்ற தமது படைப்பில் ***‘தமிழண்ணல்’*** எட்டுத் தொகை, பத்துப்பாட்டு எனும் சங்கப்பாடல்களை நிலக் கூற்றுகளின் அடிப்படையில் பிரித்தும் வகைமைப் படுத்தியும் எடுத்துரைத்துள்ளார். அவர்காட்டிய வரிசையில் பரத்தையர் கூற்றாய் அமைந்த பாடல்கள் இவ்வாய்விற்கு முதன்மைப் படுத்தப்பட்டுள்ளன. இதன் தொடர்ச்சியாகத் தலைவி மற்றும் தோழிக்கூற்றாய் அமையும் பாடல்களில் காணப்படும் உள்ளுறை உவமங்கள் வழியாகப் பரத்தையின் இயல்புகள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வுப் பக்க வரையறை கருதி ஒரு சில செய்திகள் மட்டும் சான்றாக இங்குக் காட்டப்பட்டுள்ளன.

### *0.5 ஆய்வு முதன்மைச் சான்றாதாரங்கள்:*

சங்க இலக்கிய எட்டுத்தொகை பாடல்களும் பத்துப்பாட்டும், தொல்காப்பியமும், நம்பியகப்பொருள் விளக்கமும் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக விளங்குகின்றன.

### *0.6 ஆய்வு துணைமைச் சான்றாதாரங்கள்:*

தமிழண்ணலின் ***‘சங்க மரபு’,*** வ.சுப.மாணிக்கனாரின் ***‘தமிழ்க்காதல்’,*** ந.சுப்பிரமணியனின் ***‘சங்ககால வாழ்வியல்’,*** பா.வீரமணியின் ***‘வள்ளுவரின்***

***வரைவின் மகளிர்'***, பெ.மாதையனின் ***'சங்க இலக்கியத்தில் குடும்பம்'***, சி.எஸ்.முருகேசனின் ***'வரலாற்றில் தேவதாசிகள்',*** செந்தமிழ்ச்செல்வி போன்ற நூல்கள் இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### *0.7 ஆய்வு அணுகுமுறை:*

மருதத்திணைப் பாடல்களில் காணப்படும் பரத்தையர் பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டு விளக்குவதற்கு விளக்கமுறை ஆய்வும் பரத்தையரின் இயல்புகள், செயல்கள் போன்றவற்றை அக்காலத் தலைவி, தோழி இயல்புகள், செயல்களோடு ஒப்பிடுவதற்கு ஒப்பீட்டுமுறை ஆய்வும், சமூகவியல் அணுகுமுறை ஆய்வும் மேற்கொள்ளப்படுகின்றன.

### *0.8 ஆய்வுப்பகுப்பு:*

***"சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு"*** என்னும் தலைப்பில் காணப்பெறும் இந்த ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாகப் பிரித்து விரித்துரைக்கப்பட்டுள்ளது. அவை பின்வருமாறு:

ஆய்வு முன்னுரை

1. இலக்கணமும் பரத்தமையும்
2. சங்க அகஇலக்கியங்களில் பரத்தையர் கூற்றுவழிப் பரத்தமை
3. தலைவி தோழி கூற்றில் உள்ளுறைவழிப் பரத்தமை
4. பரிபாடலில் பரத்தமை
5. புறநானூற்றில் பரத்தமை
6. பத்துப்பாட்டில் பரத்தமை

ஆய்வு முடிவுரை.

ஒவ்வொரு இயலும் அதன் தேவைக்கேற்ப உட்தலைப்புகளைக் கொண்டதாக அமைந்துள்ளது.

### *ஆய்வு முன்னுரை:*

ஆய்வு நோக்கம், ஆய்வுக் கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்வு முதன்மைச் சான்றாதாரம், ஆய்வுத் துணைமைச் சான்றாதாரம், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப்பகுப்பு முதலியன இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன.

***இலக்கணமும் பரத்தமையும்:***

இயல் ஒன்றில் தொல்காப்பியம் காட்டும் பிரிவின் வகையாக ஓதல், பகை, தூது, காவல் மற்றும் பொருட் பிரிவை மட்டுமல்லாமல் பரத்தையர் பிரிவையும் கூறுவது எடுத்துரைக்கப்படுகிறது. தொல்காப்பியர் தலைவியின் பூப்புக் காலத்தையும் பரத்தையர் பிரிவில் சுட்டிக் கூறுவதனைக் காணமுடிகிறது. தொல்காப்பியர் காலம் அடுத்துப் பொருளிலக்கணத்தை விரிவாக எடுத்துரைத்த நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கத்தில் கூறப்படும் பரத்தையர் பிரிவைப் பற்றிய செய்திகள் எடுத்துரைக்கப்படுகின்றன. பரத்தையர் பிரிவுகளை இலக்கணவாதிகளைத் தொடர்ந்து சாத்திரங்கள், வள்ளுவர் கூறும் விளக்கங்களும் தொகுத்துரைக்கப்படுகின்றன.

***சங்க அகஇலக்கியங்களில் பரத்தையர் கூற்றுவழிப் பரத்தமை:***

இரண்டாவதாக அமையும் இந்த இயலில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நிலங்களை அதன் தன்மைகளின் அடிப்படையில் தொல்காப்பியம் பிரித்துள்ளமையும், ***‘அகம்’*** பற்றிய முதல், கரு, உரிப்பொருள் விளக்கமும் பாலைத்தவிர மற்ற நான்கு நிலங்களில் மருதத்திணையில் ***‘பரத்தமை’*** மிகுந்து இருந்ததற்கான காரணங்களும் விளக்கப்பட்டுள்ளன. மேலும் பரத்தையர் மருதம் தவிர்த்து குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களிலும் இடம் பெற்றுள்ளனர். அவர்களின் கூற்றுவழி தலைவனின் பரத்தமை ஒழுக்கமும், தலைவியின் குண இயல்பும் பேசப்பட்டுள்ளமை உணரமுடிகிறது. தமிழண்ணலின் ***‘சங்கமரபு’*** நூலில் ஐந்நிலங்களின் கூற்றுக்களின் அடிப்படையில் சங்க இலக்கியங்களின் அகப்பாடல்கள் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றில் ***‘பரத்தையர் கூற்று’*** அமைந்த பாடல்கள் மட்டும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

***‘நான்கு திணைப் பரத்தையர் கூற்றுகள்’*** – என்னும் உட்தலைப்பு,

1) குறிஞ்சிநிலப் பரத்தையர் கூற்று
2) முல்லை நிலப் பரத்தையர் கூற்று
3) மருத நிலப் பரத்தையர் கூற்று
4) நெய்தல் நிலப் பரத்தையர் கூற்று

என்னும் பிரிவுகளுடன் அமைந்துள்ளது.

***‘புணர்தல்’*** நிமித்த உரிப்பொருளைக் கொண்டு விளங்கும் குறிஞ்சி நிலத்தில் ***‘களவுக்காதல்’*** காரணமாகப் பரத்தமை மிகமிகக் குறைவாக உள்ளதை உணரமுடிகிறது. அக்குறிஞ்சி நிலத்தில் தலைவன் தலைவியின் பூப்புக் காரணமாகப் பரத்தையிடம் சென்றதும், பூப்பு முடிந்த தலைவியிடமே தலைவனைச் செல்லுமாறு பரத்தை கூறுதலால், பரத்தை உலகியல் உண்மை உணர்ந்தவளாக உள்ளதை உணரமுடிகின்றது.

குறிஞ்சி நிலத்தைப் போன்று முல்லை நிலத்திலும் பரத்தமையொழுக்கம் அதிகம் பேணப்படவில்லை. முல்லை நில உரிப்பொருளான ***‘இருத்தல்’*** நிமித்தம் காரணமாக இந்நிலத்தில் பரத்தையர் பிரிவு அதிகம் இடம்பெறவில்லை. எட்டுத்தொகை அகநூல்களில் ஒன்றான குறுந்தொகைப் பாடலில் மட்டும் முல்லைநிலத் தலைவன் பரத்தமை மேற்கொண்டு ஒழுகுவதை அறியமுடிகின்றது.

செல்வவளம் மிக்க மருத் நிலத்தில்தான் அதிகமாகப் பரத்தமையொழுக்கம் பேசப்பட்டுள்ளது. ஐநிலங்களைப் பாடும் எட்டுத்தொகை அகநூல்களான நற்றிணை, ஐங்குறுநூறு, குறுந்தொகை, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களால் தலைவன் ***‘காமக்கிழத்தி, காதற்பரத்தை சேரிப்பரத்தை, இற்பரத்தை, நயப்புப்பரத்தை’*** போன்ற பரத்தையர்களுடன் ஒழுகி வந்தமை அறியமுடிகின்றது. அகவாழ்வின் அன்பைத் திறம்படப் பாடும் நற்றிணை, ***‘பரத்தையும் தலைவனின் நடுக்கமும்’*** என்ற உட்தலைப்புடன் கூறப்பட்டுள்ளது. நற்றிணை மருதப்பரத்தையர் கூற்றில் தலைவனை அச்சுறுத்தும் பரத்தையின் துணிவு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. காதலை நயம்பட எடுத்துக் காட்டும் குறுந்தொகை,

1. பழிப்புரைக்குப் பதிலுரை
2. பரத்தையின் துணிவு
3. சேரிப்பரத்தையும் காமக்கிழத்தியும்

என்ற உட்பிரிவுகளில் விளக்கப்பட்டுள்ளது.

குறுந்தொகையில் தலைவியால் ஆட்டுவிக்கப்படும் பாவையைப் போல் செயல்பட்ட சுதந்திரமில்லா தலைவன் பரத்தையின் இல்லத்தில் தம் விருப்பம்

போல் வாழ்ந்து வந்தமையும்; தன் சுற்றத்தாருடன் தலைவி வந்து தலைவனைக் காத்துக் கொள்ளட்டும் என்று தலைவிக்கே சவால்விடும் பரத்தையின் செயலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

சொல்நயம், பொருள் நயமிக்க, ஐங்குறுநூறு,

1) காதற்பரத்தையின் இயல்பு
2) சூளை பொய்யாக்கும் தலைவன்
3) புனலாடலும் பரத்தையும்
4) பரத்தைக்கே முதன்மை
5) பரத்தையின் புலம்பல்
6) பரத்தையின் புறங்கூற்று
7) தலைவி புறங்கூறுதலும் தலைவியின் செயல்பாடும்

என்ற உட்பிரிவுகளில் விளக்கப்பட்டுள்ளது.

சேரிப்பரத்தையின் மகளாக வரும் காதற்பரத்தை தலைவனை மட்டுமே விரும்புபவளாக மருதநிலத்தில் வலம் வருவதை அறிய முடிகின்றது. தலைவன் தலைவியிடம் செய்த சூளைப் பொய்யாக்கித் தன்னையே நாடி வருவான் என்று பெருமைப் பேசும் காதற்பரத்தையைக் காணமுடிகிறது. தன் இல்லம் சென்ற தலைவன் தலைவியுடனே தங்கிவிட்டதை அறிந்த பரத்தை வருந்தும் இயல்பை நுணுக்கமாகத் தெளிவுறுத்தும் பாடல்களும் இடம்பெற்றுள்ளன. ஊரார் அறிய, அலராக மாறும் அளவில் தலைவன் தன்னுடன் மட்டுமே நீராட விரும்பும் காதற்பரத்தையின் ஒருமைக்குணம் வெளிப்படுகிறது. தனக்குக் கிடைக்காத அரிய, சிறந்த பிள்ளைப்பேற்றின்பம் தலைவிக்குக் கிடைத்த மகிழ்ச்சியில் தலைவனை அவன் இல்லத்திற்கு அனுப்பும் இரக்கக் குணம் கொண்டவளாகவும் பரத்தை வெளிப்படுகிறாள். தலைவியைத் தங்கையாக என்னும் காதற்பரத்தையைக் காட்டுகிறது ஐங்குறுநூறு.

சொல்லோவியமும் பொருட்களஞ்சியமும் உள்ளுறைப் பெட்டகமுமாகத் திகழும் கலித்தொகை,

1. இடையன் கொன்ற மரம் போன்ற பரத்தை
2. தலைவனைத் தன் வசமாக்கின பரத்தை

3. பித்து இல்லாத பரத்தை
4. பரத்தையை தலைவன் மணத்தல்
5. தலைவிக்கு நிகர் காமக்கிழத்தி

என்ற உட்பிரிவுகளாகத் தொகுக்கப்பட்டுள்ளது.

கனவில் பெற்ற செல்வம் விடியலில் தொலைவது போலத் தலைவன் தன்னை விட்டுப் பிரிந்ததால் தலைவனின் மார்பு நிலையில்லாதது என்று உணர்ந்தாள்; தலைவன் தழுவாததால் இடையன் கொன்ற மரம் போல ஆனது எனப் புலம்பும் காமக்கிழத்தி, தலைவன் புதுப்பரத்தையை நாடினாலும் தன் இல்லமே வருதல் வேண்டும் என வேண்டி ஏங்கும் காமக்கிழத்தி, தனக்கென ஓர் ஆசையும் இல்லாதவளாக வாழ்வது போன்ற பல செய்திகள் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளன.

பண்டைத் தமிழரின் அகவாழ்வின் அன்பு, காதல், இல்லற மேன்மை, ஊடல், சடங்குமுறை என அனைத்தும் ஒருசேர சிறப்புடன் விளங்கும் அகநானூறு,

1. வஞ்சினப் பரத்தை
2. இற்பரத்தையும் நயப்புப்பரத்தையும்

என்ற உட்பிரிவுகளுடன் காட்டப்பட்டுள்ளது.

தன் அழகாலும் ஆடலாலும் தலைவனைத் தன் வசப்படுத்தும் பரத்தை, தலைவி அலறும்படி தலைவனைத் தன் வசப்படுத்தும் காமக்கிழத்தி, தலைவனின் பெரும் பரத்தமையால் துணிவுக் கொண்ட காமக்கிழத்தி தலைவியையே எதிர்த்துப் பேசும்நிலை ஆகியவை பற்றிய கருத்துக்கள் உரைக்கப்பட்டுள்ளன.

கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் வணிகம் காரணமாகவோ, வேறு சூழலிலோ அந்நிலத்தில் பரத்தையர் வாழ்ந்ததும், தலைவன் பரத்தமை மேற்கொண்டொழுகும் நிகழ்வும் நற்றிணையிலும் ஐங்குறுநூற்றிலும் சித்திரிக்கப்பட்டுள்ளதனை,

1. இல்லற நெறிப்படுத்தும் பரத்தை
2. பரத்தை உணர்த்தும் தலைவியின் அறியாமை

என்ற உட்பிரிவுகளில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

அம்மூவனார் என்னும் புலவர் காட்டிய நற்றிணை, நெய்தல்நிலத் தலைவன், முதுமை காரணங்காட்டித் தன்னை விடுத்துத் தலைவியிடம் சென்றதை எண்ணி வருந்திய காமக்கிழத்தி, தலைவி முதுமையடைந்தால் அவளுக்கும் தனது நிலையே உண்டாகும் என்று கூறும் நிகழ்வு காட்டப்பட்டுள்ளது. மேலும் அலைகள் விளையாடும் கடற்கரை மணலில் பாவை செய்து விளையாடும் அறியாமை குணம் கொண்ட இளம் தலைவியை விடுத்துப் பரத்தமை மேற்கொண்ட தலைவனின் இயல்பை ஐங்குறுநூறு சித்திரித்துக் காட்டுகிறது.

நீராடி மகிழ்ந்த பரத்தையை நாடிய தலைவனைக் கேள்விக் கேட்கும் பரத்தையின் தோழி குரல் கேட்கமுடிகிறது. மாறுபட்ட சிந்தனையும் கற்பனையும் கொண்ட சங்கப் புலவர் ஓரம்போகியாரின் பாடல் பரத்தையின் தோழிக்குத் தந்த முக்கியத்துவத்தை உணர்த்துகிறது.

மேலும் தலைவனை இல்லற நெறிப்படுத்தும் பரத்தையும், சேரிப்பரத்தையை இல்லற நெறிப்படுத்தும் பரத்தையும், சேரிப்பரத்தையை நாடிய தலைவனிடம் ஊடும் காமக்கிழத்தியின் இயல்புகளையும் இவ்வியல் எடுத்துரைக்கிறது.

***தலைவி தோழி கூற்றில் உள்ளுறைவழிப் பரத்தமை:***

சங்க இலக்கியத்தில் தலைவி முதன்மையானவளாகப் போற்றப் படுகிறாள். அத்தலைவியின் ஊடலுக்கும், துன்பத்திற்கும் தலைவனின் பரத்தையொழுக்கமே காரணமாகின்றது. தலைவி மற்றும் தோழியின் கூற்றுக்களின் வாயிலாகத் தலைவனின் பரத்தையொழுக்கம் ***‘இலக்கியங்களுக்கு உயிர்தரும் உள்ளுறை’*** வழியாக இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தலைவியின் துன்பத்திற்குக் காரணமான தலைவனின் பரத்தமையும் பரத்தையின் இயல்புகளையும் சங்க அகநூல்களான எட்டுத் தொகையில் இடம்பெறுதலை

1) உள்ளுறை ஒரு விளக்கம்
2) தலைவி கூற்றில் உள்ளுறைவழிப் பரத்தமை
3) ஐங்குறுநூறும் பரத்தமையும்
4) கலித்தொகைத் தலைவி கூற்றில் பரத்தமை

5) தோழி கூற்றில் பரத்தையர் இயல்பு

என ஐந்து உட்பகுதிகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது.

சங்கப்பாடலுக்கு அழகும் உயிரோட்டமும் தரும் உள்ளுறையில் பரத்தைப் பற்றிய செய்திகள் ஐங்குறுநூறு மற்றும் கலித்தொகை தலைவிக் கூற்றில் காணமுடிகின்றது. அவை தலைவனின் கொடுமையையும் பரத்தையின் இயல்பையும் எடுத்துரைக்கின்றன. ஓரம்போகியாரின் ஐங்குறுநூற்றில் மருதம் மற்றும் நெய்தல் நிலத்தில் தலைவன் பரத்தமையொழுக்கம் மேற்கொண்டதால் தலைவிக்குத் துன்பம் நேர்கிறது. சங்க அகப்பாடலில் தலைமைப் பாத்திரமாய் உலாவரும் தலைவி தனது இன்ப துன்ப உணர்வுகளைத் தன் கூற்றால் வெளிப்படுத்துகிறாள். அவை, வேழஞ் சுற்றும் ஊரன், வேழம் கரும்பிற் பூக்கும் ஊரன், வேழன் வெண்பூ பகரும் ஊரன், புனலாடும் மகளிரும் ஊரனும், நாள்தோறும் புதுப்பரத்தையை நாடும் ஊரன், பொது மகளிரோடு தருக்கித் திரியும் ஊரன், அலருக்கு அஞ்சாத தலைவன், தலைவிக்குத் துன்பம் தரும் ஊரன், ஆமையின்மீது பார்ப்பு ஏறித் துஞ்சும் ஊரன், மீனுக்கு இரையாகும் தீம்பழம் அன்ன ஊரன், இந்திர விழாவும் பரத்தமையும், கரும்புப் பாத்தியின் ஆம்பல் சுரும்பு பசி நீக்கும் ஊரன், ஆம்பல் தாமரை போல் மலரும் ஊரன், பன்மீன் அருந்திய நாரை தங்கும் நீர்நிலை உடைய ஊரன், தலைவனின் அளவற்ற காமம், அடங்காத் தலைவன், மடநடை நாரையும் வெள்ளாங் குருகும், தலைவியின் மகப்பேறும் தலைவனின் பரத்தமையும், பரத்தையிற் பிரிந்த தலைவனும் புதல்வனின் வருகையும், பரத்தையின் புலவியும் தலைவியின் ஊடலும், தலைவனின் பரத்தமையும் ஊரார் அலரும், தலைவனின் கொடுமையொழுக்கமும் தலைவியின் வருத்தமும், கடலைவிடப் பெரியது தலைவனின் அன்பு என்ற உட்தலைப்புகளுடன் தரவுகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

புலவர்கள் உள்ளுறை என்னும் கருவியைக் கொண்டு பரத்தையர்களின் இழிநிலையையும் தலைவனைப் ***‘பரத்தன்’*** என்பதையும் உணர்த்தும் இயலாகவும் இவ்வியல் அமைந்துள்ளது. வேழத்தைச் சுற்றும் ஊரனாகவும் பொதுமகளிரோடும், புதுப்பரத்தையுடனும் சுற்றித் திரியும் ஊரனாகவும் தலைவன் இருப்பதையும், தருக்கித்திரியும் பரத்தையும்,

தலைவியின் துன்பத்தைவிட தனது இன்பத்திற்காகப் பரத்தைக்கே முதன்மை இடம் தரும் தலைவன், தலைவியின் மகப்பேறு காரணம் காட்டிப் பரத்தமை மேற்கொண்ட தலைவனின் குணம், பரத்தையிற் பிரிந்து தலைவன் தன் புதல்வனுடன் மனையில் புகுவான் என எண்ணி ஏமாந்த தலைவியின் வருத்தம், பரத்தையைத் தங்கையாகக் காணும் தலைவியின் இயல்பும் என தலைவி கூற்றில் வரும் செய்திகள் இவ்வியலில் காட்டப்பட்டுள்ளன.

தலைவிக்கு அடுத்தபடியாகப் பெரும்பங்கு வகுப்பவள் தோழியே ஆவாள். தலைவியின் எல்லாவகைச் செயற்பாடுகளிலும் பங்கேற்பவளும் களவில் காதலுக்கு உதவுபவளாகவும் கற்பில் தலைவனின் பிரிவில் தலைவிக்கு ஆறுதல் கூறுபவளாகவும் தலைவனின் தவறைச் சுட்டிக் காண்பிப்பவளாகவும் வரும் தோழியின் கூற்றில் இடம்பெறும் புலனாகும் பரத்தமையொழுக்கத்தை உள்ளுறைவழி இவ்வியலில், ***தோழிக் கூற்றில் பரத்தையர் இயல்பு*** என்ற உட்தலைப்பில்,

1. தலைவனின் நலம் விரும்பம் தோழி
2. பிறவிதோறும் சேர்ந்திருத்தலையே விரும்பும் தோழி
3. தலைவனை மணவாழ்க்கைக்குத் திரும்புமாறு அறிவுறுத்தும் தோழி
4. பரத்தையிற் பிரிந்த தலைவனின் அன்பு
5. தலைவனின் கடமையை உணர்த்தும் தோழி
6. மனையாளின் துயரம் நீக்கும் தலைவன்
7. பசந்த நுதல்
8. தலைவனின் பரத்தமையும் தலைவியின் ஆற்றாமையும்

என்ற பிரிவுகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

பரத்தமையை மேற்கொள்ளும் தலைவனது செயலை வெளிப்படையாகக் கூறாமல் நிலத்துக் கருப்பொருள்களின் செயல்கள் வாயிலாக உவமையாகக் கூறி வெளிப்படுத்தும் பாங்கும் சிறப்பாக அமைகிறது. தலைவி மற்றும் தோழி கூற்றில் அமைந்த பல உள்ளுறைகள் இவ்வியலில் காட்டப்பட்டுள்ளன.

***பரிபாடலில் பரத்தமை:***

பொய்யற்ற சமூகமும், உள்ளதை உள்ளபடி காட்டும் சமூகமும் இருந்த சங்க காலத்தில் அகமும் புறமும் ஒன்றாகப் பாடப்பெற்ற

எட்டுத்தொகை இலக்கியங்களில் ஒன்றாகும் பரிபாடல். இறைவனின் பெருமையும் அகவாழ்வின் இன்பத்தையும் இசையுடன் பாடப்பெற்ற பரிபாடலில் காணப்படும் பரத்தமைப் பற்றிய கருத்துக்கள்

1. பரிபாடலின் சிறப்பு
2. பரிபாடல் அமைப்பு
3. நீர்விளையாட்டுப் பொருட்கள்
4. பரிபாடலில் வையை
5. வையையில் வெள்ளம்
6. பரிபாடலில் பரத்தமை

என்ற உட்தலைப்புகளில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

நீரின்றி அமையாது உலகு என்பது போல் நீரின் சிறப்பையும், குன்றத்து அழகையும், மதுரையின் வளத்தையும் வர்ணிக்கும் பரிபாடலில் திருமால், செவ்வேள், வையை ஆகிய தலைப்புகளில் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பரிந்து செல்லும் பாட்டாக அமையும் பரிபாடலில் திருமால், முருகப்பெருமானின் அருள் சிறப்பைப் பாடுவது மட்டுமல்லாமல் மதுரையை வளமாக்கும் வையை நதியில் வெள்ளப்பெருக்கு ஏற்படுதலும் அதில் மக்கள் நீராடி மகிழ்தலும் கூறப்பட்டுள்ளன. வையையில் தலைவனுடன் காதற்பரத்தை நீராடுவதற்கு யானை, குதிரை ஆகியவற்றின் மேல் கத்தூரிக் குழம்பு, குங்குமப்பூ குழம்பு, திலகம், அகில், செம்பஞ்சுக் குழம்பு போன்ற நீராடும் பொருட்களுடன் அமர்ந்து சென்று நீரணி விழவைக் கொண்டாடி மகிழ்ந்தனர் என்பது அறியமுடிகிறது. மதுரையைக் குளிர்விக்கும் இவ்வையையின் நீரணி விழாவின் சிறப்புகளைக்

1. காதற்பரத்தையும் முதுபெண்டிரும்
2. யானைமீதும் குதிரைமீதும் செல்லும் பரத்தையர்
3. பிடிமீது தலைவி
4. அசதியாடலில் பரத்தை
5. தலைவனின் பரத்தமையை விரும்பாத தலைவி

என்ற உட்தலைப்புகளில் விளக்கப்பட்டுள்ளன.

தலைவன் பரத்தையுடன் நீராடுவதால் ஊடிய தலைவி மற்றும் தோழிக்கூற்றில் இடம் பெறும் உரையாடல் வாயிலாகப் பரத்தையின்

இயல்புகளும் வையையின் சிறப்புகளும் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. தலைவியின் ஆரத்தையும், வளையலையும் பரத்தைக்குத் தந்த தலைவனின் போக்கு அறிந்த தலைவி பரத்தையுடன் கோபம் கொண்டு பேசுவதும், பரத்தையின் ஊடலைத் தீர்த்து வைக்கும் முதுபரத்தையரும் பரிபாடலில் இடம்பெறுவதை இவ்வியல் எடுத்துரைக்கின்றது.

***புறநானூற்றில் பரத்தமை:***

இயல் ஐந்தில் அரசனின் வீரம், கொடை, அறம் பேசும் புறநானூற்றில் பேகனின் பரத்தமையைக் கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர்கள் கண்டித்ததுடன் தங்களுக்குப் பரிசாக அவன் இல்லறம் ஓம்புதலே வேண்டும் என வேண்டி உரைப்பதை,

1. பேகனும் பரத்தமை ஒழுக்கமும்
2. குறுங்கலி
3. பரணரும் பேகனும்
4. கபிலரும் பேகனும்
5. அரசில் கிழாரும் பேகனும்
6. பெருங்குன்றூர் கிழாரும் பேகனும்

என்ற உட்தலைப்புகளில் விளக்கப்பட்டுள்ளது.

***பத்துப்பாட்டில் பரத்தமை:***

பத்துப்பாட்டில் ***‘கொண்டி மகளிர்’*** என்று பரத்தையர் அழைக்கப் பெற்றமையைப் பட்டினப்பாலை மற்றும் மதுரைக் காஞ்சி நூல்களில் காணமுடிகின்றது. இதனைப்

1. பத்துப்பாட்டின் பெருமை
2. பத்துப்பாட்டும் நூல் அமைப்பும்
3. பத்துப்பாட்டில் பரத்தமை
4. கொண்டி மகளிர் ஒரு விளக்கம்
5. பட்டினப்பாலைக் காட்டும் பரத்தமை
6. மதுரைக்காஞ்சி காட்டும் பரத்தமை

என்ற உட்தலைப்புகளில் விளங்குகிறது இவ்வியல்.

போரில் வெற்றி பெற்ற அரசர் தம்மால் தோற்கடிக்கப்பெற்றவரின் நாட்டின் பொருள்களோடு பெண்களைத் தம்மோடு கொண்டு வந்தனர் அப்பெண்களே ***'கொண்டி மகளிர்'*** எனப்பட்டனர். அப்பெண்கள் பட்டினப்பாலையில் அரசனால் அழைத்து வரப்பெற்று ஊர்ப் பொது அம்பலத்தில் தங்கும் உரிமைப் பெற்றுப் பணி செய்தமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. .

மதுரைக்காஞ்சியில் கொண்டி மகளிரைப் ***'பரத்தையர்'*** என்றே சுட்டிக் காட்டுகிறார் மாங்குடிமருதனார். பரத்தையர்கள் சேரியில் வாழ்பவர்களாகவும் ஆண்களைக் கவர தம்மை ஒப்பனை செய்து கொள்பவர்களாகவும் இருந்துள்ளனர். பரத்தையர்கள் பொருளுக்காக வாழும் பெண்களாக உள்ளதை இவ்வியல் எடுத்துரைக்கிறது.

***முடிவுரை:***

சங்க இலக்கியங்களில் பரத்தமை பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டு அதற்கான காரணங்கள் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன. அக்காலச் சமுதாயத்தில் பரத்தமை போற்றப்பட்டதன் காரணமும் சமூகப் பார்வையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இயல் ஒன்று முதல் ஆறு வரையிலான கருத்துகள் முடிவுரையில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

துணை நூற்பட்டியல் அகர வரிசையில் தரப்பட்டுள்ளது.

# இயல் - ஒன்று

## பொருளடக்கம்

# இயல் - ஒன்று

# இலக்கணமும் பரத்தமையும்

### *1.0 முன்னுரை:*

அன்பின் வழிப்பட்ட ஐவகை நிலத்திலும் பரத்தையர் வாழ்ந்தனர். அப்பரத்தையரையும் அவர்களின் இயல்பையும் தொல்காப்பியமும், நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கமும் விளக்குகின்றன. அதன் அடிப்படையில் பரத்தமை பற்றிய இலக்கண நெறிகள் இவ்வியலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

### *1.1 பரத்தமை ஒரு விளக்கம்:*

அன்பின் ஐந்திணை எனத் தொல்காப்பியர் வரையறுத்ததன் அடிப்படையில் சங்ககால மக்களின் வாழ்வியல் அமைந்திருந்தது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலங்கள் பிரிக்கப்பட்டு அவற்றிற்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் வகைப்படுத்தப்பட்டு உருவாக்கப்பட்டமையே சங்க இலக்கியங்கள். மானுட வளர்ச்சியின் பிரதிபலிப்பாக விளங்கின சங்க நூல்கள். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்று தொகுக்கப்பட்ட அந்நூல்களில் புலவர்கள் சங்க சமூகத்தைக் காட்டியுள்ளனர். இப்பாடல்கள் அகம், புறம் எனப் பகுக்கப்பட்டுள்ளன. அகம் என்பது களவு, கற்பு என்ற இருவகை அக வாழ்வையும், புறம் என்பது வீரம், கொடை, கல்வி போன்ற புறச் செய்திகளையும் விளக்குவதாகும். ***‘சங்க இலக்கியம்’*** சங்கச் சமுதாய மக்களின் அரசியல், பொருளாதாரம், வரலாறு பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றைக் காட்டும் ஆவணமாகும். சங்க மக்களின் வாழ்வியலில் தலைவன் தலைவியரே முதன்மையானவர்கள். இவர்களின் அகவாழ்வில் ***‘பரத்தை’*** என்னும் பெண் கதாபாத்திரமும் உலாவருகிறாள். சங்க அகவாழ்வில் குலமகளாகத் தலைவி விளங்கப் பரத்தையரும் பங்கு பெறுகின்றனர். ***“கற்பு x பரத்தமை என்னும் இருமை முரண்களில் பரத்தமை பெற்றிருந்த சமுதாய இருப்பை”*** [1] சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது.

குலமகளைப் போலின்றித் தம்விருப்பம் போல் பொருளே குறியாகக் கொண்டும் உடலை விற்றும் வாழ்ந்த பெண்டிர், பரத்தையர், பொருட்

பெண்டிர், விலைமகளிர், கணிகையர் என அழைக்கப்பட்டனர். பரத்தையர் என்னும் பிரிவினரைச் சங்க காலத்தில் ஆடவர் நாடிச் சென்றதால் தலைவன் தலைவியரின் இயல்பை விளக்கும்போது பரத்தையர்பற்றிப் பாடவேண்டிய நிலை சங்ககாலத்தில் உருவாகி யிருக்கிறது.

*"பரத்தையர் என்பதற்கு அயலார் என்று பொருள் கொள்ளப் பெற்றுள்ளது. குற+ஸ்திரி – குறத்தி என்றாற் போலப் பர+ஸ்திரி – பரத்தி, பரத்தை என்றாயிற்று எனப் பரத்தை என்ற சொல்லிற்கு விளக்கம் கூறப்பெற்றுள்ளது. (க.ப.அறவாணன்) பரத்தை என்பது தமிழ் வேர்ச் சொல் அன்று என இறையனார் களவியல் உரை கூறும். பிற நாட்டிலிருந்து கொணரப்பட்ட மகளிர் பரத்தையாக்கப்பட்டனர்"* [2] என்கிறார் சிலம்பு நா.செல்வராசு.

*"தலைவனுடைய பாலியல் தேவையை நிறைவு செய்பவளாக வரும் பரத்தையின் இடம் அக இலக்கிய மரபில் முக்கியமான ஒன்று. தலைவியைப் போன்று சமூகப் பாதுகாப்பெதுவும் இவளுக்குக் கிடையாது. இது ஒரு வகையில் பலவீனமாக இருந்தாலும் கூட, அதுவே அவளுக்குப் பலமானதுமாகும். தலைவியைப் போன்று அச்சம், மடம், நாணம் போன்ற ஆணாதிக்கக் கருத்தியல்களின் அழுத்தம் பரத்தைக்குக் கிடையாது. பரத்தை சுயமாகப் பொருளீட்டிப் பிழைப்பவள். எனவே சுதந்திரமானவளாக வாழ்கிறாள். தலைவி பயணிக்கும் திசைக்கு நேரெதிர் திசையில் இவளுடைய பயணம் அமைகிறது. தலைவி தலைவனுடைய விரலசைவை நோக்கிக் காத்துக் கிடக்க, இவள் தலைவனை நோக்கிக் குரலுயர்த்திப் பேசுகிறாள். தாய்மை, தியாகம், பொறுப்பு, அன்பு, மென்மை என்று ஆணாதிக்கம் பெண்ணின்மேல் ஏற்றி வைத்துள்ள அனைத்து ஒழுக்க விதிகளையும் அதிரடியாய்க் கொட்டிக் கவிழ்க்கிறாள். தலைவனை எதிர்த்துப் பேசுதல், குடும்ப நிறுவனத்தைத் தன் பிழைப்புக்காகச் சாராமை, கலைகளைக் கற்று அறிவு நுட்பத்துடன் செயலாற்றுதல் என்று செயலூக்கமான பாத்திரமாக அக இலக்கிய மரபில் பரத்தை படைக்கப்பட்டுள்ளாள்"* [3] என்று பரத்தைப் படைப்பிற்கான காரணத்தை அ.கா.அழகர்சாமி எடுத்துரைக்கிறார்.

***"விருப்பு வெறுப்பின்றிக் கண்டவாறு பணத்திற்காகவோ பொருளுக்காகவோ உடலுறவு கொள்ளுகின்ற செயல் பரத்தமை (Prostitution) எனப்படும். உலகத்தின் பழமையான தொழில் எனச் சொல்லப்படும். இப்பரத்தைத் தொழிலானது கோட்பாட்டளவில் வழக்கில் இல்லாவிட்டாலும் காலம் காலமாகச் செழித்து வளர்ந்து உள்ளது. ஒரு பெண் பணத்திற்காகத் தன்னுடைய உடலை ஆண் மகனுக்கு விற்பதைப் பரத்தமை என்ற சொல் குறிக்கிறது"*** [4] என்று பரத்தைக்கு விளக்கம் தருகிறது வாழ்வியற் களஞ்சியம்.

சங்க காலச் சமுதாயத்தில் தலைவன் பரத்தையரிடம் இன்பங் கொள்வதைத் தவறாகச் சுட்டிக் கூறாமல் இயல்பாக நடந்த நிகழ்ச்சியாகப் புலவர்கள் காட்டியதாகவே கருத முடிகிறது.

### *1.2 தொல்காப்பியம் காட்டும் கற்பு நெறி:*

***"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***
***அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்..."*** *(தொல்.பொருள்.89)*

என்னும் நூற்பாவழி இன்பத்தை முதலிலும் பொருளை இரண்டாமிடத்திலும், அறத்தை மூன்றாமிடத்திலும் தொல்காப்பியர் வைத்திருப்பது காண முடிகிறது. இதன்வழி முதலில் இன்பம் அனுபவியுங்கள் அறத்தைச் செய்யுங்கள் என்பதே அவரது எண்ணம் என்பது திண்ணம்.

தலைவனும் தலைவியும் இன்பம் நுகர்ந்து இல்லறம் நிகழ்த்துதலே கற்பொழுக்கம் ஆகும். இதுவே இயற்கை வாழ்வியல் ஆகும். இந்த இயற்கை வாழ்வியலைத் திருமணத்திற்கு முந்திய களவுவாழ்க்கை, திருமணத்திற்குப் பிந்தைய கற்புவாழ்க்கை என இரு நிலைகளாகத் தொல்காப்பியம் பிரித்துக் காட்டுகிறது.

கற்புவாழ்க்கை என்பது இல்லறமாகும். தலைவன் தலைவி இருவரும் கருத்தொருமித்து வாழும் இன்ப வாழ்க்கையாகும். இது பெரும்பாலும் இல்லறம் நடத்தும் குலமகளிரின் வாழ்க்கை நிலையாகும். இவர்களைத் தவிர்த்து அக்காலத்தில் களவொழுக்கம் ஒழுகாமலும், மணம் செய்து கொள்ளாமலும் காமத்திற்காக ஆடவருடன் கூடிவாழும் பெண்டீர் சிலரும்

வாழ்ந்து வந்தனர் என்பது அறியமுடிகிறது. அவர்களைப் பரத்தையர் என உரையாசிரியர்கள் மொழிகின்றனர். ஐந்திணை ஒழுக்கத்தைப் புலப்படுத்தும் தொல்காப்பியர் அக்காலப் பரத்தமை ஒழுக்கத்தையும் புலப்படுத்துகின்றார்.

மனை வாழ்க்கையில் ஒருவன் தன் மனையாளை விட்டுப் பிரிந்திருக்கும் நிலை சிற்சில சமயங்களில் நேரிடுகின்றது. இவ்வாறு ஒரு தலைவன் கற்பு வாழ்க்கையில் பிரியும் பிரிவினை அறுவகைப்படுத்துகிறார் தொல்காப்பியர்.

### *1.3 பிரிவின் வகை:*

***"ஓதல் பகையே தூதிவை பிரிவே"*** *(தொல்.பொருள்-27)*

எனத் தொல்காப்பியர் மூன்று பிரிவுகளையே முதன்மைப்படுத்துகிறார். இவற்றோடு, காவற்பிரிவு, பொருட்பிரிவு எனப் பிரிவை ஐந்தாக வகைமைப்படுத்தியமையைக் ***"காவல் பொருட் பிரிவு எனப் பிற நூலகத்து ஓதப்பட்ட இருவகைப் பிரிவும் ஈண்டு ஓதப்பட்டதென்று கொள்க"***[5] என்று இளம்பூரணர் உரைப்பதைக் காணமுடிகிறது. *இக்காவற் பிரிவைத்*

***"தானே சேறலுந் தன்னொடு சிவணி***
***ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே"*** *(தொல்.பொருள்.29)*

என்னும் நூற்பாவழி கூறுதலை அறிய முடிகிறது. ஐவகைப்பிரிவினையும் அகத்திணையியலில் கூறும் தொல்காப்பியர் கற்பியலில் மீண்டும் இவ் ஐவகையுடன் '***பரத்தையர் பிரிவு***' என்ற ஒன்றையும் விவரித்தமை நோக்கத்தக்கதாகும்.

அகத்திணையியலில் கூறாத பரத்தையர் பிரிவைக் கற்பியலில் கூறிய சிறப்பும் உணரத்தக்கது. இப்படியாகத் தொல்காப்பியர் அகத்திணையியலில் இப்பிரிவை ஓரங்கட்டியதன் நுட்பத்தைப் பிற்கால இலக்கண நூலார் பொதுவாகவே எடுத்துக்கொண்டு '***பிரிவு ஆறு***' எனக் கூறுகின்றனர்.

### *1.4 பரத்தையர் பிரிவு:*

*காமம் காரணமாகப் பரத்தையர்பால் பிரிதல் வழுவாம்'* என்னுமிடத்தில் வழுவமைதியாகக் காணப்படுதலைத் தொல்காப்பியர் விளக்குகின்றார்.

***"பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே***
***நிலத்திரி பின்ற.: தென்மனார் புலவர்"*** *(தொல்.பொருள்.220)*

என்று தொல்காப்பியர் விளக்குகிறார். இதனின்று ஏனைய ஐவகைப் பிரிவைப் போல் '***பரத்தையர் பிரிவும்***' குறிப்பிடத்தக்கது என்பது புலனாகிறது.

***1.5 பூப்பும் பரத்தமையும்:***

தலைவிக்குப் பூப்புத் தோன்றி முன் ஆறு நாள்களும் பின் ஈறாறு நாள்களும் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்துசென்று தங்கார் என்பதனைப்

***"பூப்பின் புறப்பா டீரறு நாளும்***
***நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்***
***பரத்தையிற் பிரிந்த காலை யான"*** *(தொல்.பொருள்.185)*

என இலக்கணம் வகுத்துள்ளார் தொல்காப்பியர்.

பூப்பு என்பது '***பெண் வீட்டிற்கு விலக்கான***' காலம் ***"பரத்தையர் சேரியா னாயினும் பூத்தோன்றி மூன்றுநாள் கழித்த பின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று"*** [6] என்பார் இளம்பூரணர். ***"பூப்புத் தோன்றிய மூன்று நாளும் கூட்டமின்றி அணுகவிருந்து அதன் பின்னர்ப் பன்னிரண்டு நாளும் கூடியுறைப என்பார் இனியர்."*** [7] பூப்புப் புறப்பட்ட நாளிலிருந்து மூன்றாம் நாள் தலைவன் பரத்தையிற் பிரிந்து தலைவியைச் சேருதலால் தலைவியின் வருத்தம் அகலும் எனச் சுட்டிக்காண்பிக்கப்பட்டுள்ளது. மேலும், இவை மகப்பேறு காலத்திற்கும் உரியன எனத் தெளிவுபடுத்துகிறார் தொல்காப்பியர். இதன்வழி ***"பெண்களின் உடலியல் கூறுபாட்டையும், உளவியல் கூறுபாட்டையும்"*** [8] தொல்காப்பியர் எடுத்துரைப்பதாக கி.இராசா தம் உரையில் சுட்டுகிறார்.

தலைவன் பரத்தையின் வீட்டில் இருப்பான். தலைவி வீட்டில் பூப்படைந்து விடுகிறாள் என்றால் அந்தச் செய்தி பரத்தையின் வீட்டிலிருக்கும் தலைவனுக்குச் சொல்லப்படும். ***"சேடிகள் சிவப்பு ஆடைகள் அணிந்து***

***கொள்வர். செப்புப் பாலிகையுள் செம்பூவும் நீரும் எடுத்துச் சென்று தலைவன்மீது தெளித்துத் தலைவி பூப்படைந்துவிட்ட செய்தியைச் சொல்லுவர். உடனே தலைவன் காலம் தாழ்த்தாது தலைவி இருக்குமிடம் வருவான். பூப்படைந்த மூன்று நாள்களும் அவள் அருகிலேயே இருப்பான். பின் மஞ்சள் நீராட்டு முடிந்த பிறகு நான்காம் நாள் முதல் பன்னிரெண்டாம் நாள் வரையில் அவளோடு கூடி மெய்யுறுபுணர்ச்சி மேற்கொள்வான். அதே போலத் தலைவனுக்குக் குழந்தை பிறந்தால் அந்தச் செய்தியைப் பரத்தையுடன் இருக்கும் தலைவனுக்குச் சேடிகள் வெள்ளை ஆடை அணிந்து தெரிவிக்கும் வழக்கமும் இருந்தது"***[9] என விளக்குகிறார் குடந்தையன்.

***"அயல்மனை பிரிவயற் சேரியின் அகற்சி,***
***புறநகர்ப் போக்கிவை புரவலற் குரிய***
***பரத்தையிற் பிரியும் பருவத் தான"*** *(அகப்.63)*

என நாற்கவிராசர் பரத்தையிற் பிரிவை அகத்திணையியலில் வகைப் படுத்திக் காட்டுகிறார். அயன்மனைப் பிரிவு, அயல்சேரியின் பிரிவு, புறநகர்ப் போக்கு என்ற பிரிவுகள் பரத்தையின் பொருட்டுப் பிரிவும் தலைமகனுக்கு உரியன. ***"தன் மனம் விரும்பும் காமக்கிழத்தியர் காரணமாகத் தலைவன் அருகில் இருக்கும் மனையின்கண் பிரிவான். இது அயல்மனைப் பிரிவு எனப்படும். இரண்டாவதாகத் திருமணம் செய்து கொண்ட பெதும்பைப் பருவக் கிழத்தியும், காதற் பரத்தையும் இனிய தன்மை உடைய விழாவும் காரணமாகத் தலைவன் அருகில் இருக்கும் சேரியின்கண்ணே பிரிவான். இது அயல்சேரிப் பிரிவு எனப்படும். புதியவளாகிய பரத்தையைத் தேர்மேல் ஏற்றிக் கொண்டு, இளமரங்கள் நிறைந்த சோலையின்கண் விளையாடுவதற்கும், புனல் (நீர்) விளையாடுபவதற்கும் தலைவன் நகரை விட்டு வெளியே செல்லுவான். இது புறநகர்ப் போக்கு எனப்படும்"***[10]
என்று சுதமதி விளக்கம் தருகிறார்.

### *1.6 பரத்தையர் வகைகள்:*

தலைமகளின் ஊடலுக்குப் பெரிதும் காரணமாக அமையும் பிரிவு பரத்தையர் பிரிவே ஆகும். பரத்தையர் அகவாழ்வின் ஓர் அங்கமாகக் கருதப்பட்டனர். களவொழுக்கம் ஒழுகாமலும், மணம் செய்து

கொள்ளாமலும் காமத்திற்காக ஆடவருடன் கூடிவாழும் பெண்டிரைக், ***‘காமக்கிழத்தியர், காதற்பரத்தையர், சேரிப் பரத்தையர்’*** என மூன்று பிரிவுகளாகக் காட்டுகிறார் இளம்பூரணர்.

தொல்காப்பியர் பரத்தையர் பிரிவைத் தனியொரு பிரிவாகக் குறிப்பிடவில்லை எனினும் கூற்று நிகழ்தற்குரிய இடங்களைக் கூறுகிறார். அதனைப்

***“பரத்தையின் அகற்சியிற் பிரிந்தோட் குறுகி***
***இரத்தலுந் தெளித்தலும் எனஇரு வகையோடு***
***உரைத்திற நாட்டம் கிழவோன் மேன”*** *(தொல்.பொருள்.44:22-24)*

என அகத்திணையியலிலும்,

***“தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி***
***எங்கையர்க் குரையென இரத்தற் கண்ணுஞ்”*** *(தொல்.பொருள்.145:15-16)*

எனத் தலைவி கூற்றுநிகழும் இடங்களைச் சுட்டிக்காட்டும் இடத்திலும் பரத்தையர்பிரிவை உணர்த்துகிறார். மேலும்,

***“கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி***
***அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்***
***காதல் எங்கையர் காணின் நன்றென***
***மாதர் சான்ற வகையின் கண்ணுந்***
***தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை***
***மாயப் பரத்தை உள்ளிய வழியுந்”*** *(தொல்.பொருள்.145:28-31)*

***“காமக் கிழத்தி நலம்பா ராட்டிய***
***தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்***
***கொடுமை யொழுக்கத்துத் தோழிக் குரியவை***
***வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக்***
***காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்”***

*(தொல்.பொருள்.145:36-40)*

எனக் கற்பின்கண் தலைவி கூற்றிற்கான அடிப்படைக் காரணியாகப் பரத்தையர்பிரிவு காட்டப்பட்டுள்ளது. இந்தக் கூற்றுகளினின்று, பல்வேறு

பரத்தையரிடம் செல்வது ஆணின் இயல்பாக இருந்தது என்பது உணர முடிகிறது. மேலும், பரத்தையர் உறவு பற்றி வரும் ***'கொடுமை ஒழுக்கம், பேணா ஒழுக்கம், கிழவோன் கொடுமை, பிழைத்துவந்த கிழவன்'*** எனும் சொற்கள் பெண்டிரின் மனநிலையின் வெளிப்பாடுகளாக அமைந்து இருந்தன எனவும் அறிய முடிகிறது. இப்பிரிவினைப்

***"பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி***
***மடத்தகு கிழமை உடைமை யானும்***
***அன்பிலை கொடியை என்றலும் உரியள்"*** *(தொல்.பொருள்.156)*

எனத் தோழிக்குரிய மரபாகக் கருதிப் பரத்தமையை அவள் மறுத்துரைப்பதும் அறிய முடிகிறது.

தலைவனிடம் ***'நீ தலைவிபால் அன்பு உடையவனாய் இல்லை, அவளுக்குக் கொடுமை புரிகின்றாய்'*** என்று கூறிப் பரத்தையிடமிருந்து தலைவனை நீக்கும் வழியையும் மேற்கொள்கிறாள் தோழி.

***1.7 நம்பி அகப்பொருள் காட்டும் பரத்தமை:***

இளம்பூரணர் கூறிய காமக்கிழத்தியர், காதற் பரத்தையர், சேரிப்பரத்தையர் என்ற மூன்று பிரிவினரை அகப்பொருளும் வரையறுப்பதைக்

***"காதல் பரத்தையர், காமக் கிழத்தியர்***
***பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென்று***
***றன்னவர் உரியர் அவையிரண் டிற்கும்"*** *( அகப்.59 )*

என்னும் நூற்பாவழி அறியமுடிகிறது.

***1.8 காமக்கிழத்தியர்:***

***"ஒருவர்க்கே உரிமை பூண்டு வரும் குலப்பரத்தையரின் மகளிர் ஆவார். அவர் காமங் காரணமாகத் தலைமகனால் மணந்து கொள்ளப்பட்டவர் ஆவார்***" [11] என்பதற்கு

***"ஒருவன் தனக்கே உரிமை பூண்டு***
***வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்***
***காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்"*** *(அகப்.113 )*

என அகப்பொருளில் நாற்கவிராச நம்பி இலக்கணம் வகுக்கிறார். இவர்கள் தக்கபருவத்தே காதலுற்று முறையாகக் களவொழுக்கம் ஒழுகி மணம்செய்து கொள்ளாமலும் அல்லது களவொழுக்கம் ஒழுகாமலும் காமத்திற்காக மனைவியர் போல இருந்து வருபவர். மேலும், ***"தலைவனது செல்வ நிலையறிந்து வாழ்க்கை நடத்தும் குணமுடையவராகித் தலைவன்மீது அன்பு பூண்டு வாழ்க்கை நடத்தும் அயல் மகளிர்"*** [12] என்றும் குறிப்பிடப்படுவர்.

இவர்கள் தலைவனை மணஞ்செய்து கொள்ளாது தமக்கு விருப்பமானவரோடிருந்து மனைவியர் போலவே இல்லறம் நடத்தி வருபவர் என்பதால் '***இற்பரத்தையர்***' எனவும் அழைக்கப்பட்டமையைத் ***"தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்"*** (தொல்.பொருள்.107:55) என்னும் நூற்பாவழி அறியமுடிகிறது. இவ்வகையினர் தலைவிக்கு முன்னரே தலைவனுக்குக் காமக்கிழத்தியாக இருந்தமையை உணரமுடிகின்றது.

### *1.8.1 காமக்கிழத்தியர் வகைகள்:*

***"புல்லுதல் மயக்கம் புலவிக் கண்ணும்***
***இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்***
***பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பினும்***
***மறையின் வந்த மனையோள் செய்வினை***
***பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்***
***காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையில்***
***தாய்போற் கழறித் தழீஇய மனைவியைக்***
***காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணும்***
***இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழையணிந்து***
***பின்னை வந்த வாயிற் கண்ணும்***
***மனையோ ளொத்தலின் தன்னோர் அன்னோர்***
***மிகையெனக் குறித்த கொள்கைக் கண்ணும்***
***எண்ணிய பண்ணையென் றிவற்றொடு பிறவும்***
***கண்ணிய காமக் கிழத்தியர் மேன"*** *(தொல்.பொருள்.149)*

என்ற நூற்பாவழித் தொல்காப்பியர் குறிப்பிடும் காமக்கிழத்தியரை ''***ஒத்த கிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டோர்***''[13] என மூன்று வகையாகப் பிரிக்கிறார் இளம்பூரணர்.

***"ஆடலும் பாடலும் வல்லவராகி, அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெ..கி ஒருவர்மாட்டும் தங்காதார்"*** [14] எனப் பரத்தையர் என்பதற்கு விளக்கம் தருகிறார் இளம்பூரணர்.

நச்சினார்க்கினியர் ***"கண்ணிய காமக்கிழத்தி எனவே கண்ணாத காமக்கிழத்தியரும் உளராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையவராகி வரும் சேரிப் பரத்தையரும் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவலபாங்கினரும் பிறருமாம***'' [15] எனக் காமக்கிழத்தியரை வகைப்படுத்து கின்றார்.

### *1.8.1.1 ஒத்த கிழத்தியார்:*

தலைவன் திருமணம் செய்துகொண்ட பின்னும் காமம் காரணமாகத் தம் குலம் சார்ந்த மற்றொருப் பெண்ணை வரைந்து கொண்டு வாழ்வதனை, ''***ஒத்த கிழத்தியர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல்"*** [16] என்று இளம்பூரணர் விளக்கம் தருகிறார்.

### *1.8.1.2 இழிந்த கிழத்தியர்:*

அரசர், வணிகர், வேளாளர் ஆகியோரால் அந்தணர்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட பெண்களும் மற்றும் வணிகர், வேளாளரால் அரசனுக்குத் காணிக்கையாகக் கொடுக்கப்பட்ட பெண்களும் ***"இழிந்த கிழத்தியர்கள்"*** எனப்படுவதை, ***"அந்தணர்க்கு அரசகுலத்தினும் வணிககுலத்தினும் வேளாண் குலத்திலும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனையிரண்டு குலத்தினுங் கொடுக்கப்பட்டாரும்"*** [17] என்று இளம்பூரணர் விளக்கம் தருகிறார்.

### *1.8.1.3 வரையப்பட்டோர்:*

செல்வந்தர்களால் கன்னியாக இருக்கும் போதே வரையப்பட்டவர்கள், கன்னித்தன்மை கழிந்த பிறகு வரையப்பட்டவர்கள் என்ற வகையினரும்

***“வரையப்பட்டார்”*** எனப்பட்டதனைச் “***செல்வராயினார் கணிகைக் குலத்தினுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரைந்துகோடல் அவர் கன்னியில் வரையப்பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இருவகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக் கிழத்தியர்பாற்பட்டனர்”*** [18] என்று இளம்பூரணர் விளக்கம் தருகிறார்.

***“தொழில் ரீதியாக அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் இவர்களுள் யார்யார்ப் பெண்களை மனைவி அல்லாத காமக்கிழத்தியாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற விதிகளும் வரையறுக்கப்பட்டுள்ளன”*** [19] என்று க.அ.ஜோதிராணி காமக்கிழத்திக்கு விளக்கம் தருகிறார்.

***1.8.2 காதற் பரத்தையர்:***

பரத்தையரில் மேற்கூறப்பட்டாரைத் தவிர காதற் பரத்தையர் என்ற ஒரு பிரிவும் உண்டு என்கிறார் நாற்கவிராச நம்பி. இவர்களைப் பொருளினால் அச்சுறுத்தி அடையாமல் அன்பினால் அடைந்து கூடித் தலைமகன் இன்புற்றான். இது கந்தர்வ மணத்தைப் போன்றதாகும்.

***“யாரையும் நயவா இயல்பிற் சிறந்த***
***சேரிப் பரத்தையர் மகளி ராகிக்***
***காதலிற் புனர்வோர் காதற் பரத்தையர்”*** *(அகப்.114)*

என்னும் நூற்பாவழியாகக் காதற்பரத்தையரை நாற்கவிராச நம்பி எடுத்துரைக்கின்றார்.

***“காதற்பரத்தையர் களவிற் குரியர்” (அகப்.60)***

என்பதன்வழி ஒழுக்கத்திற்கு உரியவர் காதற்பரத்தையரே என நாற்கவிராச நம்பி கூறுகிறார்.

காதற்பரத்தையர் என்போர், ***“யாவரையும் விரும்பாத இயல்பினால் மிக்க சேரிப்பரத்தையருடைய மகளிராய்த் தம் அன்பினால் தலைமகனோடு கூடுவார்”*** [20] என்பது உணர முடிகிறது. ***“இவர்கள் தலைவன் தலைவிக்கு இடையே உள்ள ஊடலைத் தீர்த்து வைக்க முயன்றதுண்டு. வயதில் முதிர்ந்தவள் எனில் தலைவிக்கு (தலைவனுக்கு அல்ல) அறிவுரை கூறித் தலைவனோடு சேர்த்து வைப்பர்”*** [21] என்றுரைக்கிறார் குடந்தையன்.

***“காதற்பரத்தையர் தலைவனிடம் அன்பு கொண்டு இன்பந்துய்ப்பவர். ஆனால் காமக்கிழத்தியர் போலத் தலைவனோடு உடனிருந்து வாழ்க்கை நடத்தாமல் தனிவாழ்க்கை வாழ்பவர். தலைவன் குடும்பத்திற்கும் இவர்க்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இன்று ஏதாவது ஒரு வேலையில் இருக்கும் ஒருசில பெண்கள் தமக்குப் பிடித்த ஒரு ஆடவரை வரப் போக வைத்துக் கொண்டிருப்பது போன்றது இது. அதாவது இன்றைய “கம்பானியன்” போன்றவர்கள். இவர் தலைவனை நம்பி வாழாமல் தாம் தேடும் பொருளால் தன்னுரிமையுடன் வாழ்பவர்”*** [22] என்று விளக்கம் தருகிறார் சி.எஸ்.முருகேசன்.

**1.8.3 சேரிப்பரத்தையர்:**

சேரிப்பரத்தையரைப் போலப் பலர்க்கும் உரியரன்றி ஒருவற்கே உரிமை பூண்டு வரும் குலப்பரத்தை எனக் காமக்கிழத்தியர்க்கு இலக்கணம் கூறுவதினின்று தனியாகச் சேரிப்பரத்தையருக்கு இலக்கணம் வரையறுக்கவில்லை என்பது புலனாகிறது. இதனின்று சேரிப் பரத்தை யானவள் பலருக்கும் உரியவள் என்று நாற்கவிராச நம்பி கூறுகிறார்.

***“இத்தகையப் பெண்கள் ஒருவரைத் தலைவனாகக் கொள்ளாமல், விரும்பியவரைக் கூடி வாழ்பவராவர். இவர்கள் தலைவன்மீது அன்பின்றித் தலைவன் கொடுக்கும் பொருள்மீது அன்புடையவர். இவர்கள் ஒரு சில பெருஞ்செல்வந்தரால் உண்டாக்கப்பட்டு, நாளடைவில் தாமாகவே பெருகி ஒரு தனிக்கூட்டமாக ஆனவர் போலும்”*** [23] என கருதுகிறார் சி.எஸ். முருகேசன்.

மேலும், ***“அத்தொழிலால் வாழ்க்கை நடத்திய பரத்தையர் எந்த ஒரு தனிப்புரவலனுடனும் தனியன்பு கொண்டவரல்லர். அவர்களை சேரிப்பரத்தையர் அல்லது காமக்கணிகையர் என்றனர்”*** [24] என்று ந.சுப்பிரமண்யன் கூறுகிறார்.

இப்பகுப்புகள் தொல்காப்பியரால் கூறப்பெறவில்லை. உரையா சிரியர்கள் தம் காலத்துச் சமுதாய பரத்தமையை ஒட்டிக் கூறியுள்ளனர்

என்பதும், அவர்களுக்கு இலக்கணம் வகுக்கவில்லை என்பதும் புலனாகின்றன.

### *1.9 சாத்திரங்கள் காட்டும் பரத்தமை:*

தொல்காப்பியர் பரத்தையர் பிரிவுக்கு இலக்கணம் கூறியுள்ளார். எனினும் பரத்தைக்கென தனி இலக்கணம் கூறவில்லை காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை என வகைமை கூறி அவர்களின் குணாதிசயங்களை, இயல்புகளை நூற்பாவழி (தொல்.பொருள்:149) விளக்குகிறார். வள்ளுவர் பரத்தமை ஒழுக்கத்தைக் கூடா ஒழுக்கம் என்கிறார். குறளில் காணப்படும் ***'வரைவின் மகளிர், பிறனில் விழையாமை, பெண்வழிச் சேறல்'*** போன்ற அதிகாரங்கள் பகுக்கப்பட்டிருப்பதால் அச்சமுதாயத்தில் பரத்தமை ஒழுக்கம் இருந்தமை அறிய முடிகிறது.

தொல்காப்பியர், திருவள்ளுவர் என அனைத்துப் புலவர்களும் இவற்றைக் கூடா ஒழுக்கம், பேணா ஒழுக்கம் எனப் பலவாறு கூறியிருந்தாலும் இவ்வொழுக்கத்தைத் தடுக்க முடியவில்லை என்பது தெளிவு.

மனுவின் மனுதர்ம சாத்திரத்திலும் சாணக்கியரின் அர்த்த சாத்திரத்திலும் இப்பரத்தமைக்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது.

***"மாதர்க்குப் பிறவியைத் தூயதாக்கும் சமஸ்காரங்கள் மந்திரப் பூர்வமாகச் செய்வித்தல் யாதுமின்று". "இவர்களுக்கு வெள்ளை உள்ளமும் இல்லை" "பாவம் நீக்கும் மந்திர உபதேசமும் கிடையாது. எனவே, பொய்யைப் போல் மாசு வடிவினராக மாதர் இயன்றிருக்கின்றனர்" "பெரும்பாலும் மாதற் கற்பிலார் என்றே பெரிதும் பல நூல்களிலும் கூறப்பட்டிருக்கிறது"*** [25] என மனு கூறுகிறார்.

மேலும் மனு, ***"தங்கள் அலங்காரத்தால் மனிதரைக் கவரும் தன்மை பெண்களின் இயல்பாகையால், அறிந்தோர் பெண்களிடம் கவனக் குறைவாக நடந்துகொள்ள மாட்டார்கள்"*** [26] எனப் பரத்தையரின் இயல்புகளைக் கூறுகிறார்.

***“புலன்களை அடக்கியவனாயினும், அறிவிலியாயினும் அவர்களைத் தங்களது தொடர்பால் காமக் குரோதமுள்ளவனாகச் செய்வர் மாதர்”*** [27] என மனு மாதர்களின் இயல்புகளைக் குறிப்பிடுகிறார்.

***“தாழ்ந்த குலப் பெண்ணுடன் ஒரே படுக்கையில் உறவு கொண்டு சமமாய்ப் படுக்கும் அந்தணர்களுக்கு நரகமே கிட்டும்”*** [28] என மனுதர்ம சாத்திரத்தில் கூறப்பட்டுள்ளமையும் அறிய முடிகிறது.

தாழ்ந்த சாதிப் பெண்ணின் அதர பானமும் அவளது மூச்சுக் காற்றும் மேலே படுதல் தனக்கும் அவளிடத்துப் பிறந்த குழந்தைக்கும் கழுவாயே இல்லாத பாவங்களாகும் எனப் பரத்தமை ஒழுக்கத்தை மனுதர்ம சாத்திரம் சாடுகிறது.

***“இழி நடத்தை, பரத்தையர் நட்பு, நற்குணமின்மை, இவற்றையுடையவனாயினும், கற்பினளான பெண் தம் கணவனைத் தெய்வமாகப் பேணுக”*** [29] என்பதனையும் மனுதர்ம சாத்திரம் கூறுவதினின்று அறியமுடிகிறது.

உலகில் மழையின்றி நாசமடைவது பிறன்மனையைச் சேர்தலாலே ஆகும் என மனுதர்ம சாத்திரம் விவரிக்கிறது. பிறன் மனையை நாடக்கூடாது என்னும் சாத்திரம் சமூகத்தில் பரத்தமை இருக்கக் கூடாதென்று எங்கும் கூறவில்லை. பெண்களை இழிபிறவிகள், பாவ பிறவிகள் எனக்கூறும் சாத்திரம் ஆண்களின் இழிசெயலைக் கண்டிக்கவும் இல்லை. இதனால் சாத்திரம் பேசிய சமுதாயத்திலும் ஆணாதிக்கம் மேலோங்கி இருந்தது என்று மனு பறைசாற்றுகிறது.

மனுவில், ***“பிறன்மனையைச் சேர்வதால் உலகில் வருணக் கலப்பு உண்டாகிறது. அதனால், தர்மக் காரியங்கள் நடவாமல் உலகில் மழையின்றி நாசமடைகின்றது”*** [30] என்று கூறப்பட்டுள்ள இக்கூற்றால் ஆணின் ஒழுக்கமும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளமை அறியமுடிகிறது. மேலும், ஆண்களின் ஒழுக்கம் கெடுவதற்குப் பரத்தைப் பெண்களும் காரணம் என்கிறது மனுதர்ம சாத்திரம்.

***“ஒரு ஆடவன் பிறன் மனைவியை நாடக்கூடாது என்பதற்கு வருணக் கலப்பு ஏற்பட்டுவிடக் கூடாதே என்றே அஞ்சுவது போல் சாத்திரம் பேசுகிறது”***[31] என்கிறார் பா.வீரமணி.

***“மனு, சாதியையும் தீண்டாமையையும் ஆதரித்து நிற்பதோடு அதற்குச் சட்ட வலுவையும் தருகிறார். பிரான்சிஸ் பாஸ்டில் சிறை எவ்வாறு கொடுங்கோன்மையின் உருவகமாக இருந்ததோ, அவ்வாறே இந்து வாழ்க்கை முறைக்கும், சிந்தனைப் போக்குக்கும் அடிநாதமாக இருந்த ஏற்றத்தாழ்வின் உருவகமாக இருந்தது மனு ஸ்மிருதி என்று டாக்டர் அம்பேத்கார் கூறுவதும் ஒப்பு நோக்கத்தக்கது”*** [32] என்கிறார் பா.வீரமணி.

சாணக்கியரின் அர்த்த சாத்திரத்திலும் பரத்தமை பேசப்பட்டுள்ளது. சாணக்கியரோ, மனுவைப்போல் பரத்தயரையோ, மகளிரையோ இழிவாகப்பேசவில்லை. மாறாக, ***‘வரைவின் மகளிரை நடத்தும் தலைவன்’*** என்றே அதிகாரம் வகுத்துள்ளார். தனது நாற்பத்தெட்டாவது அதிகாரத்தில் வரைவின் மகளிரான பரத்தையர் சேவை நாட்டிற்குத் தேவை என்னும் நோக்கில் படைத்துள்ளார். அவ்வதிகாரத்தில், ***“சில வேளைகளில், பரத்தையர் அமைப்புக்கு மகளிர் கிடைக்காவிடில், அக்குடியில் பிறவாத அழகும் இளமையும் வாய்ந்தவர்களை (வேறு குடியில் பிறந்தவர்களை) வேண்டிய பணம் கொடுத்துப் பரத்தையர்களாக ஆக்கிக் கொள்ளும் உரிமை, வரைவின் மகளிரை நடத்தும் தலைவனுக்கு உண்டு எனச் சாணக்கியர் கூறுகிறார். அரண்மனையில் மன்னனின் இச்சைக்கு மட்டுமேயன்றி அரண்மனையின் வேறுபல தொழில்கட்கும் அவர்களைப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர். அவர்களுக்கு அழகும் இளமையும் குன்றுமானால், அவர்கள் உணவுச் சாலைகளில் பணியாற்ற வேண்டும் என்கிறார் சாணக்கியர் மற்றும் அரண்மனைக்கு வெளியே பரத்தமையில் ஈடுபடும் ஒருத்தி, ஒரு திங்களில் ஈட்டும் தொகையில் இரு நாட்களுக்குரிய வருவாயை மன்னனுக்கு வரியாகச் செலுத்தவேண்டும் எனச் சாணக்கியம் விதிக்கிறது.”*** [33] என்கிறார் பா.வீரமணி. இவ்வாறு கூறுவதால், சமூகச் சீர்கேட்டிற்கும், ஆண்களின் ஒழுக்கக் கேட்டிற்கும் பரத்தையர் மட்டும் காரணமல்ல என்பது புலனாகிறது.

பரத்தையர் தங்களது வருவாயில் இருந்து இரு நாள்களுக்குரிய பணம் மன்னருக்கு வரியாகச் செலுத்த வேண்டும் எனக் கூறுவதனால், நாட்டின் வருமானத்தில் இவர்களின் பங்கும் இருந்தமை அறிய முடிகிறது. பரத்தமையைச் சாணக்கியர் தேசிய வருமானத் தொழிலாகவே கருதினார். இக்கருத்துகளால், வள்ளுவரும் மனுவும் கூறும் கருத்துகளினின்று மாறுபட்டவராகச் சாணக்கியர் காணப்படுகிறார்.

இக்கருத்தின்வழி மனு அக்காலத்தில் பரத்தையர் மட்டுமல்ல மகளிரும் சமூகச் சீர்கேட்டிற்கு உரியராக இருந்தனர் என்கிறார். இவருடைய நேர்மறையான எண்ணத்துடன் சாணக்கியர் கூற்று அமைந்திருந்தது என்பது புலனாகிறது.

### *1.10 வள்ளுவரும் வரைவின் மகளிரும்:*

தொல்காப்பியர் காலம் முதல் வள்ளுவர் காலம் வரை சமுதாயத்தில் நிலைபெற்றிருந்த பரத்தமையை ஒரு சமுதாயச் சீர்கேடாகவே கருதினார். ஆதலால்தான் தொல்காப்பியர் பரத்தையர்க்கென்று தனி இலக்கணம் வகுக்காமல் பல இடங்களில் அவர்களின் குணம் மற்றும் செயல்பாடுகள் எனக் காட்டினார். வள்ளுவரோ, பொருட்பாலிலே கூறினார். காமத்துப் பாலில் சிறிதும் கூறாமல் விடுத்தார். இப்பரத்தையர்களை வள்ளுவர் '***வரைவின் மகளிர்***' என்றே காட்டுகிறார்.

### *1.10.1 வரைவின் மகளிர் விளக்கம்:*

வரைவின் மகளிர் - வரைவு+இல+மகளிர் எனப்படும். '***வரைவு***' எனப்படுவது ஒழுக்கம், கட்டுப்பாடு, வரையறை என்பதாகும். ஒழுக்கம், வரையறை கட்டுப்பாடு இல்லாத பெண்களை வரைவின் மகளிர் என்பர் வள்ளுவர்.

இவ்வரைவின் மகளிரான பரத்தையர் உருவாகச் சமுதாயமே காரணமாக இருப்பினும் வள்ளுவர் அச்சமூகத்தைச் சாடவில்லை. ஆனால், வரைவின் மகளிரை,

***"அன்பின் விழையார் பொருள்***
***விழையும் ஆய் தொடியார்"*** *(குறள்.911:1)*
***"பண்பின் மகளிர்"*** *(குறள்.912:1)*

| | |
|---|---|
| ***“பொருட் பெண்டிர்*** | *(குறள்.913:1)* |
| ***“பொதுநலத்தார்”*** | *(குறள்.915:1)* |
| ***“பொருட்பொருளார்*** | *(குறள்.914:1)* |
| ***“பிறநெஞ்சில் பேணிப் புணர்பவர்”*** | *(குறள்.917:2)* |
| ***“மாய மகளிர்”*** | *(குறள்.918:2)* |
| ***“வரைவுஇலா மாணிழையார்”*** | *(குறள்.919:1)* |
| ***“இருமனப் பெண்டிரும்”*** | *(குறள்.920:1)* |

என வள்ளுவர் சாடுகிறார். இவற்றில் ‘***ஆய்தொடியார், மாணிழையார்’*** என அழகு வாய்ந்தவர்களாகவும் பரத்தை மகளிரைக் குறிப்பிடுகிறார்.

வரைவின் மகளிரைச் சாடும் வள்ளுவர் அம்மகளிருடன் தொடர்பு கொள்ளும் ஆடவரையும் ‘***வரைவின் மகளிர்’*** அதிகாரத்தில் சாடுவதை

| | |
|---|---|
| ***“நிறைநெஞ்சம் இல்லவர்”*** | *(குறள்.917:1)* |
| ***“ஆயும் அறிவினர் அல்லார்க்கு”*** | *(குறள்.918:1)* |
| ***“புரையிலாப் பூரியர்கள்”*** | *(குறள்.919:2)* |
| ***“…தோயார் அருட்பொருள் ஆயும் அறிவி னவர்”*** | *(குறள்.914:1-2)* |
| ***“……தோயார் மதிநலத்தின் மாண்ட அறிவி னவர்”*** | *(குறள்.915:1-2)* |

என்ற அடிகளால் அறிய முடிகிறது.

வரைவின் மகளிர் அதிகாரத்தில் மட்டும் ஆண்களையும் பரத்தையரையும் சாடும் வள்ளுவர் ‘***பிறனில் விழையாமை, பெண்வழிச் சேறல்’*** ஆகிய அதிகாரங்களில் ஆண்களை மட்டுமே சாடுகிறார்.

***“ஒருவன் பிறன்மனை நயவாது வாழினும், சமுதாயப் பொதுவாழ்வில் ஈடுபட்டு வீட்டைவிட்டுப் பிரிந்திருக்கும்போதோ, அல்லது ஊரில் இருக்கும்போதோ வீட்டைவிட்டுப் பிறவிடங்களில், பொதுமகளிர் தொடர்புகொள்ளுதல் தகாது. திருவள்ளுவர் காலத்தில், மருதத்திணை உரிப்பொருள்களாகிய ஊடலும் ஊடல் நிமித்தமும் கூறுகின்றபொழுது***

***பரத்தையிற்பிரிதலினால் அது விளைவதையும், பரத்தையிற்பிரிதல் ஒரு பிரிவே பிரிதல் வகைகளில் ஏற்றுக்கொள்ளப்பெற்றிருப்பதையும் பார்த்தால், பரத்தையரும் பரத்தமையும் சமுதாய வாழ்வில் இடம் பெற்றுவிட்டதை உய்த்துணரலாம். ஆதலால் பொது வாழ்க்கையில் நுழைந்து, பொதுவாழ்க்கைக் கடமையைப் புறக்கணிக்கத் தூண்டும் இப்புல்லுருவிச் சீர்கேட்டை வள்ளுவர் முதன்முதல் கடிந்து கண்டித்துள்ளார்"*** [34] என்கிறார் சரவண - ஆறுமுக முதலியார். இதிலிருந்து சமுதாய அறத்துக்கு மாறாக எந்தப் பெண்ணிடமும் தவறான உறவு ஒருவன் கொள்ளக் கூடாது என்பதே வள்ளுவரின் நோக்கம் எனக் கருத முடிகிறது.

***"விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார்இல்***
***தீமை புரிந்துஒழுகு வார்"*** *(குறள். 143)*

என்னும் குறட்பா பரத்தைப் பெண்டிரை மட்டுமல்ல பிறர் மனைவியரையும் தீண்டவோ, விரும்பவோ கூடாது என்கிறது.

வள்ளுவர் வகுத்த வரைவின் மகளிருக்கு, ***"பொருளையே விரும்பும் பொதுமகளின் பொய்மை முயக்கம், இருட்டறையில் முன்னறியாத பிணத்தைத் தழுவினார் போலும், என்று இவ்வளவிற்கு இழிந்த உவமையை, இக்குற்றம் எவ்வளவு பெரிய மிக இழிந்த குற்றமாகும் என்பதை விளக்கவே வள்ளுவர் வழங்கியுள்ளார் போலும்."*** [35] என்று விளக்கம் தருகிறார் சரவண – ஆறுமுக முதலியார்.

வள்ளுவரின் வரைவின் மகளிர் குறித்த கருத்து ஒட்டியே மனுதர்ம சாத்திரமும் பேசுகிறது., ஆனால் சாணக்கியரின் அர்த்த சாத்திரம் சமூகத்தில் பரத்தமை அமைப்பைத் தேவை என வலியுறுத்துவது புலப்படுகிறது.

திருவள்ளுவர் இவ்வொழுக்கத்தைப் புறத்தொழுக்கு என்றே கூறுகிறார். '***இன்பத்திற்குப் புறம் இவரின்பம்***' என்று கூறுவதனை

***"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்***
***திருநீக்கப் பட்டார் தொடர்பு"*** *(குறள். 920)*

என்ற குறள்வழி அறிய முடிகிறது.

வரைவின் மகளிர் என்பது ***"பொதுப் பெண்டிரது இயல்பு ஒருவனைத் தமக்கு உரிமையாக வரைந்து கொள்ளாமல் பொருள் கொடுப்பவர் யாராயிருந்தாலும் போகம் தந்து நிற்கும் பொதுநிலையாளராதலால் இவர் வரைவில் மகளிர் என நின்றார். வரைவு அளவு, எல்லை, மணம், கணவன் ஒருவனென்னும் வரையறையும், மணமும் இல்லாதவர் என்க"*** [36] என்கிறது குமரேச வெண்பா மாலை.

***"குலமகளிர் அன்பினால் விழைவர்; விலைமகளிர் பொருளினால் விழைவர்"*** [37] எனப் பரத்தைக்கு விளக்கம் தருகிறார் கவிராஜ பண்டிதர் ஜெகவீரபாண்டியன்.

பல்வகைப் பிரிவுகளுக்கும் உரிய கால வரையறையையும் தொல்காப்பியர் குறித்துள்ளார் தலைவி மாதவிலக்குற்ற பின்பு வரும் முதல் பன்னிரண்டு நாள்களில் பரத்தையிற் பிரிவு நிகழ்வதில்லை. உயர்கல்வியின் பொருட்டான பிரிவு மூன்று ஆண்டுகளுக்கும், பிறவகைப் பிரிவுகள் (பகைவரோடு போரிடப் பிரிதல்) ஓராண்டுக்கும் உரியன (தொல்.பொருள்: 185-189) எனத் தொல்காப்பியத்தைப் பின்பற்றி நம்பி அகப்பொருளும் (நம்பி.:89-92) கூறுகிறது.

### *1.11 பரத்தமை தோன்றக் காரணங்கள்:*

காம இச்சை மற்றும் சொத்துரிமை எனும் ஆதிக்க உணர்வால் ஆண்கள் பெண்களை மணம்புரிந்தும், மணம்புரியாமலும் அவர்களுடன் உடலுறவு கொண்டிருந்தனர். மனைவியின் இறப்பு, பிள்ளைப் பேறு இன்மை, மனைவியிடம் இன்பம் கிடைக்காமை, செல்வமிகுதி போன்ற காரணங்களால் ஆண்கள் வேறு பெண்களை நாடியமையும் பரத்தமை தோன்றக் காரணமாயிற்று.

மேலும் மன்னர்கள் பகைநாட்டை வென்றபோது பகை நாட்டின் பொன்பொருளோடு அந்நாட்டுப் பெண்களைத் தம் நாட்டிற்குக் கொண்டு வந்தனர். அப்பெண்களை நாளடைவில் பரத்தையர் ஆக்கினர்.

தொல் பழங்காலத்தில் (Primitive Society) ஆண்கள் தங்களது சொத்துரிமையாலும், ஆதிக்கத்தாலும் பெண்களை அடிமைகளாகவும் போகப் பொருளாகவும் ஆக்கியமையும் பரத்தமை உருவாக ஒரு காரணம் ஆகும்.

பரத்தமை என்பது ஒரு தனிப்பட்ட நிகழ்வு அல்ல. இதற்குச் சமூகம், சமயம், உளவியல், வறுமை, போர், பொருளாதாரம், உடற்கூறுகள் எனப் பலகாரணங்கள் இருந்தமை அறியமுடிகிறது.

***"காம இச்சை காரணமாகவோ, சொத்துரிமை காரணமாகவே ஆண்கள் வெளிப்படையாக அல்லது மறைமுகமாகப் பெண்கள் பலருடன் உடலுறவு கொண்ட செயலே சமூகத்தில் மறைமுகமாகப் பரத்தமை தோன்றுவதற்கு வித்திட்டது."*** [38] என்கிறார் சி.எஸ்.முருகேசன்.

பண்பாட்டுத் தேவையாகப் பாலியல் உறவுகள் முறைப்படுத்தப் பட்டாலும் ***"உழைப்பு நிலையிலிருந்து பெண்கள் ஒதுங்கி, நிர்வாக நிலையில் அதிகாரம் செலுத்த முற்பட்டபோது ஆண்கள் தலைமையில் புதியதொரு சமூகக் கூட்டமைப்பு உருவாகத் தொடங்கியது."*** [39] என்று சி.எஸ்.முருகேசன் விளக்குகிறார்.

***'ஒருவனுக்கு ஒருத்தி'*** என்ற வரையறை பெண்களுக்கே கூறப்பட்டிருந்தது. அக்கற்புநெறி ஆண்களுக்கு வரையறுக்கப்படவில்லை. ஆதலால் கட்டுப்பாடு இல்லாத ஆண்கள் தமது காம இச்சையால் பெண்கள் பலரை மணம் செய்தமை சமூகத்தில் பரத்தை உருவாகக் காரணமாயிற்று.

***"ஒருவன் ஒருத்தியோடு வாழ்தல் வேண்டும் என்பது சீரிய அறமே என்பதில் ஐயம் வேண்டா. ஆனால் அந்த அறத்தைப் போற்றி வாழ்வோர் மிகமிகச் சிலரே. மிகப் பலர் தவறுகின்றனர். தவறக் காரணம் என்ன? காரணம் பல கூறுப. போர்க்களத்தில் ஆண்மக்கள் சென்று பொருது மாள்வதாலும், இளமையிற் சாதல் அவர்களிடையே மிகுதியாய் இருத்தலாலும் மக்கட்கணக்கில் ஆண்களைவிடப் பெண்கள் பெருந்தொகையினராக இருக்கின்றார்கள்; ஆதலின், ஆண்களிற் சிலர் பெண்கள் பலரோடு வாழ்தல் நேர்கின்றது என்று உலக வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுவர். பொருளியலில் ஆண்களுக்கு இருக்கும் உரிமை பெண்களுக்கு இல்லை; ஆதலால் இந்த நிலை ஏற்படுகின்றது என்று***

***பொருளியல் அறிஞர் கூறுவர்''*** [40] என்று பரத்தமைத் தோன்றியதற்கான காரணத்தை மு.வரதராசன் கூறுகிறார்.

***'சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள்'*** என்ற நூலில் ***''எல்லாச் சாதிப் பெண்களுமே பொருளாதாரத்தில் உயர்ந்த பின்னணியுள்ள பார்ப்பனச் சாதியினரின் பாலியல் உரிமை மீறலுக்கு ஆட்பட்ட அடிமைகளாகவே ஆக்கப்பட்டிருந்தனர்.''*** [41] என்று பரத்தமைத் தோன்றுவதற்குப் பார்ப்பனரை மட்டும் சுட்டிக் கூறுகிறார் க.அ.ஜோதிராணி

மனைவியின் பூப்பு மற்றும் பிள்ளைப்பேறு காலத்தில் ஆண்கள் தமது காம இச்சையைத் தீர்த்துக் கொள்ளப் பரத்தையை நாடினர். மனைவியின் இறப்பு அல்லது அவள் நோய்வாய்ப்பட்ட காலத்திலும் பரத்தையரை ஆண்கள் நாடிச் சென்றதை இச்சமூகம் சாடவில்லை. தன் உடன் பிறந்தோரின் இறப்புக்குப்பின் அவனது மனைவியின் பாதுகாப்பிற்காக அப்பெண்ணைத் திருமணம் செய்து கொண்டமையைப் பிற்காலச் சமூகத்தில் காணமுடிகிறது.

### *1.11.1 சமூகமும் பரத்தமையும்:*

***''பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தையொழுக்கம் ஒருவகைக் குடும்பவொழுக்கம் போலப் பரவிக் கிடந்தது. வரைவின்மகளிர் தம் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் உகந்த சூழ்நிலை சமுதாயத்தில் நிலவியிருந்தது. இடையறா இன்பப் புணர்வுக்கென்று கணவன்மார்கள் வைப்பு எடுத்துக் கொள்ளும் பழக்கம் சமுதாய மரபுபோல் ஊன்றி நின்றது என்ற வாழ்வியல்களை நாம் தயக்கமின்றி ஒத்துக் கொள்வோமாக. தலைவன் பரத்தனாகச் சென்றபோது அவன் செயலை மனையாள் வெறுத்தாள், புலந்தாள், வருந்தினாள், எனினும் அவனைத் துாரஒதுக்கித் தள்ளினாள் அல்லள். முடிவில் அவனோடு உடனுறைதலையே விரும்பினாள். அதற்கு மாறாக யாதும் நினையாள். பெண் ஓராண் மனமே உடையளாதலின், பிற சிந்தனை அவள் நெஞ்சத்துப் பிறப்பதில்லை. எந்நிலைக் கணவனையும் நன்னிலைக் கணவனாகக் கொண்டொழுகுவதே மனைவியின் அதிகாரக் கொள்கை பெண்ணின் ஒத்துப் போகும் குணத்தாலும் பரத்தமைக்குச் சமுதாயத்தில் பேரெதிர்ப்பு இன்மையானும் பலர்தம் இல்லறவாழ்க்கை பிரிவின்றிப் பிளவின்றி இயங்கிற்று''*** [42] என்பர் வ.சுப.மாணிக்கம்.

***"ஆணின் பொருளும் பெண்ணின் மெய்யும் பண்டமாறுதலைப் பண்டைச் சமுதாயம் பார்த்துக் கொண்டிருந்தது. நாற்றுக்கிடையே தோன்றும் களையெனக் கருதாது வரப்பில் வளரும் பூஞ்செடி போலப் பரத்தையர்களைக் கருதிற்று."*** [43]

இக்கூற்றுகளால் பரத்தமை அக்காலச் சமூகத்தில் வேரூன்றி வளர்ந்திருந்தமையும் பரத்தையர் செல்வாக்குடன் வாழ்ந்தமையும் அறிய முடிகிறது.

சங்க காலச் சமூகத்தில் பெண்கள் வெளியுலகம் செல்வதற்கோ, கல்வி கற்பதற்கோ எந்தவிதத் தடையும் இருந்ததில்லை. கடுமையான கட்டுப்பாடுகளோ, சட்டத்திட்டங்களோ இல்லை எனினும் பெண்கள் ஆண்களுக்கு அடுத்த நிலையிலேயே வாழ்ந்தனர்.

பரத்தையிடம் சென்று வந்த தலைவனைத் தலைவி ஏற்றதற்கு, அவளின் நற்குணமோ, இரக்கக் குணமோ காரணம் அல்ல; தலைவனைச் சார்ந்தே இருக்க வேண்டிய சூழல் ஆகும். மேலும் தலைவியின் இவ்வொத்துப்போகும் குணத்திற்குக் காரணம் பொருளாதாரமும் தான். அதாவது நீர்வளம் நிலவளம் மிக்கிருந்த இடங்களில் வாழ்ந்தவரின் பொருளாதாரவளமும் ஆணாதிக்கமும் பரத்தமை வளர்வதற்குக் காரணமாயின.

ஆணினத்தின் பொருள் வசதி, இன்ப நுகர்வு மட்டுமல்லாமல் பெண்களின் வறுமை, சமூகப் பாதுகாப்பு எனப் பல்வேறு காரணங்களால் சங்கச் சமூகத்தில் பரத்தமை செல்வாக்குப் பெற்றிருந்தது.

### *1.11.2 சமயமும் பரத்தமையும்:*

சமுதாயத்தில் பரத்தமை தோன்றுவதற்குச் சமயமும் ஒரு காரணமாக இருந்துள்ளது.

***"ஆடலும் பாடலும் வல்லவராகி, அழகும் இளமையும் காட்டி...."*** என இளம்பூரணர் சுட்டுவதிலிருந்து பரத்தை ஆடலிலும் பாடலிலும் திறம்படக் கற்றுத்தேர்ந்தவள் என்பது அறியமுடிகிறது.

***"சங்க காலத்தின் இறுதியிலோ அதற்குப் பின்னரோதான் கோயில்கள் உருவாகியிருக்கலாம். பல்லவர்கள் காலத்தில் தான் பெருங் கோயில்கள் உருவாயின."*** [44] கி.பி. 9-ஆம் ஆண்டு முதல் 12-ஆம் ஆண்டுகளில் தான் தஞ்சைப் பெரிய கோயில் முதல் பல கோயில்கள் உருவாயின.

அக்கோயில்கள் பொது மக்களின் கல்விக் கூடமாகவும் திகழ்ந்தன. அங்குச் சிற்பக்கலை, ஓவியக் கலை, இசைக்கலை, கட்டடக் கலை போன்ற கலைகள் உருவாயின. அக்கோயில்கள் நாளடைவில் தேவதாசி முறை தோன்றும் களமாக மாறின. தேவதாசி எனப்படுபவள் தெய்வத்திற்கு அடிமைப் பூண்டவள் எனப் பொருள்படும்.

***"பல்லவர் காலத்தில் கோயிலுக்கும், கலைப் பெண்களுக்கும் இடையே இருந்த தொடர்புக்கு ஆதாரம் இருக்கிறது (Kersenboom Story – 22-23) ஆனாலும் சோழர் ஏகாதிபத்தியத்தின்போதுதான் தேவரடியாள் முறை ஸ்தாபனமயமாக்கப்பட்டதற்குரிய ஆதாரங்கள் உள்ளன. ஆனால் இவர்கள் எப்போது கோயிலுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டனர் என்பதற்குரிய காலவரையறை இன்றும் விவாதத்துக்குரியதாகவே உள்ளது. இம்முறை ஸ்தாபன முறை மயமாக்கப்பட்டதற்குரிய பல சாசன இலக்கியச் சான்றுகள் இக்காலத்தில் காணப்படுவதால் நாம் இவற்றின் மூலம் இதுபற்றி ஒரு நல்ல விளக்கத்தை மீள் அமைத்துக் கொள்ளலாம். மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலேயே (1184-கி.பி.) இப்பெண்கள் தேவரடியாள் என முதன் முதலாகக் குறிப்பிடப்படும் சாசனச் சான்று உள்ளது."*** [45] என்று இக்கருத்தைப் பா.வீரமணி பதிவு செய்துள்ளார்.

''*பரத்தையர்கள்', தேவதாசி எனப்படுவதற்குச் சில காரணங்கள் இருந்தன. மன்னர்கள், மிக்க செல்வந்தர்கள், நிலவுடைமையாளர்கள் மறைமுகமாக மேற்கொண்ட பரத்தமையை வெளிப்படையாக மேற்கொள்வதற்குக் கையாண்ட ஓர் எளிய வழியாகத் தேவதாசி முறை இருந்தது. பரத்தமைக்குச் சமுதாய ஏற்பு கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தெய்வ அம்சத்துடன் பொருத்திக் கோயிலில் விடப்பட்டவர்களே தேவரடியார் அல்லது தேவதாசி என அழைக்கப்பட்ட இவர்களில் அழகும்,*

***இளமையும், கலைத்திறன் மிக்க அடியார்களை அரசர் தனது அந்தப்-புரத்தில் வைத்துக் கொண்டமையும் புலனாகிறது"*** [46]

*1.11.3 போரும் பரத்தமையும்:*

பண்டைச் சமுதாயம் வேட்டைச் சமுதாயமாகவே இருந்தது. பண்டைய மன்னர்கள் அண்டை நாடுகளின்மீது படையெடுக்கும்போதும் போரிடும்போதும் வேட்டையாடினர். வெற்றி பெற்ற மன்னர்கள் போரின்போது பகைநாட்டின் பொன் பொருள்களை மட்டுமின்றி அப்பகை நாட்டு மகளிரையும் கொண்டு வந்தனர். அவ்வாறு கொண்டு வரப்பட்ட பெண்களே ***'கொண்டி மகளிர்'*** என்றழைக்கப்பட்டனர். இவ்வாறு பிறநாடுகளில் இருந்து கொண்டு வரப்பட்ட பெண்கள் காலப்போக்கில் பரத்தையர் ஆக்கப்பட்டனர். இதனை,

***"வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்***
***பல்லிருங் கூந்தல் முரற்சியால்***
***குஞ்சர வொழுகை பூட்டி"*** *(பதிற்று.5:15-17)*

***"ஆடவர் காண நல்லரங் கேறி***
***ஆடலும் பாடலும் அழகுங் காட்டி***
***பண்டேற் மொழியில் பயன்பல வாங்கி***
***வண்டிற் றுறக்கும் கொண்டி மகளிர்"*** *(மணி.18:103-109)*

என்னும் வரிகள் எடுத்தியம்புகின்றன.

போரில் கைப்பற்றிய பொருள்களைப் பட்டியலிடும் வழக்கம் அக்காலத்தே இருந்தது என்பதை ஜெயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி எடுத்துரைக்கிறது.

***"போரில் கைப்பற்றிய பொருள்களைப் பட்டியலிடும் கலிங்கத்துப்பரணி 'நவநிதிக்குவை, மகளிர்' என்று மகளிரையும் குறிப்பிடுகின்றது. மிகப் புராதன காலத்தே போரில் வெற்றி பெற்றோர் தோல்வியடைந்தோரைக் கொன்றொழித்தனர். அவர் தம் பெண்களைப் பணிவிடைக்காகக் கைப்பற்றினர். அவ்வாறு கைப்பற்றப்பட்ட மகளிரையே "கொண்டி மகளிர்" என்று பழைய தமிழ்ச் செய்யுட்கள் குறிப்பிடுகின்றன என்ற கருத்தும் எண்ணத்தக்கது"*** [47] எனக் கைலாசபதி குறிப்பிடுவதைச் சிலம்பு நா.செல்வராசு எடுத்துரைக்கின்றார்.

அக்காலத்தில் போர்க்களத்திலும் போரின் கண்ணும் இல்லற மகளிர்க்கு அனுமதி இல்லை. இந்நிலையில் இக் ***'கொண்டி மகளிர்'*** போர்களத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். பலகாலமும் போர்களத்திலேயே தங்கிப் போரிட்ட வீரர்கள் மனதளவில் பெரும் பாதிப்பு உடையவர்களாயினர். அவ்வீரர்கள்தம் ஏக்கத்தையும், போர்ச்சலிப்பையும் போக்கிக் கொள்வதற்கு (மறக்க) இவ்வகைப் புறப்பெண்டிரை நாடினர்.

மேலும், போரில் வீரர்களுக்குத் தம் உயிர்மீது நிச்சயமற்ற நிலையே இருந்தது. அச்சூழலில் ஓய்வு நேரங்களில் அவர்கள் கள்ளுண்டும் கதைகள் பேசியும், பரத்தையர்களுடன் உறவுகொண்டும் இருந்தமையை அரசரும் பெரும் பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை என்பதை,

***"எண்ணரும் பாசறை பெண்ணொடும் புணரார்"*** *(தொல்.பொருள்:173)*

***"புறத்தோன் ராங்கண் புணர்வ தாகும்"*** *(தொல்.பொருள்:174)*

எனத் தொல்காப்பியம் விளக்குகின்றது.

***'புறத்துறைப் பெண்டிர்'*** எனப்படுபவர் போர்க்களத்தில் விளக்கேற்றவும், மெய்க்காவல் புரியவும், புண்பட்ட வீரர்க்கு மருந்திடுதற்காகவும் அவர்களைப் பேணுதற்காகவும் அழைத்துச் செல்லப்பட்டனர். இப்பெண்கள் இப்பணியைத் தவிர்த்து வீரர்களின் காம இச்சைக்கும் பணிந்தனர்.

பாசறை வீரர்கள் தங்களுக்குப் பிடித்தமான கணிகையரையும் அவர்களின் தாதிகளையும் பாசறைக்கே அழைத்தும் சென்றனர் என்ற குறிப்பும் கிடைக்கிறது.

***"போர்ப் பாசறைகளையொட்டிப் பெரும் பரத்தையர் விடுதிகளும் அரசு ஒப்புதலுடன் இயங்கும்"*** [48] என்று ***'போரும் அறக்கேடும்'*** என்ற நூலில் ஆசிரியர் இராய் தெரிவித்துள்ளதாகச் சிலம்பு நா.செல்வராசு குறிப்பிட்டுள்ளார்.

மனைவியரைத் தம்முடன் போர்க்களங்களுக்கு ஆடவர் அழைத்துச் செல்லாத மரபை முல்லைப் பாட்டின் ***'பாசறை புலம்பல்'*** வழியும் அறிய முடிகிறது.

போரின்பொருட்டுப் பாண்டியன் நெடுஞ்செழியன் தன் அரசியை அரண்மனையில் விட்டு வந்ததை நெடுநல்வாடையும் உணர்த்துகிறது. அகத்துறை இலக்கியங்களும் போரற்ற காலங்களில் பாசறையில் தலைவன்

தலைவியின் பிரிவினை நினைத்துக் கலங்குவதாகப் ***'பாசறைப் புலம்பல்'*** துறை அமைந்துள்ளது. போர்க்களப் பணிப்பெண்களில் அரசரது பணிகளை மேற்கொள்ள மாளிகையில் இருந்தே அழைத்துச் செல்லப்பட்டனர். அரசனுடைய மெய்க்காப்பாளராகவும், பணியாட்களாகவும் அழகிய மங்கையரே இருந்தனர். அவர்களே அரசனது போர்க்கள அக வசதிகளையும், அரசனது களைப்பைப் போக்கும் பணிகளையும் மேற்கொண்டனர். இவர்கள் அரசனது கணிகையர்களாகவும் இருந்தனர். ***"மன்னரது விருப்பத்திற்குரிய இக்கணிகையர் பல சிறப்புகளைப் பெற்றனர். வெளியே செல்கையில் பல்லக்கேறிச் செல்லும் உரிமை, கவரி வீசிக் கொள்ள ஆட்களை வைத்துக் கொள்ளுதல், தங்கத்தினால் ஆன வெற்றிலைப்பாக்குப் பெட்டியை வைத்துக் கொள்ளுதல் முதலிய சிறப்புகளையும் உரிமைகளையும் பெற்றிருந்தனர்"*** [49] என்பதனின்று அரச கணிகையரின் செல்வாக்கை அறிய முடிகிறது.

மன்னரைப் போலவே பொதுமக்களும் பரத்தையர் நட்பில் திளைத்து வந்தமையை மருதக்கலி விளக்குகிறது.

***"கார்முற்றி இணரூழ்ந்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து***
***சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந்***
***தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்***
***நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால் நேராதார்***
***போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"*** *(கலித்.67:1-5)*

என்னும் வரிகளில் ***'புனலூரன்'*** என்றது பாண்டியனைக் குறிக்கிறது. மதுரையில் பரத்தமை வெளிப்படையாக அமைந்திருந்தமையை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

### *1.11.4 உளவியலும் பரத்தமையும்:*

பரத்தையர் உருவாக உளவியலும் ஒரு காரணமாக அமைந்தது. காமத்துக்கும் காதலுக்கும் முதல் தூண்டுதல் உடல் சார்ந்த பார்வையாகும். காமத்தின் முதல் திறவுகோல் உடல் சார்ந்த எண்ணங்களே ஆகும். இவை வெளிப்படையாகக் கூறும் அளவில் சங்கப் பாடல்களும் காரணமாகின்றன. ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே காமம் என்ற காதல் உருவாக உடல்

ஒரு காரணமாகிறது. மணவாழ்வில் பலருக்கும் பூரணமான உளநிறைவு கிடைப்பதில்லை அத்தகையவர்கள் தங்கள் உள்ள நிறைவுக்காகவே பரத்தையை நாடிச் சென்றனர்.

***"உடலியல், உளவியல் சார்ந்த அதீத உணர்வுகள் தவறான உடலுறவுக்கோ, பரத்தமைக்கோ இடம் கொடுக்கலாம் என்பதை மறுக்க முடியாது."*** [50]என்கிறார் ப.வீரமணி.

பண்டைக்காலம் முதலாகப் பெண்கள் பரத்தையராக மாற வறுமையே காரணமாகிறது. பரத்தமைக்கு வறுமையுடன் உளவியலும் காரணமாவதைப் புலவர் பா.வீரமணி, ***"ஒரு பெண் கணவனுக்குத் தெரியாமல் வேறொருவருடன் கள்ள உறவு வைப்பதை நாம் அறிந்திருக்கிறோம். ஆனால் ஒரே பெண் ஒரே நேரத்தில் மூவருடன் உடலுறவு கொள்கிறாள் என்றால் அ∴து அதிர்ச்சியாகவே உள்ளது. அவ்வாறு தொடர்பு கொள்வதற்குக் காரணம், "உளவியல் சார்ந்த அதீத காமவுணர்வே காரணம்" எனலாம். இவ்வாறு ஓர் ஆணும் ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களுடன் உடலுறவு கொள்வதுண்டு. இப்படிப்பட்ட வேண்டாத உடலுறவுகள் உளவியல் தொடர்பானவையேயாகும். இத்தகு செயல்களை உளவியலார் "நச்சுணர்வின் வெளிப்பாடு (Lack of Inhibition)."*** [51] ***என்பர்.***

உளவியல் அடிப்படையில் பரத்தை உருவாவது உடல்சார் எண்ணங்களால் என்பது உண்மையெனினும், ஆணாதிக்க உணர்வும், செல்வவளமும், மிகுந்த காமஉணர்வும் மேலும் இதற்குக் காரணமாகின்றன. இவ்வாறான பரத்தமைக்குப் பெண்களே காரணம் எனக் குறை கூறப்படுகின்றது. ஆயின், இதற்கு ஆண்களின் அதிகாரப் போக்கே உண்மையான காரணம் ஆகும். மண வாழ்வில் பலர்க்குப் பூரணமான உள நிறைவு ஏற்படுவதில்லை. இவ்வாறு மண வாழ்வில் நிறைவு இல்லாத ஆண் அல்லது பெண் தம் தேவையை நாடிச் செல்கின்றனர். ஆண் பரத்தையரையோ, பெண் வேறு ஆடவர்களையோ நாடுதல் இயற்கையாகிறது. உளவியல் ரீதியான இச்சூழல் பரத்தமை தோன்றுவதற்குப் பெருங்காரணமாகும். ***"பாலியல் மற்றும் பரத்தமை வெறும் பொருளியல் சார்ந்த ஒன்று மட்டுமன்று உளவியல், உடலியல், தட்பவெப்பநிலை போன்ற வற்றுடனும் உள்ளிணைப்பு உடையது"*** [52] என்ற இரசலின் கருத்து

நோக்கத்தக்கதாகும் என்கிறார் பா.வீரமணி. மேலும் ***"பரத்தமை ஒரு சமுதாயத்தில் இல்லாவிடில், ஆண்களின் எண்ணம் சிதைந்து வீட்டில் அமைதியில்லாத் தன்மை உருவாகும் என்றும், பரத்தமையில்லாவிடில் உடலுறவில் மாற்றின்பத்தை (various tastes) விரும்பும் ஆடவர், கட்டுப்பாடற்ற உணர்ச்சியால், குடும்பப் பெண்களின் கற்பைக் குலைக்க முயல்வர் என்றும், இவற்றால் குடும்ப அமைதியும், சமுதாய அமைதியும் கெடும் என்பதும் இலெக்கி என்பாரின் முடிவாகும்"*** [53] என்று பா.வீரமணி எடுத்துரைக்கிறார்.

***"காமம் என்பது இன்பத்துள் பேரின்பம் உணர்ச்சியில் பேருணர்ச்சி; ஆற்றலுள் பேராற்றல்; அடிப்படையில் பேரடிப்படை; உரிமையுள் எல்லார்க்கும் உரியது; நட்பினுள் இரு பாலரையும் இணைப்பது; கல்வியுள் கசடறக் கற்க வேண்டியது; நாணினுள் நனி நாணுடையது; ஒழுக்கத்தில் விழுமியது"*** [54] எனக் காமத்திற்கு விளக்கம் தருகிறார் இரா.சாரங்கபாணி.

***"மனித உள்ளத்தின் உணர்வே (human psyche) எல்லா அறிவியல்களுக்கும் கலைகளுக்கும் கருவறையாக விளங்குவது. எனவே, அத்தகைய உள்ளத்தின் வழிமுறைகளை ஆராய்கிற உளவியல், இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிக்கும் ஏற்புடையதாக இருக்க முடியும் என்று யுங் (G.Jung) சொல்லுவார்"*** [55] என்று தி.சு.நடராசன் குறிப்பிடுவதன்வழி சங்க சமுதாயத்தில் பரத்தையர் தோன்றி வளர்ந்து நிலைப்பெற்றிருந்த இடத்தையும் அறியமுடிகிறது.

பரத்தைக்குப் பொருளாதாரம் ஒரு காரணம் எனினும், சமூகப் பாதுகாப்பும் ஒரு காரணமாகிறது. போரிலோ, வேறு சூழலிலே கணவரை இழக்க நேரிடும் பெண்கள் வேறு ஆடவர்களுடன் உறவு கொண்டமையும் பரத்தமைக்குக் காரணமாயிற்று.

போரில் வெற்றி பெற்ற அரசன் எதிரி நாட்டுப் பெண்களை வலுக்கட்டாயமாகக் கொண்டுவரும்போதும், அப்பெண்கள் மன உளைச்சலுக்கு ஆளாகிப் பரத்தை நிலைக்குத் தள்ளப்படுகின்றனர்.

### *1.12 தொகுப்புரை:*

சங்ககால மக்களின் அன்பும் பண்பும் கூடிய அகப்புற வாழ்க்கையை விளக்கிக் காட்டுவது எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் என்ற சங்க நூல்களாகும். இந்நூல்கள் நிலங்களில் வாழும் மக்களின் ஒழுக்கத்தை வரையறுத்துக் கூறுகின்றன. ஐந்திணை மக்களின் அகவாழ்வின் ஒழுக்கம் அந்நில மக்களைக் கொண்டே அமைகின்றது. தன்னிகரில்லா வலிய பெரிய உணர்ச்சியாய் உறுப்பெற்ற காதலே அகத்திணை இலக்கியத்தின் உரிப்பொருளாகும். அகவாழ்க்கை களவு கற்பு இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்விரு பிரிவும் தலைமாந்தர்களான தலைவன் தலைவிக்கே உரியன எனினும் பரத்தை என்ற பெண்ணால் ஏற்படும் ஊடலையும் காணமுடிகின்றது. இல்லற வாழ்வை மேற்கொண்டு ஒழுகும் தலைவன் பரத்தையருடன் தொடர்பு கொண்டிருந்தமை சங்கப்பாடல்கள்வழி அறியமுடிகின்றது. பரத்தையர்க்கென்று தொல்காப்பியர் தனியாக இலக்கணம் கூறவில்லை எனினும் தூது, ஓதல், பொருள், பகை, காவல் வரிசையில் கற்பியலில் ***'பரத்தையர் பிரிவு'*** கூறுவதும் அறியமுடிகின்றது. காமம் காரணமாகப் பரத்தையர்பால் பிரிதல் வழுவாம் என்பதனால் அகத்திணையில் கூறாத பரத்தையர் பிரிவைக் கற்பியலில் சுட்டிக்காட்டுகிறார் தொல்காப்பியர். தலைவியின் பூப்புக் காரணமாகவும், மகப்பேறு காலத்திலும், காமம் காரணமாகவும் தலைவன் தலைவியை விடுத்துப் பரத்தையை நாடிச் சென்றான். அப்பரத்தையர் காமக்கிழத்தியர், காதல் பரத்தையர், சேரிப் பரத்தையர், இற்பரத்தையர், நயப்புப் பரத்தையர் எனப் பலவகைப்பட்டனர். தலைவன்மீது அன்பு கொண்டு அத்தலைவனுடன் மட்டுமே வாழ்பவள் காமக்கிழத்தியாவாள். இக் காமக்கிழத்தியர் ஒத்தகிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டோர் என மூவகைப்பட்டனர் என்பர் இளம்பூரணர். கந்தர்வ மணத்தை போன்று அன்பினால் மட்டுமே தலைவனைக் கூடி இக்காமக்கிழத்தியர் இன்புற்றனர்.

மேலும் பலருக்கும் உரியவளாகிப் பொருட்பெண்டிராய் வலம் வந்தனர் சேரிப்பரத்தையர். இம்மூவகைப் பரத்தையரைத் தொல்காப்பியமும் நாற்கவிராச நம்பி அகப்பொருளும் விளக்குகின்றன. ஆணாதிக்கம் காரணமாகவோ, காமம் காரணமாகவோ, பொருளுக்காகவோ, மனைவியின் இறப்பு, பூப்பு, பிள்ளைபேறு காரணமாகவோ, தலைவனின் செல்வமிகுதி

காரணமாகவோ சங்கச் சமூகத்தில் பரத்தையர் தோன்றினர். மேலும் மன்னர்கள் பகை நாட்டை வென்றபோது அந்நாட்டுப் பொன்பொருளோடு பெண்களையும் கவர்ந்து வந்தனர். அவ்வாறு கொண்டு வரப்பட்ட கொண்டி மகளிர் நாளடைவில் பரத்தையர்களாக மாறினர் என்பதும் அறியமுடிகின்றது. கோயில்களில் தேவதாசிகளாய் இருந்த பெண்கள் பிற்காலத்தில் பரத்தையர்களாக ஆக்கப்பட்டனர். ஆணாதிக்கத்தாலும் செல்வமிகுதியாலும் பரத்தையர் சமூகத்தில் வளர்ந்து வேருன்றி இருந்தமை இவ்வியல் புலப்படுத்துகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.125
2. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு, பக்.165
3. அழகர்சாமி, அ.கா., பத்தினிப் பெண்டிர் அல்லோம், பக்.11
4. பரிமணம், அ.மா. (பதிப்பாளர்) வாழ்வியற் களஞ்சியம் - தொகுதி 12, பக்.110
5. இளம்பூரணனார் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், பக்.31
6. இளம்பூரணனார் உரை, மேலது, பக்.311
7. இராசா.கி., (உ_ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம்(பகுதி-1), பக்.120
8. மேலது, பக்.120
9. குடந்தையன், கற்பெனும் சிறையினிலே, பக்.120
10. சுதமதி, இரா., (உ_ஆ) அகப்பொருள் விளக்கம், பக்.30-31
11. மேலது, பக்.50
12. முருகேசன், சி.எஸ்., வரலாற்றில் தேவதாசிகள், பக்.24
13. இளம்பூரணனார் உரை, மேலது, பக்.288
14. மேலது, பக்.288
15. சிலம்பு நா.செல்வராசு, மேலது, பக்.167
16. இளம்பூரணனார் உரை, மேலது, பக்.288
17. மேலது, பக்.288
18. மேலது, பக்.288
19. ஜோதிராணி, க.அ., சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள், பக்.103
20. கோவிந்தராஜ முதலியார்.கா.ரா., (உ_.ஆ),அகப்பொருள் விளக்கம், பக்.57
21. குடந்தையன், மேலது, பக்.15
22. முருகேசன், சி.எஸ்., மேலது, பக்.22
23. மேலது, பக்.22
24. சுப்ரமண்யன், ந., சங்ககால வாழ்வியல், பக்.397
25. திரிலோக சீத்தாராம், மனுதர்ம சாஸ்த்திரம், பக்.142(18,19)
26. மேலது, பக்.28(213)
27. மேலது, பக். 28(214)
28. மேலது, பக்.32(17)
29. மேலது, பக்.81(154)

30. மேலது, பக்.134(352)
31. வீரமணி, பா., வள்ளுவரும் வரைவின் மகளிரும் - ஒரு வரலாற்றுப் பார்வை, பக்.166.
32. மேலது, பக்.166
33. மேலது, பக்.167
34. சரவண - ஆறுமுக முதலியார்,(சொற்பொழிவாளர்), வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி, இரண்டாம் பகுதி, பக்.22-23
35. மேலது, பக்.143
36. கவிராஜபண்டிதர் ஜெகவீரபாண்டியன், திருக்குறட் குமரேச வெண்பா, பக்.260
37. மேலது, பக்.260
38. முருகேசன், சி.எஸ்., மேலது, பக்.16
39. மேலது., பக்.13
40. கழக வெளியீடு, கலித்தொகைச் சொற்பொழிவுகள், பக்.19
41. ஜோதிராணி, க.அ., மேலது, பக்.106
42. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பக்.219
43. மேலது, பக்.222
44. வீரமணி, பா., மேலது, பக்.128
45. மேலது., பக்.129
46. மேலது., பக்.130
47. சிலம்பு நா.செல்வராசு, மேலது, பக்166
48. மேலது, பக்.166
49. முருகேசன், சி.எஸ்., மேலது, பக்.78
50. வீரமணி, பா., மேலது, பக்.132
51. மேலது, பக்.134
52. மேலது, பக்.140
53. மேலது, பக்.139
54. சாரங்கபாணி, இரா., வள்ளுவர் வகுத்த காமம், பக்.3
55. நடராசன், தி.சு., திறனாய்வுக் கலை, பக்.88

# இயல் - இரண்டு

## பொருளடக்கம்

# இயல் - இரண்டு

## சங்க அகஇலக்கியங்களில் பரத்தையர் கூற்றுவழிப் பரத்தமை

### *2.0. முன்னுரை:*

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**

**முன்தோன்றிய மூத்த குடி தமிழக்குடி"**

தமிழ்மொழி பேசிய ஒட்டுமொத்தச் சமுதாயத்தின் பொதுவான பழக்கவழக்கங்களையும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் கொண்டு நோக்கும்போது திணைநிலைச் சமுதாயமாகச் சங்கச்சமூகம் இருந்து வந்ததுள்ளது. இதன் அடிப்படையில் உருவானவையே சங்க இலக்கியங்கள். அவ்விலக்கியங்கள் அக்காலச் சமுதாயத்தின் பொதுத்தன்மை, பொது ஒழுக்கம், பொதுப்பண்பாடு போன்றவற்றை விளக்குகின்றன.

தமிழ் இலக்கியத்தின் இமயம் சங்கப் பாடல்களே ஆகும். அவ்விலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் இரு கண்களாகப் போற்றின. அகத்திணைக்குப் பொருளாகக் காமம் (காதல்) அமைந்து சங்க மக்களின் காதலைப் பேசுகிறது. சங்க அகப்பாடலில் எட்டுத்தொகை நூல்களில் இடம்பெறும் ***'பரத்தையர் கூற்றாய்'*** அமையும் பாடல்கள் விளக்கும் பரத்தமைப் பற்றி விரிவாக இப்பகுதியில் எடுத்துரைக்கப்படுகின்றது.

### *2.1 சங்க இலக்கியச் சிறப்பு*

சங்கப்பாடல்கள் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு எனப் பிரிக்கப்படடுள்ளன. காதல் உயர்திணைக்கும் அ·.றிணைக்கும் பொதுவாக அமைவதை,

***"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது***

***தான்அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்"*** *(தொல்.பொருள்.219)*

என்ற நூற்பா எடுத்துக் காட்டுகிறது.

***"தமிழ் அகத்திணை கூறும் பல்வேறு காதற் கூறுகள் தமிழகத்தின் பல்வேறு நிலக்கூறுகளைச் சார்ந்து எழுந்தவை என ஒரு கோட்பாடு உளது"***[1]

***“சங்கப் புலவோர் தாம் மெய்யாகக் (உள்ளதை உள்ளவாறே காணுதல்) கண்ட இவ்வுலக மனப்பட்டவர். ஆதலின், உலகம் நீடுவாழ உயிர்க் கொடை செய்யும் காமம், அன்னவர் நெஞ்சினைக் கொள்ளை கொண்டதும், தமிழ்ப் பாடலுக்குத் தலைப் பொருளாயதும் வியப்பாமோ!”*** [2] – என்கிறார் வ.சுப. மாணிக்கம். இவரின் இக்கூற்றால் அகவாழ்விற்கு உயிர்நாடியாகக் காதலே அமைந்ததெனப் புலனாகிறது. ஐந்திணையாவது ஒத்த காமம் கொண்டது.

அக இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என இரு பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை,

***“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு***
***ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்***
***கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று***
***இத்திறத்த எட்டுத்தொகை”*** [3]

***“முருகு பொருநாறு பாண்இரண்டு முல்லை***
***பெருகு வளமதுரைக் காஞ்சி மருவினிய***
***கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்***
***பாலை கடாத்தொடும் பத்து”*** [4] என்பனவாகும்.

சங்க இலக்கிய எட்டுத் தொகையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்தும் அகத்திணை நூல்களாகும். பரிபாடல் அகமும் புறமும் கலந்து பாடப்பெற்ற நூலாகும். பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை ஆகிய மூன்றும் அக நூல்களாகும். அன்பின் முதிர்ச்சியாகிய காதலைப் பாடும் சங்கப்பாடல்கள் அகப்பாடல்கள் எனப் போற்றப்பட்டன.

***“மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்***
***சுட்டிஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்”*** *(தொல்.பொருள்.57)*

எனத் தொல்காப்பியம் கூறுவதிலிருந்து அக இலக்கியங்களில் தலைவன், தலைவி, தோழி எனப் பொதுப்பெயராகவே வைத்துப் புலவர்கள் பாடியுள்ளமை தெளிவாகிறது.

பரத்தமை பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ள அகநூல்கள் மற்றும் பரிபாடலின் எண்ணிக்கை பின்வருமாறு:

***நற்றிணை - முப்பத்திரண்டு***
***குறுந்தொகை - நாற்பத்தெட்டு***
***ஐங்குறுநூறு - நூறு***
***அகநூனூறு - நாற்பது***
***கலித்தொகை - முப்பத்தைந்து***
***பரிபாடல் - எட்டு***

எட்டுத்தொகை அகப்பாடல்களின் மொத்த எண்ணிக்கையில் 263 பாடல்களில் பரத்தமைப் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. ***'பரத்தைக் கூற்றுகளும் அவள்வழி உள்ளுறையும்'*** இடம்பெற்றுள்ள பாடல்கள் பின்வருமாறு:

| **நூல்** | **குறிஞ்சி** | **முல்லை** | **மருதம்** | **நெய்தல்** | **பாலை** |
|---|---|---|---|---|---|
| **நற்றிணை** | **ஒன்று** | -- | **ஏழு** | **ஒன்று** | -- |
| **குறுந்தொகை** | -- | **ஒன்று** | **நான்கு** | -- | -- |
| **ஐங்குறுநூறு** | -- | -- | **பன்னிரெண்டு** | **எட்டு** | -- |
| **அகநானூறு** | -- | -- | **ஒன்பது** | -- | -- |
| **கலித்தொகை** | -- | -- | **எட்டு** | -- | -- |

என மொத்தம் ஐம்பத்தொன்று இடங்களில் பரத்தமை இடம்பெறுகின்றன என்பர் தமிழண்ணல்[5].

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற திணைகளில் பரத்தையர்கள் பரவலாகக் காணப்பட்டாலும் **'மருதத்திணை'**யிலேயே அதிகம் காணப்படுகின்றனர்.

### *2.1.1 நிலப்பிரிவு:*

தொல்காப்பியர் உலகில் உள்ள நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகையாகப் பிரித்தமை,

***"அவற்றுள்***
***நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்***
***படுதிரை வையம் பாத்திய பண்பே*** *(தொல்.பொருள்.2)*

என்ற நூற்பாவழி விளக்குகிறார். ***'நடுவண் ஐந்திணை'*** என்பது நடுவாக அமைகின்ற பாலையைத் தவிர ஏனைய நான்கு நிலங்களைக் குறிப்பதாகும். இந்நிலங்கள் முதல், கரு, உரிப்பொருளால் ஆன திணைகளாகும் என்பதை,

***"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே***
***நுவலுங் காலை முறைசிறந் தனவே***
***பாடலுட் பயின்றவை நாடுங் காலை."*** *(தொல்.பொருள்.3)*

என்ற நூற்பா குறிப்பிடுகிறது. முதல் பொருள் எனப்படுவது ***'நிலம், பொழுது'*** ஆகிய இரண்டின் தன்மையைச் சொல்லுவதாகும் என்பதை,

***"முதல்எனப் படுவது நிலம்பொழு திரண்டின்***
***இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"*** *(தொல்.பொருள்.4)*

***"முதல்எனப் படுவ தாயிரு வகைத்தே"*** *(தொல்.பொருள்:19)*

ஆகிய நூற்பாக்கள் எடுத்துரைக்கின்றன.

மனித வாழ்க்கை வாழ்வதற்கு நிலம் அடிப்படைக் காரணமாகிறது. அவ்வாழ்க்கை முறைகளைக் கட்டுப்படுத்தப் பகல், இரவு போன்ற நாட் பொழுதுகளும், குளிர், வாடை, கோடை என்ற பொழுதுகளும் அவசியமாவதால் ***'பொழுது'*** களமாகிறது. இந்தக் **'களம்'**, **'காலம்'** இல்லாமல் மக்களின் வாழ்க்கை இல்லை என்பதையே சங்கஇலக்கியப் பாடல்கள் விளக்குகின்றன.

### *2.1.2 நிலம் என்னும் களம்:*

குறிஞ்சி என்பது மலையும் மலைசார்ந்த இடமும் முல்லை என்பது காடும் காடுசார்ந்த இடமும் மருதம் என்பது வயலும் வயல்சார்ந்த இடமும் நெய்தல் என்பது கடலும் கடல்சார்ந்த இடமும் ஆகும். குறிஞ்சியும் முல்லையும் கடும் கோடையில் வறண்டு உருவாவதே பாலை நிலமாகும். ஐந்து நிலங்களுக்கும் உரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும் விவரிக்கப்பட்டுள்ளன. இதனையே நம்பி அகப்பொருள்

***"வரையே, சுரமே, புறவே, பழனம்,***
***திரையே அவையவை சேர்தரும் இடனே***
***என ஈர் ஐவகைத்து அனையியல் நிலமே"*** *(அகப்.9)*

என்று எடுத்துரைக்கிறது. முதல்பொருள் வாழ்க்கைக்கு அடிப்படை எனில் கருப்பொருள்கள் வாழ்க்கையின் ஆதாரமாகும். ஒவ்வொரு நிலத்தாரும் வழிபடும் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ், ஊர், நீர், பூ-என ஐந்நில மக்களின் வாழ்வாதாரங்களைத் தொல்காப்பியம் கீழ்வரும் நூற்பாவழி பறைசாற்றுகிறது;

***"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை***
***செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ***
***அவ்வகை பிறவும் கருவென மொழிப"*** *(தொல்.பொருள்:20)*

ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய ஒழுக்க நிமித்தமே உரிப்பொருளாகும். ஒவ்வொரு நிலத்திற்கும் ***'ஒழுக்கம்'*** சிறப்பு எனக் குறிப்பிடும் தொல்காப்பியர் அதனை

***"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்***
***ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை***
***தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"*** *(தொல்.பொருள்:16)*

என்ற நூற்பாவழி எடுத்தியம்புகிறார்.

திணைப் பாடல்கள் உரிப்பொருளை அடிக்கருத்தாய்க் கொண்டும் கருப்பொருளையும் முதற் பொருளையும் உட்கட்டமைப்பாகக் கொண்டும் அமையப் பெறுவனவாம்.

பண்டைத் தமிழர்கள் இயற்கையோடு ஒன்றிய வாழ்க்கை வாழ்ந்தனர். அவ்வியற்கை வாழ்வானது அகத்திற்குள் உட்பட்டுக் கிடந்தது. அக வாழ்வு களவு, கற்பை அடிப்படையாகக் கொண்டிருந்தது. இவ்வாழ்விற்குத் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய், பரத்தை, பாணன் எனும் மாந்தர்களே உரியவர்களாயினர்.

பரத்தையர்பிரிவு நான்குநிலத் தலைவர்களுக்கும் உரியதே என்றாலும் உரிப்பொருளின் சிறப்புவகையால் மருதத்திணைத் தலைவர்க்கே உரியதாகிறது. தொல்காப்பியத்தில் மருதம் என்ற சொல் மூன்று இடங்களில் வருகிறது.

***"உழிஞை தானே மருதத்துப் புறனே"*** *(தொல்.பொருள்.66:1)*

இந்நூற்பா மருதத்திணைக்கு உழிஞை புறத்திணை என்று சுட்டுகிறது. மருதநிலத்திற்குச் சிறுபொழுது இரவுப்பொழுதின் பின்கூறான வைகறையும், பகற்பொழுதின் முன்கூறான விடியலும் ஆகும். பெரும்பொழுது ஆறும் உரியனவாகும்.

வேந்தன் எனப் புகழப்பெறும் ***'இந்திரன்'*** விரும்பி உறையும் இடமான நீர்வளம் நிறைந்தது மருதம் என்று கீழ்வரும் நூற்பா கூறுகின்றது:

***"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"*** *(தொல்.பொருள்.5:3)*

உணவு – நெல்; மா(விலங்கு) – எருமை, நீர்நாய்; மரம்-மருதம், காஞ்சி; புள்(பறவை) – அன்னம், அன்றில்; பறை-நெல்லரிப்பறை; செய்தி (தொழில்) – உழவு; யாழ்-மருதயாழ்; ஊர்-நகர், பட்டணம், நகரி, புரி, புரம், நகரம்; நீர் - ஆற்றுநீர், பொய்கைநீர், கிணறு நீர்; பூ-தாமரை, கழுநீர் என விவரித்தனர், மக்கள் - மகிழ்நன், ஊரன், கிழவன், கடைச்சி, பள்ளி, கிழத்தி போன்றோர்கள் ஆவர்.

***"ஊடலும் ஊடல் நிமித்தமும்"*** *(அகப்.25:4)*

என்பது மருதநிலத்தின் உரிப்பொருள் ஆகும். இவ்வுரிப்பொருளின் சிறப்பை

***"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்இன்பம்***
***கூடி முயங்கப் பெறின்"*** *(குறள். 1330)*

என வள்ளுவர் கூறினார். ***'உப்பமைந்தற்றால் புலவி'*** *(குறள். 1302)* என்று மற்றொரு குறளிலும் சுட்டிக் காண்பிக்கிறார் வள்ளுவர். புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என்ற அதிகாரங்களைப் படைத்துள்ளார் அவர்.

நம்பி முதற்பொருள் வகையினை

***"நிலமும் பொருளும் என முதல் இருவகைத்தே"*** *(அகப்.8)*

என்ற நூற்பாவழி எடுத்துரைக்கிறார். நிலமாகிய முதற்பொருள் வகையினை (இயல்-2.1.2-பார்க்க) எடுத்துரைத்தவர் காலமாகிய முதற்பொருளின் வகையினைப்

***"பெரும்பொழுது என்றா சிறுபொழுது என்றா***
***இரண்டு கூற்றது இயம்பிய பொழுதே"*** *(அகப்.10)*

என்றும் வரையறுத்துக் கூறுகிறார். மேலும் மருதத்தின் சிறுபொழுதினை

***“இருள்புலர் காலை மருதத்திற்கு உரித்தே*** (அகப்.16)

என்றும், மருதத்தின் பெரும்பொழுதினை

***“மருதம், நெய்தல் என்று இவை இரண்டிற்கும்***
***உரிய பெரும்பொழுது இருமூன்றுமே”*** *(அகப்.18)*

என்றும் கூறுகிறார். மருதத்திணையின் கருப்பொருளினை

***“இந்திரன், ஊரன், பைந்தார், மகிழ்நன்,***
***கெழுதகு கற்பின் கிழத்தி, மனைவி,***
***உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர்,***
***மழலை வண்டானம், மகன்றில், நாரை,***
***அன்னம், போதா, நன்னிறக் கம்புள்,***
***மிருகு, தாரா, எருமை, நீர்நாய்,***
***பெருகிய சிறப்பின் பேரூர், மூதூர்,***
***யாறு, மனைக்கிணறு, இலஞ்சி, தாமரை,***
***நாறிதழ்க் கழுநீர், நறுமலர்க் குவளை,***
***காஞ்சி, வஞ்சி, பூஞ்சினை மருதம்,***
***செந்நெல், வெண்ணெல், அந்நெல் அரிகிணை,***
***மன்றன் முழுவம், மருதயாழ், மருதம்,***
***மன்றணி விழாக்கோள், வயற்களை கட்டல்,***
***அரிதல், கடாவிடல், அகன்குளம் குடைதல்,***
***வருபுனல் ஆடல் மருதக் கருப்பொருளே”*** *(அகப்.23)*

என்றும் விரித்துரைக்கிறார் நம்பி. ஒழுக்கமாகிய உரிப்பொருளை ஐந்திணைக்கும் எடுத்துரைக்கும் நம்பி ஊடலை மருதத்திணைக்கு (அகப்.25:4) எடுத்துரைக்கிறார். இவ்வாறு மருதத்திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களைத் தொல்காப்பியரும், நம்பியும் இலக்கணமாக வரையறுத்ததைக் காணமுடிகிறது. மருதநிலத்தில் செல்வம் மிகுந்திருந்தமையே இந்நிலத்தில் பரத்தமை தோன்ற காரணம் எனக் கருதப்படுகிறது.

*2.2 மருதத்திணையும் பரத்தமையும் :*

***“வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல்***
***மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்”*** *(குறுந்.135:1-2)*

என ஆண் பெண் கடமைகளைச் சங்க இலக்கியம் உணர்த்துகிறது. அதே நேரத்தில், தலைவன் தலைவியை விடுத்துப் பரத்தையொழுக்கத்தையும் மேற் கொண்டான் என்பதை மருதத்திணைப் பாடல்கள்வழி அறிய முடிகிறது.

***“ஊடல் நிகழ்வதற்கும் தலைவன் உள்ளத்தைத் தலைவி அறிவதற்கும் ஒரு காரணம் வேண்டுமன்றோ? அதற்கெனவே இப்பரத்தைமை கூறப்பட்டது. தலைவன் கருத்தைத் தலைவி எளிதில் அறிவதற்கு ஏற்ற கருவியாக இருத்தல் பற்றியும், மக்களுள் ஒருசிலர் வாழ்க்கையில் நிகழ்தலுண்மைபற்றியும் இதனைத் தொல்காப்பியனார் கூறினார். பின்வந்த புலவர்களோ, பரத்தையரைப்பற்றியும் அவர்தம் இல், சேரி, பேச்சு, செயல் முதலியனபற்றியும் வரம்பின்றி விரித்துரைக்கத் தொடங்கினர். ஆதலின், அவர் கூறுவனவற்றை அவ்வாறே கொள்ளாது, தமிழ் நாட்டிற்குப் பொருந்தாதவற்றைத் தள்ளியே கொள்ளுதல் வேண்டும்.”*** [6] என்று பரத்தமைக்குக் காரணம் கூறப்பட்டுள்ளது.

தலைவன், தலைவி, நற்றாய், செவிலித்தாய், தோழி போன்றோர்களைப் போலவே பரத்தையும் சமூகத்தில் ஓர் அங்கமாக வாழ்ந்து வந்ததைச் சங்க அகப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. பெரும்பாலான மருதத்திணைப் பாடல்கள் பரத்தையர் பிரிவை மையங் கொண்டு விளங்குகின்றன. சங்க மருதப் பாடல்கள் தலைமகன் - தலைமகள் - பரத்தை ஆகியோரின் உறவு நிலைகளைப் பல நிலைகளில் காட்டுகின்றன. “***காதல் ஏற்கப்பட்டதைப்போலப் பரத்தமை, நிலஉடைமைச் சமுதாயமாக மாறிப்போன மருதநிலச் சமுதாயத்தில் ஆண்களின் வெகுவான செயற்பாடாக இருந்துள்ளது. இது தோழி, தலைவி, காதற்பரத்தை போன்ற சமுதாய அங்கத்தினரால் குறிப்பாகப் பெண்களால் இகழப்பட்டுள்ளது. தொடர்ந்து நீடித்த பரத்தையிற் பிரிவு என்ற ஆண்வழிச் சமுதாயச் செயற்பாடு பெண்களால் மிகவும் வெறுக்கப்பட்டிருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளவேண்டியது பெண்ணின் கடமையாக இருந்ததையும்***

***சங்கப்பாடல்கள் வெளிப்படுத்தியுள்ளன"*** [7] ***'அயன்மை'*** எனப் பொருள்படும் பரத்தமை சங்க இலக்கியங்களில் ஐந்து இடங்களிலும், ***'பரத்தையர்'*** என்னும் சொல் ஓரிடத்திலும், ***'பரத்தை'*** எனும் சொல் பதிமூன்று இடங்களிலும் பரத்தன் (அகம்.146) ஓரிடத்திலும், பரத்த (கலி-75) ஓரிடத்திலும் வந்துள்ளமையும் அறிய முடிகிறது.

பரத்தையர் பிரிவைப் பாடும் பாடல்கள் பெரும்பாலும் காமக்கிழத்தி, பரத்தை, தலைவி, தோழி ஆகியோர்தம் கூற்றுகளாகவே அமைந்துள்ளன. இவை ***'குடும்பம் - பரத்தமை'*** என்ற இருவகை முரண்பாடுகளுக்கும் இடையேயான ***'ஊடாட்டங்களை'*** வெளிப்படுத்துவன. மேலும், சமுதாயத்தில் பரத்தமை பெற்றிருந்த செல்வாக்கையையும் அவை எடுத்துக் காட்டுகின்றன.

அகநானூற்றில் இடம்பெறும் மருதப்பாடல்களில் பெரும்பாலானவை பரத்தமையையே மையப் பொருளாகக் கொண்டுள்ளன.

***"..................................எம்போல்***
***மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி***
***வளிபொரத் துயல்வருந் தளிபொழி மலரில்***
***கண்பனி ஆகத்து உறைப்பக் கண்பசந்து***
***ஆயமும் மயலும் மருளத்***
***தாயோம்பு ஆய்நலம் வேண்டா தோளே"*** *(அகம்.146:8-13)*

என்ற தலைவிகூற்றுப்பாடல் பரத்தையைப் போலத் தன் நலனை இழந்து போவதற்கு வருந்தும் தலைவியின் மனநிலையை வெளிப்படுத்துகிறது. இங்குத் தலைவன் ***'மாயப் பரத்தன்'*** எனத் தலைவியால் இகழப்படுகிறான். தலைவனை மட்டுமன்றித் தலைவனின் பரத்தமையும் இகழப்பட்டமையை,

***"மாதர்மென் நோக்கின் மகளிரை நுந்தைபோல***
***நோய்கூர நோக்காய் விடல்"*** *(கலித்.86:23-24)*
***"…………………………புலையனைத்***
***தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்***
***நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்***
***நுந்தைபால் உண்டி சில"*** *(கலித்.85:22-25)*

என்ற வரிகள் வெளிப்படுத்துகின்றன.

தலைவனின் பரத்தமை இகழப்பட்டாலும், சங்க அகப்பாடல்கள் பரத்தையைத் தலைவிக்குத் தங்கையாகவும்(ஐங்.88) புதல்வனுக்குத் தாயாகவும் கடவுள்தன்மை உடையவளாகவும் காட்டுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. ***“சங்கப் பரத்தையர் தலைவனோடு கொண்ட உறவு வதுவை அல்லது திருமணவழிக் கொண்ட உறவாகும். இதனை, ‘ஒருத்தியை நம்மனைத் தந்து வதுவை அயர்ந்தனை’ (அகம்.46:9-10) எனவும் ‘குறுந்தொடி’ மடந்தையொடு வதுவை அயர்ந்தனை என்ப’ (அகம்.36) எனவும்; ‘தலைப்புணைத் தழீஇ வதுவை ஈரணிப் பொலிந்து ஆடியோர்’ (அகம்.166) எனவும் ‘ஆயிழை மகளிர் முலை ஆகத்துத் தாரிடை குழைய வதுவை மேவலன்’ (அகம்.206:12) எனவும் ‘நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு வதுவை அயர்தல் வேண்டி’ (அகம்.66) எனவும் வரும் பாடல்அடிகள் உணர்த்துகின்றன.”*** [8] தலைவன் பரத்தையரை வதுவைவழிக் கூடினான் என்பதை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. ***“மேலும் பரத்தையைத் தலைவனுக்கு அளித்தலை ‘மகட்கொடை நேர்தல்’ (நற்.313) என்ற சொல்லால் அகப்பாடல் குறிக்கும். இச்சொல்லைத் தொல்காப்பியத்தில் வரும் ‘கொடைக்குரி மரபினோர்’ என்ற நூற்பாவோடு (கற்பு.1) இணைத்து எண்ணுவது சிறந்தது”*** [9]***.***

வதுவைச் சடங்கு என்பது பொய்யிலிருந்தும் வழுவிலிருந்தும் சமுதாயத்தைக் காப்பாற்றியது என்னும் கருத்தைப்,

***“பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்***
***ஐயர் யாத்தனர் கரணம் என்ப”*** *(தொல்.பொருள்:143)*

என்ற நூற்பாவால் அறியமுடிகிறது. தலைவன் பரத்தையரைத் திருமணம் செய்து கொண்டாலும் அவர்களுக்கு இல்லற உரிமைகள், வாரிசு உரிமைகள் மறுக்கப்பட்டமையை

***“.........................................அவரும்***
***பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்த,***
***நன்றி சான்ற கற்பொடு***
***எம்பாடு ஆதல் அதனினும் அரிதே”*** *(நற்.330:9-12)*

என வரும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன. ***“கற்பு என்பது இல்லறக் கடமையைக் குறிக்கும் சொல்லாகும் என்று ந.சுப்புரெட்டியர்”*** [10] கூறுவதாகச் சிலம்பு நா.செல்வராசு எடுத்துரைக்கிறார். இதனின்று கற்பு என்ற சொல் ***‘பொது மகள், விலை மகள்’*** என்னும் பரத்தைக்குக் கூற இயலாது என்பது உறுதியாகிறது.

வதுவை சடங்குவழி தலைவன் தலைவியைத் தவிர்த்துப் பலரை மணந்திருந்தான். வாரிசு உரிமை இல்லறத் தலைவிக்கே அன்றிப் மற்றவர்களுக்கு இல்லை என்பதும் தெளிவாகிறது. மேலும் பரத்தையரும் தலைவனின் மனைவியரே என்பதும் பெறப்படுகின்றது.

### *2.3 நான்கு திணைப் பரத்தையர் கூற்றுகள்:*

ஊடல் நிமித்தமான மருதப் பாடல்கள் இருநூற்று ஐம்பத்தேழு ஆகும். அவற்றுள், தோழி கூற்றுக்களைக் காட்டிலும் தலைவி கூற்றுக்கள் மிகுதியாக உள்ளன. மருதத்திணையில் மட்டுமே பரத்தையர் கூற்றுகளாக முப்பத்துமூன்று பாடல்கள் உள்ளன. மேலும் ஏழு பாடல்கள் காமக்கிழத்தியர் கூற்றுகளாக உள்ளன.

குறிஞ்சித் திணையில் அரிதாக ஒரே ஒரு பரத்தைக் கூற்றுப் பாடல் (நற்.குறிஞ்சி.176) உள்ளது. முல்லைத் திணையிலும் ஒரே ஒரு பாடல் (குறுந்.முல்லை.370) பரத்தைக் கூற்றாய் உள்ளது. நெய்தல் திணைப்பாடல்களில் பரத்தைக் கூற்றாகப் பதினொன்று பாடல்கள் அமைந்துள்ளன. நெய்தல் திணையில் பரத்தைக் கூற்றுப் பாடல்கள் மிகுதியாக இருக்கக் காரணம் சங்ககாலத்தில் வணிகத்திற்காகத் தமிழகம் வந்த பிற நாட்டினர் கடற்கரைப் பகுதிகளில் தங்கினர். அதன் விளைவாகப் பரத்தையர் வாழ்ந்தமை அறியமுடிகிறது. பரத்தையர் கூற்றின் அடிப்படையில் சங்ககால மக்கள் வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது.

#### *2.3.1. குறிஞ்சிநிலப் பரத்தையர் கூற்று:*

ஐந்திணைகளுள் முதல் நிலமாக அமைந்திருப்பது குறிஞ்சி நிலமாகும். **‘குறிஞ்சிக்கோர் கபிலர்’** எனப் போற்றப்படுவதிலிருந்து குறிஞ்சி நிலப்பாடல்களை அதிகம் பாடியவர் கபிலர் என அறியமுடிகிறது.

**‘திணைக்கொரு புலவர்’** எனும் வரிசையில் அமைந்த நூல் எட்டுத் தொகையின் ஐங்குறுநூறு மற்றும் கலித்தொகை ஆகும். இவ்விரண்டு நூல்களின் குறிஞ்சிப் பாடல்களைப் பாடியவர் கபிலர். மேலும் பிற தொகை நூல்களிலும் இவர் குறிஞ்சித்திணைப் பாடல்களை மிகுதியாகப் பாடியுள்ளார். சீத்தலைச் சாத்தனார், பெருங்குன்றூர் கிழார், பரணர், கணக்காயனார். நொச்சிநியமங்கிழார், பேரிசாத்தனார், மருதன்இளநாகனார், கோண்மா நெடுங்கோட்டனார், நற்றமனார் செங்கண்ணனார்,… போன்ற பல புலவர்கள் குறிஞ்சித்திணைப் பாடல்களைப் பாடியுள்ளனர். இக்குறிஞ்சித்திணைப் பாடல்கள் அவற்றிற்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்களைக் கொண்டு விளங்குகின்றன.

### *2.3.1.1 உலகியலும் பரத்தையும்:*

குறிஞ்சித்திணையில் தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையே அதிகம் பேசப்படுகிறது. அரிதாகப் ***‘பரத்தையொழுக்கம்’*** ஒரே ஒரு பாடலில் (நற்.176) மட்டுமே பேசப்படுகிறது. ***‘பூப்பு’*** என்பது எல்லா நிலப் பெண்களுக்கும் உரித்த ஒன்றாகும். மருதத்திணையில் இது பற்றிக் குறிப்புகள் கூறப்பட்டிருந்தாலும் மற்றத் திணைகளில் அதிகம் பேசப்படவில்லை. எட்டுத்தொகையின் நற்றிணையில் குறிஞ்சித் திணையில் இப்பூப்புப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

தலைவனின் பரத்தையர் பிரிவிற்குத் தலைவியின் பூப்புக்காலமும் ஒரு காரணமாகிறது. தலைவி அவள் தன் பூப்புக்காலம் முடிந்து நீராடிய பின், அடுத்து வரும் பன்னிரண்டு நாளும் தலைவன் தலைவியைக் கூடியிருத்தல் வேண்டும். அவ்வகையில் குறிஞ்சித் திணையிலும் தலைவன் பூப்புக் காரணமாகத் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்றிருந்ததால் தலைவியின் பாங்கியாய் இருக்கும் தோழி செவ்வணி (செவ்வாடை) அணிந்து தலைவனைக் காணச் சென்றாள். அப்போது, தலைவியின் பூப்புக்காலமும், அவள் நீராடிய காலமும் அறிந்த பரத்தை, தலைவனைத் தலைவிபால் அனுப்புகிறாள். இந்நிகழ்ச்சிக்குப் பின்னாகப் பரத்தை, தலைவியின் தோழியாகிய விறலியிடம், தலைவிக்கு அஞ்சித் தலைவனைத் தான் விடுவிக்கவில்லை; ஊரார் கூற்றாகிய அலருக்கும் அஞ்சித் தான் தலைவனை விடுவிக்கவில்லை; தலைவி, ஊரார்க்கும் தனக்கும் பயந்து

தலைவனை விடுவித்ததாகக் கருதினால் மீண்டும் அத்தலைவனைத் தானே நயந்து கொள்வேன் என்றவள் தலைவிபால் தனக்குள் இருக்கும் அன்பு காரணமாகத்தான் தலைவனை விடுவித்ததாகக் கூறுவதைக் கீழ்வரும் பாடல் புலப்படுத்துகிறது;

*“எம் நயந்து உறைவிஆயின், யாம் நயந்து*
*நல்கினம் விட்டது என்? நலத்தோன் அவ் வயின்*
*சால்பின் அளித்தல் அறியாது, ‘அவட்கு அவள்*
*காதலள் என்னுமோ?’ உரைத்திசின் - தோழி! –*
*நிரைத்த யானை முகத்து வரி கடுப்பப்*
*போது பொதி உடைந்த ஒண் செங் காந்தள்*
*வாழை அம் சிலம்பின் வம்பு படக் குவைஇ,*
*யாழ் ஓர்த்தன்ன இன் குரல் இன வண்டு,*
*அருவி முழவின் பாடொடு ஒராங்கு,*
*மென்மெல இசைக்கும் சாரல்,*
*குன்ற வேலித் தம் உறைவின் ஊரே.”* *(நற்.176)*

இதன்வழிப் பரத்தை தலைவிமீது காட்டும் பரிவும் தலைவன்மீது கொண்ட நம்பிக்கையும் உணர முடிகிறது. தலைவிக்கு மட்டுமே மகப்பேறு உரிமை இருந்ததால் பரத்தை தலைவிமீது பரிவு காட்டினாள் என்பது வெளிப்படை.

***“உணர்த்தவுணரும் உடற்பகுதிக்கண்ணதாகிய தலைவியின் பூப்பு”*** நிகழ்வை ***‘இயற்கை’*** எனவும், தோழியின் செவ்வணிக்கோலங் கண்டு ***“உலகியல் நோக்கித் தலைவனை விடுத்த பரத்தை”***[11] எனவும் அ.நாராயணசாமி ஐயர் விளக்குவது குறிப்பிடத்தக்கது.

***“சிலம்பிலே செங்காந்தள்மலர்தலும் வண்டுகள் அருவியொலியொடு சேர மெல்லமெல்லப் பாடாநிற்குமென்றது, தலைவியொடு தலைவன் மகிழ்ந்திருப்பனாதலின் நாம் முழவுமுதலியவற்றோடு பாடுகிற்போம்”. அவன் நம்வயத்தனாவா னென்பதாம், “ஏனோர்க் கெல்லாம் இடம் வரை வின்றே” (தொல்.பொருள்-302) என்றதனாலே பரத்தை தானறிந்த***

***கிளவியானே நிலம் பெயர்ந்துறையாத பொருள்கொண்டு உள்ளுறை கூறினாளென்பது”*** [12] என அ.நாராயணசாமி ஐயர் கூறுகிறார்.

“***அக்காலத்துப் பரத்தையிற் பிரிவு ஆகாது எனவும் தொல்காப்பியம் நாள் வரையறை செய்யும்; தலைவனுக்கு அறிவுரை பகரும். இங்ஙனம் ஆகுநாள் ஆகாநாள் கூறுதலன்றிப் பரத்தையொழுக்கமே ஆகாது என்று கூறாமையை எண்ணிப் பார்க்க”*** [13] என வ.சுப.மாணிக்கம் கூறுவதினின்று சங்ககாலத்தில் பரத்தமை ஒழுக்கத்தைத் தொல்காப்பியமும் கடிந்து கூறவில்லை என்பது அறிய முடிகிறது.

“***பரத்தை பல்வேறு அணிகளுடன் விழவுக்களம் பொலிய வந்து நின்றதும் அதனைக் கண்ட மனைவியர் எழுமினோ எழுமின் என்று கூறி மலையனது வேலிற்குப் பகைவர் அஞ்சி ஓடியது போலத் தம் கொழுநரைக் காக்க விரைந்து ஓடியதும் கூறப்பெற்றுள்ளன”*** [14] என்று பரத்தையரைக் கண்டு தலைவி செய்த செயலைக் குறிப்பிடுகிறார் சிலம்பு.நா.செல்வராசு. குறிஞ்சித் திணையில் பரத்தமை ஒழுக்கம் அதிகம் இல்லாமைக்குக் காரணம் அதன் உரிப்பொருளே ஆகும். கற்பில் மேற்கொள்ளப்படுவதே பரத்தை யொழுக்கமாகும். குறிஞ்சித் திணை களவுக் காதலையே காட்டுகிறது. களவுக் காதலானது திருமணத்திற்கு முன்னான காதல் ஆகும். திணைப்புலம் காக்க மற்றும் சுனைநீர், அருவி நீர் ஆட வரும் தலைவியைத் தலைவன் எதிர்கொள்ள நேரிடும். இந்நிலையில் காதல் கொண்ட இருவருக்கும் புணர்தலே நிமித்தமாக அமைகிறது. இந்நிலைக் காரணமாகக் குறிஞ்சித் திணையில் பரத்தை ஒழுக்கம் இல்லை என்பது புலனாகிறது.

### *2.3.2 முல்லைநிலப் பரத்தையர் கூற்று:*

தொல்காப்பியர் வரையறுத்த நிலப் பாகுப்பாட்டில் இரண்டாவது திணையாக முல்லை நிலம் கூறப்பட்டுள்ளது. குறிஞ்சித் திணையான மலைக்குன்றுப் பகுதிக்குக் கீழாக அமைந்துள்ள காடும் காடு சார்ந்த இடமும் ஆகும். ***‘புறவு’*** (அகப்.9:1) என நம்பி அகப்பொருளில் கூறப்படும் காட்டுப் பகுதியே ***‘முல்லை’*** நிலமாகும்.

***'கற்பின் மனைவி'*** என அடைமொழி கூறியதினின்று முல்லைத் திணையில் கற்பு வாழ்வே மிகுதியாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இதன்வழி பரத்தமை இத்திணைக்கு உரியதல்ல என்பது விளங்குகிறது. ஆயினும் பரத்தையும் பரத்தமையும் இந்நிலத்திலும் இருந்தமையைக் காணமுடிகிறது. முல்லைதிணைப் பாடலில் பரத்தை தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளுதல் உண்டு என்பதை முல்லைப் பாடல் (குறுந்.370) விளக்குகின்றது. பரத்தை தன்னைத் தேடி வந்த தலைவனிடம் அவன் விரும்பிய வண்ணம் நடந்து கொண்டாள். தலைவனின் பரத்தை ஒழுக்கத்தைப் புறங்கூற முடியாத தலைவி பரத்தையைப் புறனுரைத்தாள். இதனைக்கேட்ட பரத்தை தலைவிக்குப் பாங்காய் நிற்கும் தோழியிடம், ***'தன்னுடைய காமத்தின் செவ்வி அறிந்து துய்க்கும் தலைவனுக்கு'*** இன்பம் தருபவள் தான் மட்டுமே என்கிறாள். தலைவனின் செவ்வி அறிந்து இன்பம் நுகரும் நெறியை அறியாதவளே தலைவி எனத் தலைவியை இகழ்ந்துக் கூறுகிறாள்.

### *2.3.2.1 தலைவனும் பரத்தையும் ஓருடல் ஆனமை:*

தலைவனைப் பரத்தை நயந்து கொண்டதை, ***'வண்டினங்களின் வருகையை அறிந்து ஆம்பல்கள் தம் இதழ்களாகிய கதவுகளை விரித்து வரவேற்றன எனக் கூறுவதில் இருந்து, 'வண்டினத்தைத் தலைவனாகவும், பரத்தையை ஆம்பலாகவும்'*** வில்லக விரலினார் உவமித்தமை அறிய முடிகிறது. மேலும், ***'தலைவன் தன்னைச் சேராதிருந்தால் இரு வடிவம் கொண்டவர்களாகவும் தலைவன் தன்னைச் சேரும்போது அவனின் நல்ல மார்பினைச்சேர்த்து அணைத்ததால், வில்லைத் தன் முன்னே அகப்படுத்திய விரல்களைப் போலத் தானும் தலைவனும் ஒரு வடிவினம் ஆவோம்'*** எனப் பரத்தை, தலைவிக்குப் பாங்கான தோழியிடம் கூறியதைப்

***"பொய்கை யாம்ப லணிநிறக் கொழுமுகை***
***வண்டுவாய் திறக்கும் தண்டுறை யூரனொ***
***டிருப்பி னிருமருங் கினமே கிடப்பின்***
***வில்லக விரலிற் பொருந்தியவன்***
***நல்லகஞ் சேரி னொருமருங் கினமே".*** *(குறுந்.370)*

என்ற பாடல்வழி வில்லக விரலினார் கூறுகிறார்.

"***தலைவனோடு இருந்தக்கால் தனித்தனியே ஈருடம்பினேமாகியும், கிடப்பின் ஈருடலாயினும் ஓருடல்போல் ஒன்றியும், அவன் பிரிந்து தனது மனை சேரின் யாம் தனித்து எம் உடலாகிய ஒருடலினேமாகியும் இருப்பேம். இங்ஙனம் இருத்தல் அவனது ஒழுகலாற்றிற்கேற்ப அமைவதேயன்றி யாமாக வலிந்து மேற்கொள்வதன்று. தலைவனை எம்பால் இருத்திக்கொள்ளும் இயல்பிலேம்"***[15] என்று பரத்தை கூறினாள்.

> ***"கிழவோன் தன்னையுங் கிழத்தி தன்னையும்***
> ***இகழ்தலும், தம்மைப் புகழ்தலும், நிகழ்பொருள்***
> ***காத்தலும் பரத்தையர் கடனென மொழிப"*** *(அகப்.106)*

என்ற நூற்பாவழித் தலைவியை இகழ்தலும், தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுதலும் பரத்தையின் இயல்பு என அறிய முடிகிறது. இப்பரத்தையின் கூற்றின்படி, ***'தலைவனுக்கு வேண்டியன செய்து மிக்க மகிழ்ச்சியைத் தருபவள் தலைவியைவிட பரத்தையே'*** என்பது புலனாகிறது.

கற்பு வாழ்வினை எடுத்துரைப்பது முல்லைநிலப் பாடல்கள். எனவே பரத்தமை உரியதல்ல என்றாலும் ஓரிரு பாடல்களில் மட்டும் பரத்தமை இடம் பெற்றுள்ளமையால் அங்கும் பரத்தையர் இடையூறு காணப்பட்டமை அறியமுடிகிறது. பரத்தையர்ப் பிரிவைப் புலவர்கள் குறிப்பிடாமை இலக்கணத்திற்கு ஏற்ப இலக்கியம் அமைக்க முயன்றமை எனக் கருத முடிகிறது.

முல்லை நிலத்தின் உரிப்பொருளான இரங்கல் நிமித்தமாதலால் இந்நிலத்தில் பரத்தமை ஒழுக்கம் மிகக் குறைவாகவே இருந்து வந்தது.

### ***2.3.3 மருதநிலப் பரத்தையர் கூற்று:***

***'அன்பின் ஐந்திணை'***களில் தொல்காப்பியர் சுட்டிக் கூறிய நான்காவது மருதத்திணை ஆகும். வயல்சூழ் பகுதியும் மருத மரங்களும் மிக்கு இருந்தமையால் மருதம் எனப்பட்டது. செல்வம் மிகுந்த மருதத்திணையில் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர் என்பது வெளிப்படை.

மருதநிலத் தலைவன் பரத்தமையொழுக்கம் மேற்கொண்டமை எட்டுத் தொகை நூல்கள்வழிப் புலப்படுகிறது. ***"உரிப்பொருளானது முதல்***

***கருப்பொருள்களை நண்ணியது ஆகும். இதற்குத் தலைவனின் புறத்தொழுக்கம் அறிந்து அவனை வெறுத்துப் பழித்தல் என்னும் பொருளைத் தருகிறார்.”*** [16] உரிப்பொருள்களின் உணர்வு நிலைகளைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துவன கருப்பொருள்களேயாகும். முதற்பொருளுக்குப் பின்னே வரையறுக்கப்படுவது கருப்பொருளாகும்.

### *2.3.3.1 நற்றிணையும் பரத்தமையும்:*

சங்ககால மக்களின் ***‘நல்ல ஒழுக்கத்தைப்’*** பிரதிபலிக்கும் நூலாக ‘நற்றிணை’ திகழ்கிறது. கோண்மா நெடுங்கோட்டனார் பாடிய பாடல் ஒன்றில், தலைவிக்கு மகவு பிறந்ததை வெள்ளணி வழியாகத் தலைவனுக்குத் தோழி அறிவிக்கிறாள். தலைவனும் அதைக் கண்டவுடன் இல்லம் செல்கிறான். அதனை அறிந்த பரத்தை தலைவிக்குப் பாங்காயினாள் கேட்கத் ***‘தலைவன் தலைவிக்கு மகவு பிறந்ததனால்தான் அவன் இல்லம் சென்றான். அன்றி அவன் தன்னை விட்டு நீங்க மாட்டான்’ என்று கூறினாள். மேலும் அகன்ற நீர்த்துறை உடைய தலைவன் தனக்குப் புதல்வன் பிறந்தான் என்ற பெயருடன் மகிழ்ச்சியோடு இடையாமத்தில் கள்வன் போல் தன் இல்லத்திற்கு வந்தான்’*** எனக் கூறினாள். இதனை,

***“நெடு நா ஒள் மணி கடி மனை இரட்ட,***
***குரை இலைப் போகிய விரவு மணற் பந்தர்,***
***பெரும்பாண் காவல் பூண்டென, ஒருசார்,***
***திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப,***
***வெறி உற விரிந்த அறுவை மெல் அணைப்***
***புனிறு நூறு செவிலியொடு புதல்வன் துஞ்ச,***
***ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்***
***பசு நெய் கூர்ந்த மென்மை யாக்கைச்***
***சீர்கெழு மடந்தை ஈர்இமை பொருந்த,***
***நள்ளென் கங்குல், கள்வன் போல,***
***அகன் துறை ஊரனும் வந்தனன் -***
***சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே.”*** *(நற்.40)*

என்ற பாடல் உணர்த்துகின்றது. தலைவன் நடுயாமத்தில் தன் இல்லத்தை நாடி வந்தான் எனப் பரத்தை கூறுவதன்வழி தலைவன் இன்பம்

துய்ப்பதற்காகத் தன்னை நாடி வந்தான் என்று இகழ்ந்து கூறுவது அறியமுடிகிறது.

### *2.3.3.1.1 பரத்தையும் தலைவனின் நடுக்கமும்:*

தலைவனை அச்சுறுத்தும் பரத்தையைப் பரணரின் பாடல் ஒன்றில் காணமுடிகிறது. தலைவியின் செவ்வணி குறிப்புக் கண்டு தலைவன் அவன் இல்லத்திற்குச் சென்றான். அதனை அறிந்த பரத்தை, தலைவி வெறுப்படைதல் வேண்டும் என எண்ணினாள். தலைவியின் பாங்கான தோழி கேட்கும்படி தன் தோழியான விறலியிடம், **“ஊரன் என்னைப் பற்றி வளையைப் பறித்தனன்; அப்போது நான் இதனை உன் மனைவிக்குச் சொல்லுவேன் என்றேன். அது கேட்ட தலைவன் நடுங்கிய நிலையை நினைக்குந்தோறும் நகைக்கின்றேன்”** [17] என்று கூறி இகழ்ந்துரைத்தாள். தலைவன் நடுங்கிய செயலானது, வள்ளல் மலையமான் அவையின் நிகழ்ச்சியோடு ஒப்பிடப்படுகிறது. ***“ஊரின் எல்லையிலே உள்ள பல ஆனிரைகளை விற்போரை வென்று செலுத்திக் கொண்டு வருகின்றவனும். இரவலர்க்குத் தேர்க் கொடுக்கும் வள்ளன்மை உடையவனும் ஆன மலையமான் அவையில் வேற்று நாட்டிலிருந்து வந்த பெரிய இசையை உடைய கூத்தர் விரும்பி முழங்குகின்ற மத்தளத்தின் மார்ச்சனை வைத்த பக்கம் அதிர்வது போல் தலைவன் அதிர்ச்சியுற்று நடுங்கினான். அவன் நடுங்கி வருத்தமுற்ற நிலையை நினைக்கும்போதெல்லாம் நான் சிரிப்பேன்.”*** [18] என்று பரத்தை தலைவியின் தோழியிடம் கூறுவதை,

***“உள்ளுதொறும் நகுவேன் - தோழி - வள் உகிர்***
***மாரிக் கொக்கின் கூரல் அன்ன***
***குண்டு நீர் ஆம்பற் தண் துறை ஊரன்***
***தேம் கமழ் ஐம்பால் பற்றி, என் வயின்***
***வான் கோல் எல் வளை வெளவிய பூசல்***
***சினவிய முகத்து, ‘சினவாது சென்று, நின்***
***மனையோட்கு உரைப்பல்’ என்றலின், முனை ஊர்ப்***
***பல் ஆ நெடுநிரை வில்லின் ஒய்யும்***
***தேர் வண் மலையன் முந்தை, பேர் இசைப்***
***புலம் புரி வயிரியர் நலம் புரி முழவின்***

***மண் ஆர் கண்ணின் அதிரும்,***

***நன்னராளன் நடுங்கு அஞர் நிலையே”*** *(நற்.100)*

என்ற பரணர் பாடல் எடுத்துரைக்கிறது.

***“இதனை மனைவி கேட்பின் அவன்யார்மட்டும் வரம்பின்றி ஒழுகுபவன் என்று வெறுப்புத்தோன்றும். வெறுத்தவழி அவனை மீட்டுத் தான் அடையலாமென்றுகருதி இங்ஙனம் கூறினான். சினங்கொண்டு கூறின் உரை புலப்படாததால் சினவாதுசெல்வே னென்றான். தனது அன்பு தலைப்பிரியாக் கொள்கை தோன்று நன்னர் ஆளன் என்றாள்”*** [19] என்ற அ.நாராயணசாமியின் விளக்கம் தலைவனை வெறுக்கும் தலைவியின் புலம்பலைப் பரத்தையின் வாயிலாகக் காட்டுகின்றது.

இந்நிகழ்வை மு.கருணாநிதி தனது சங்கத் தமிழில், ***“சீச்சி! இவரும் ஒரு மனிதரா? என அவன் துணைவி வெறுப்பாளென்றும், காய்ச்சிய பால்மீண்டும் காராம் பசுவின் மடி புகுந்தது போல்; கைவிட்டுச் சென்ற தலைவன்; துணைவியைக் கைவிட்டுத் தன் கட்டிலறை நாடி ஓடி வருவான் என்றும்; கணக்கிட்டுக் கொண்டிருந்தாள் அக்கலையழகி”*** [20] என்று காட்டுகிறார். இதனால் மாவீரனாம் தலைவனின் அஞ்சும் குணத்தை எள்ளி நகையாடும் துணிவு கொண்டவளாகவும் தலைவனை யாருக்கும் விட்டுத் தராத மனம் கொண்டவளாகவும் பரத்தை உள்ளதை இப்பாடல் நிலைநிறுத்துகிறது.

மேலும் தலைவன் பரத்தையின் வளையல் பற்றியதைத் தலைவி அறிந்தாள். தலைவனை வெறுத்தாள். இதனால் தலைவன் தன்னையே நாடி வருவான் எனப் பரத்தை எண்ணியது இப்பாடல்வழி அறியமுடிகிறது.

கடுவன் இளமள்ளனாரின் பாடல் ஒன்றில் தலைவனின் செயலால் பரத்தையின் தாயும் சினம் கொள்வதாகக் கூறப்பட்டுள்ளது காதற்பரத்தையிடம் இருந்து தலைவன் அயற்பரத்தையிடம் சென்றான். இதனை அறிந்த காதற் பரத்தை சினம் கொண்டாள். அதனை அறிந்த தலைவன் காதற் பரத்தையின் சினம் தணிக்க எண்ணிப் பாணனைத் தூதாக அனுப்பினான். தூதாக வந்த பாணனிடம், காதற்பரத்தை, ‘பாணனே! தலைவன் ஊரார் பலரால் எள்ளி நகைத்தற்கு உரியவனாகிறான்.

தன்பெரும் யானைப் படைகளால் காவல் அதிகமுள்ள மதில்களையும் சிதைத்துப் பல அரண்களை வென்றவன் பாண்டிய மன்னன். அப்பாண்டியனை வாழ்த்தி வணங்கி நின்றால் குறுநில மன்னர்களுக்கு மீதமுள்ள மதில்களாவது எஞ்சும். கவலையும் கொள்ள வேண்டியதில்லை. அதுபோலத் தனது மென்மையான நடையும் கனைப்பும் கொண்ட குதிரை மீதேறி வந்த தன் தலைவன் கொண்டை மாலையையும் அழகு பொருந்திய கண்ணியையும் காட்டினான். இதனால் பரத்தையின் நெஞ்சினைப் பிரித்து அவனிடமாகக் கொண்டான். அப்பழி விடுவதற்குரியதா? என்று வினாவினாள். மேலும் பாணனும் அஞ்சுமாறு தாய் மிகுந்த சினத்துடன் நெருங்கிய கணுக்களை உடைய மூங்கில் கோலைக் கையில் கொண்டிருக்கிறாள். அதனால் அவனைத் (தலைவனை) தண்டித்தல் உறுதி ஆகும். ஆதலால் அவன் இனி இங்கு வரவேண்டா' என்று தடுத்தாள். இந்நிகழ்ச்சியை

***"நகை நன்கு உடையன் - பாண! –நும் பெருமகன்:***
***மிளை வலி சிதையக் களிறு பல பரப்பி,***
***அரண் பல கடந்த முரண் கொள் தானை***
***வழுதி, வாழிய பல! எனத் தொழுது, ஈண்டு***
***மன் எயிலுடையோர் போல, அ.்.து யாம்***
***என்னதும் பரியலோ இலம்' எனத் தண் நடைக்***
***கலி மா கடைஇ வந்து, எம் சேரித்***
***தாரும் கண்ணியும் காட்டி, ஒருமைய***
***நெஞ்சம் கொண்டமை விடுமோ? அஞ்ச,***
***கண்ணுடைச் சிறு கோல் பற்றிக்***
***கதம் பெரிது உடையவள், யாய் அழுங்கலோ இலளே"*** *(நற்.150)*

என்னும் பாடலால் அறியமுடிகிறது. ***'தாரும் கண்ணியும் காட்டி'*** என்ற அடியால், பரத்தையர் வேண்டும் பொருளை அவர் தம் ஏவற் பெண்டுகளிடம் அளித்து, அவர் விலை கூறி விற்கும் மாலையை வாங்கிப் பரத்தையரிடம் கொடுத்து முயங்கி மகிழ்வர் என்பது அறியமுடிகிறது. இது வள்ளுவர் வரைவின் மகளிரைப் ***'பொருட் பெண்டிர்'*** என்று குறிப்பிடுவதற்கு ஒப்பாகும்.

***'நெஞ்சம் கொண்டமை விடுமோ'*** என்றது, ***"பிறரிடத்துப் போகா நெஞ்சைக் கைக்கொண்டு இன்று கருதாமற் போகும் தீவினை விட்டுவிடுமோ? விடாது என உணர்த்தற்கு. முன்பு இப்பாணனே பரத்தையிற் கூட்டம் நிகழத் துணை செய்தனன். அதனால், 'பாண! நின்னைத் தீவினை விடாது' எனினும் அமையும். அன்னை சினத்தால் வருந்தும் என்றது பரத்தையை வருத்தும் எனவும் பொருள் தந்தது."*** [21] என கு.வெ.பாலசுப்ரமணியன் விளக்குகிறார். தலைவனைத் தன்னிடம் இருந்து பிரிக்க இயலாது என்பதை '***அந்தண் காவிரி போலக் கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின் யானே'*** (அகம்.76:11-13) என்றும், '***தோள் கந்தாகக் கூந்தலிற் பிணித்தவன் மார்பு கடி கொள்ளேனாயின்.......வருந்துகதில்லை'*** (அகம்:276:12-15) என்ற அடிகளால் ***'பரத்தை வஞ்சினம்'*** கூறியதையும் உணர முடிகிறது.

"***தலைவியை வரைந்து கொள்ளுதல் போலப் பரத்தைக் குலத்தாளையும் வரைந்து கொள்ளும் முறை உண்டு. அதனால் தலைவி போல் வரைவுப் பரத்தையும் உரிமை பெறுகின்றாள்" என்றும், "குதிரைத்தேர் ஏறி எம் சேரிக்கு வந்தான்; என் நெஞ்சம் பலர்பாற் செல்லாது தனக்கே ஒருமையாகக் கொண்டான் என்று கற்புடைமை விளம்புகின்றாள் பரத்தைக் குறுமகள். தன் ஒருமைப்போக்குத் தாய்க்குப் பிடிக்கவில்லை என்றும் அறிகின்றாள். ஐந்திணைக்கண் பாடுபெறும் பரத்தையின் பண்பு நலம் இது'***[22] என்று பரத்தையின் பண்பினை எடுத்துரைக்கிறார் வ.சுப.மாணிக்கம்.

தலைவன்மேல் அதிகக் காதல் கொண்ட காதற்பரத்தை ஒருத்தி, தலைவனுக்குப் பாங்காகும் பாணன் அல்லது தோழி விறலி கேட்கத் ***'தலைவன் தன்னைக் கூடி இன்பம் நுகராவிடினும் அவரைக் காணுதலே தனக்கு மகிழ்ச்சி தரும். அவ்வாறு காணாதபோது தனக்குத் துன்பமே மிகுகிறது'*** என வருந்திக் கூறுகிறாள். அதாவது, ***"தலைவர் தம் ஊடலைத் தீர்த்துக் கூடி இன்புறும், இணைவில் பொருந்தி தன்னிடம் வாரார் ஆயினும், அவர் மேனியை நோக்கிப் பலமுறை மகிழ்ந்துள்ளேன். அவ்வாறு காணத்தக்க அழகுடைய தலைவரைக் கண்டு கொண்டிருந்தால் உயிருடன் வாழ்தல் இனிதாய் இருக்கும். அவ்வாறு தான் காணமுடியவில்லை. கண்ணில் விழும் நுண்மையான தூசியையும் கை விலக்குவதைப் போலத்***

***தான் கொண்ட துன்பத்தைத் தன் தலைவர் நீக்காமல் போனாலும் அவர் இல்லாத ஊர் தனக்கு மிகுதியான துன்பத்தைத் தருகிறது."*** [23] எனச் ச.வே.சுப்பிரமணியன் விளக்கம் கூறுகிறார். இதன்வழி தலைவனைக் காண முடியவில்லை என்னும் பரத்தையின் ஏக்கம் திருமா உண்ணியின் வருத்தத்துடன் ஒப்பிடப்படுகின்றது. ***"குருகுகள் ஆரவாரம் செய்யும் வயற்கரையில் அமைந்ததும் கடவுள் நிலை பெற்றதும் நெருப்புப் போன்ற பூவை உடையதுமான வேங்கை மரம்; அதன்மீது கட்டிய பரணருகில், அயலான் ஒருவன் செய்த செயலால் தோன்றிய கவலை வருந்திட, மார்பகம் ஒன்றினை அறுத்த திருமாவுண்ணி நின்றிருந்தனள். அவளைப் பற்றிக் கேட்டறிந்தவர்கள் கேட்ட அளவில் விட்டுவிடுவர். அவளிடம் உண்மையான அன்புடையவர் மட்டுமே அவள் நிலைக்கு வருந்துவரேயன்றிப் பிறர் வருந்தார். அங்ஙனமே தலைவன் பிரிவால் தலைவி வருந்தினும் நான் படும்துயரம் கொண்டிலள்"***[24] என்கிறாள் பரத்தை. இப்பாடலில் திருமாவுண்ணி என்று குறிக்கப்பெறும் பெண் கண்ணகி என்பர். ***"கானவேங்கையின்கீழ் நின்ற காரிகையாகச் சிலப்பதிகாரமும் கூறுகின்றது."*** [25] காதற்பரத்தை தலைவன் வரவையும் அன்பையும் வேண்டி நிற்பதை மேற்கூறிய பாடல் உணர்த்துகிறது.

கபிலர், தமது பாடலில் பரத்தையின் கூற்றாகக் கூறுமிடத்தில், தலைவன் பரத்தையிடம் இருந்து பிரிந்து வேறொரு புதிய பரத்தையின் மனைக்குச் செல்வதை அறிந்த முதற்பரத்தை மிக்க சினம் கொண்டு அருகில் உள்ளோருக்கும் தலைவனுக்கும் கேட்கும்படியாகத் ***"திருவிழா இல்லாத இந்தக் காலத்தில் இவனால் காதலிக்கப்பட்ட இவள் தன்னை அழகுப் படுத்திக் கொண்டு தெருவிலே சென்றதனைக் கண்டு ஊரார் நகைத்தனர். குலமகளிரும் தத்தம் கணவரை இவளிடமிருந்து காத்துக் கொண்டனர். அவ்வாறிருக்க இவனை இவள் பற்றிக் கொண்டதில் வியப்பொன்றுமில்லை என இகழ்ந்து"*** [26] கூறினாள். தலைவனின் குணமாகக் கூறும் இச்செய்தியை,

***" விழவும் மூழ்த்தன்று, முழவும் தூங்கின்று;***
***எவன் குறித்தனள்கொல்? என்றி ஆயின்-***
***தழை அணிந்து அலமரும் அல்குல், தெருவின்,***
***இளையோள் இறந்த அனைத்தற்கு, பழ விறல்***

***ஓரிக் கொன்ற ஒரு பெருந் தெருவில்***
***காரி புக்க நேரார் புலம்போல்***
***கல்லென்றன்றால், ஊரே அதற்கொண்டு,***
***காவல் செறிய மாட்டி, ஆய்தொடி***
***எழில் மா மேனி மகளிர்***
***விழுமாந்தனர், தம் கொழுநரைக் காத்தே”*** *(நற்.320)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது.

ஔவையாரின் பாடலும் சங்ககாலப் பரத்தமையைக் காட்டுகின்றது. தலைவன், விழாக்களத்திற்கு வந்த புதிய பரத்தையை மணம் புரிவான் என எண்ணிய பரத்தை, புதுப் பரத்தைக்குப் பாங்காயினவள் கேட்குமாறு, ***“தோழி, வாளை மீன்கள் வாள்போன்று பிறழ, அவற்றை உண்ணாது பொய்கையில் நீர்நாய் தங்கித் தூங்கும். கொடையில் சிறந்த கிள்ளி வளவனின் கோயில் வெண்ணியை சூழ்ந்த வயல்களில் வெண்மையான ஆம்பல் விளங்கும். அந்த ஆம்பல் மலர்களைத் தழையுடையாக்கி மென்மையான அகன்ற அடிவயிறிடத்தே பொருந்த உடுத்துவர். அவ்வாறு உடுத்தி விழாக் கொள்ளும் களத்திற்குத் தானும் செல்ல வேண்டும். விழாக் களத்தில் புதிய பரத்தையருள் ஒருத்தி தோற்றப் பொலியுடன் செல்வதைப் புதிய வருவாயையுடைய ஊரன் கண்டால் ஏனையோரைக் காணாது அவளையே மணம் புரிவான். அதோடு அவளை விடுத்தலும் அவனுக்கு அரிதாகும். அவ்வாறு மணம்புரிந்து கொண்டால், மலை போன்ற யானையையும் வாய்மையையும் உடைய முடியனுடைய மலையிலுள்ள மூங்கில் போன்ற அழகுடைய நல்ல தோள்களைக் கொண்ட பெண்டிர் இரங்கத்தக்கவர். அம்மாதர் தோள்பலவும் நலனிழந்து நிற்பர்.”*** [27] எனப் பரத்தை கூறுவதை விளக்குகிறார் ச.வே.சுப்பிரமணியன். இச்செய்தியால் ***‘வரையாமையோ அரிதே’*** என்பது புதிய பரத்தையின் அழகைக் கூறி அவளையே மணம் புரிவான் எனக் குறிப்பதாகும். ***‘வாய்மொழி முடியன் என்பது தலைவன் வாய்மையற்றவன் என்பதைக் குறிப்பதாகும். நற்றோள் அளிய; தொலையுந பல எனப் பன்மையில் சுட்டிக் கூறியமையால், தலைவன் முன்பே பல மகளிரை மணம் புரிந்துள்ளான்; அவர்களும் நலம் இழப்பர்’*** என்று பரத்தை கூறும் இச்செய்தியினை,

***“வாளை வாளின் பிறழ, நாளும்***
***பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்***
***கை வண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த***
***வயல் வெள் ஆம்பல் உருவ நெறித் தழை***
***ஐது அகல் அல்குல் அணி பெறத் தைஇ,***
***விழவின் செலீஇயர் வேண்டும் மன்னோ;***
***யாணர் ஊரன் காணுநன் ஆயின்,***
***வரையாமையோ அரிதே வரையின்***
***வரைபோல் யானை, வாய்மொழி முடியன்***
***வரை வேய் புரையும் நல் தோள்***
***அளிய – தோழி! - தொலையுந பலவே”*** *(நற்.390)*

என்ற ஔவையாரின் பாடல் தெளிவுப்படுத்துகிறது.

***“பொய்கையில் வாளை பிறழ அதனைக் கொள்ளாத நீர்நாய் உறங்கும் என்றது, தலைவன் விழாக் களத்தே ஒருத்தியைக் கொள்ளவும், அவளைக் கடிந்து போக்காது பரத்தை தன் மனையகத்திருந்தனள்”*** [28] என்று உள்ளுறையாகக் கூறப்பட்டுள்ளமையால் இது தலைவி கூற்றிற்கும் பொருந்தும் எனக் கூறப்படுகிறது.

காதற்பரத்தை ஒருத்தி, தலைவனைப் புகழ்ந்து கூறலும் அறிய முடிகிறது. ஆலங்குடி வங்கனார் எழுதிய மருதப்பாடலில், தலைவன் பரத்தையைப் பிரியும்காலத்தே, ***‘ஊர! நீயின்றி நானிருப்பதில் தவறுமுண்டோ? நீ என் நெஞ்சிடமிருந்து நீங்க அறியவில்லையன்றோ’*** என்று தலைவனின் இன்றியமையாமையைப் பரத்தை கூறிப் புகழ்வதைப் பின்வரும் பாடலில் காணமுடிகிறது.

***“வாழை மென் தோடு வார்புறுபு ஊக்கும்***
***நெல் விளை கழனி நேர் கண் செறுவின்,***
***அரிவனர் இட்ட சூட்டு அயல், பெரிய***
***இருஞ் சுவல் வாளை பிறழும் ஊர!***
***நின்இன்று அமைகுவென்ஆயின், இவண் நின்று,***
***இன்னா நோக்கமொடு எவன் பிழைப்பு உண்டோ?***

***மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து***
***அறம் கெட அறியாதாங்கு, சிறந்த***
***கேண்மையொடு அணைஇ, நீயே***
***கெடு அறியாய் என் நெஞ்சத்தானே"*** *(நற்.400)*

என்ற இப்பாடலில், பெரிய வயற்பரப்பில் நெற்கதிர்களுடன் வளர்ந்த வாழையின் மடலில் வளர்ந்த பூவினை வளர்ந்த முற்றிய நெற்கதிர்கள் அசைக்கும். முற்றிய நெற்கதிரை வயல் சேற்றில் நின்று மள்ளர் கதிர் அறுப்பர். மள்ளர்கள் அறுத்துப் போட்ட சூட்டில் வாளைமீன் பிறழும் ஊருக்குரிய தலைவனே! ***"நீ இல்லாமல் நான் இங்கிருந்தால் பலரும் இன்னாச் சொற்களைக் கூறும் நிலையில் வாழ்வும் உண்டா? வீரம் பொருந்திய சோழரின் உறையூர் அவைக் களத்தே அறம் நீங்குதலை அறியாதவாறு சிறந்த நட்புடன் அளவளாவி நீ என் நெஞ்சத்தில் இருந்து நீங்கிட, நீயும் அறியவில்லை அல்லவா?"*** [29] என்று கூறுகிறாள். சோழரின் அவைக் களத்தில் அறம், நட்பு நீங்காது போல் தலைவனும் தன்நெஞ்சத்தை விட்டுப் பிரியமாட்டான் என்று பரத்தை நம்புகிறாள்.

ஆலங்குடி வங்கனாரின் பாடலில், ***"அன்பும் பெருமிதமும் தலைமையும் உடைய பரத்தை மாதுக்களைக் கற்கின்றோம். 'நீயின்றி எனக்கு வாழ்வுண்டோ? சோழரின் அவையத்து அறமாறியதில்லை. அதுபோல் கெடுவறியாய் என் நெஞ்சத்தானே' என்று கற்புடைமை விளம்புவாள் ஒரு பரத்தை"*** [30] என வ.சுப.மாணிக்கம் கூறுவதைக் காண முடிகிறது.

***"வாழையினது பூவை அசைக்கின்றனவாகிய வயலில் உண்டாகும் நெற்கதிர்கள் மள்ளர்கள் அறுத்துப் போகட்ட அரிச்சூட்டின் அயலின்கண்ணே வாளை பிறழுமென்றது. தலைவியினது நெஞ்சை வருத்துகின்றனவாகிய காதற்பரத்தையின் செய்கைகளை வாயில்கள் அடக்க அவள் நெஞ்சிலே தலைவன் விளங்கலாயினனென்பதாம்"*** [31] எனத் தலைவனைப் புகழும் பரத்தையின் மொழியினைக் காட்டுகிறார் அ.நாராயணசாமி ஐயர்.

நற்றிணை மருதத்திணைப் பாடல்களில், பரத்தை தலைவன் செயலுக்கு எள்ளி நகையாடுபவளாகவும், தலைவனே அச்சம் கொள்ளும்படி பேசும் உரிமை கொண்டவளாகவும், பரத்தையின் தாய், சினந்து

தலைவனுக்குத் தண்டனை தருபவளாகவும், தலைவன் தன்னைக் கூடவில்லை எனினும் தன்னுடன் இருந்தாலே போதும் என ஏங்குபவளாகவும், தலைவியிடம் இருந்து தலைவனைக் கைப்பற்றும் திறம் கொண்டவளாகவும் புதுப் பரத்தையை மணக்க விரும்பும் தலைவனைக் கடிந்து கொள்பவளாகவும், தலைவனைப் புகழ்ந்து பேசுபவளாகவும் உலா வருவதைக் காண முடிகிறது.

இத்திணைப் பரத்தை தலைவன்மீது காதல் கொண்டவளாகவும் தலைவன் செயலை எள்ளி நகையாடுபவளாகவும், தலைவியிடம் கூறிவிடுவேன் என்று தலைவனையே அச்சுறுத்துபவளாகவும், தலைவியிடம் இருந்து தலைவனைக் கைப்பற்றும் திறம் கொண்டவளாகவும் வலம் வருகிறாள். நற்றிணை வாயிலாகத் தலைவனைக் கடிந்து கொள்ளும் உரிமை பரத்தைக்கு மட்டுமின்றிப் பரத்தையின் தாய்க்கும் உண்டு என்பதை அறியமுடிகிறது.

***குறுந்தொகை மருதநிலப் பரத்தையர்:***

***"நல்ல 'குறுந்தொகை' என்ற அடைமொழியுடன் சிறப்பிக்கப்பெற்ற குறுந்தொகையின் ஐந்திணைப் பாடல்கள் நான்கடியைச் சிற்றெல்லையாகவும் எட்டடியைப் பேரெல்லையாகவும் உடையவை. குறுந்தொகை நூலைத் தொகுத்தவர் பூரிக்கோ என்றும் இந்நூலின் பாடல்களைப் பாடியோர் இருநூற்றைவர் என்றும் பழங்குறிப்பு ஒன்று காணப்படுகிறது."*** [32] ***"இந்நூலின் பாடல்கள் பல. பல உரையாசிரியர்களால் பல்வேறு உரை விளக்கங்களில் மேற்கோளாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. இந்நூலின் நூற்று அறுபத்தைந்து செய்யுள்களே மேற்கோளாகப் பயன்படுத்தப் பெறாதவை."*** [33] இதனால் 336 குறுந்தொகைப் பாடல்கள் மேற்கோள்களாகப் பயன்படுத்தப்பெற்றன. இத்தகு சிறப்பு மிகு குறுந்தொகையில் மருதத்திணையில் பரத்தையர் கூற்றாக நான்கு பாடல்கள் மட்டும் உள்ளன. அவற்றுள் ஔவையாரே இரு பாடல்கள் பாடியமை குறிப்பிடத்தக்கது. ***'மருதஞ் சான்ற மருதம்'*** (கஅகூ) என்ற சிறுபாணாற்றுப்படை அடிக்கு"***ஊடியுங் கூடியுங் போகநுகருந் தன்மையமைந்த மருத நிலம்' என்னும் உரையும் ஈண்டு நோக்கற்பாலன"*** [34] என்பர்.

மருதத்திணையில், தலைவியாலும் மற்றொரு பரத்தையாலும் தான் இகழப்படும்போது பரத்தை கூற்று நிகழ்த்துகிறாள்.

*2.3.3.2.1 பழிப்புரைக்குப் பதிலுரை:*

தலைவி தன்னைப் பழித்துக் கூறினாள் என அறிந்த காதற்பரத்தை, தலைவியும் அவள் சுற்றத்தாரும் கேட்கும்படியாகத் ***'தலைவன் அவன் இல்லத்தில் தலைவிக்கு அஞ்சி வாழ்பவன்; ஆனால் தன் இல்லத்தில் அவன் விருப்பப்படி வாழ்ந்து இன்பம் பெற்று மகிழ்பவன்'*** என்று கூறுவதைக்

***"கழனி மாத்து விளைந்துஉகு தீம்பழம்***
***பழன வாளை கதூஉ மூரன்***
***எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்***
***கையுங் காலுந் தூக்கத் தூக்கும்***
***ஆடிப் பாவை போல***
***மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே"*** *(குறுந்.8)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில், மாமரம் நிறைந்த வயலின் மாங்கனி பழுத்து முற்றி அருகில் உள்ள நீர்நிலையில் விழும். அதனை 'அங்கு வாழும் வாளை மீன்கள் எளிதில் உட்கொள்ளும். இது இயற்கையாய் நடக்கும் நிகழ்வாகும். அவ்வாறுதான் தலைவனும் மிக எளிதாய்ப் பரத்தையிடம் இன்பம் நுகர ஏதுவானான். மேலும் தலைவன் தம் இல்லத்தில் வரும்போது இனியமொழி பேசி அவன் விரும்பும் வண்ணம் இருந்தான். ஆனால் தலைவன், அவனது இல்லத்துக்குச்சென்றால், தலைவி கூறுவதைக் கேட்டுக் கையும் காலும் தூக்கும் பொம்மையைப் போல் நடந்து கொள்வான் எனக் கூறி, தலைவனது அஞ்சும் செயலை எள்ளி நகையாடுகிறாள் பரத்தை.

மனையறம் பூண்டொழுகும் தலைவி தன் மகனுடன் வாழும் இடம் தலைவனது இல்லம். பரத்தை ***'தன் புதல்வன் தாய்க்கே'*** என்றதால் தலைவி மகப்பேறு பெற்றவள் என்றாகிறது. தன் மகனைக் கவனிப்பதே இயல்பாதலால் தலைவனுக்குத் தன்னைப் போல் இன்பம் தந்து மகிழ்விக்க இயலாதவள் எனத் தலைவியைக் காதற்பரத்தை இகழ்ந்துரைப்பதையும் அறிய முடிகிறது. **'பழன வாளை கதூஉம் ஊரன்'** என்ற வரியால் வாய்ப்பு

கிடைக்கும்போதெல்லாம் தலைவனிடம் இன்பம் துய்ப்பதே பரத்தையின் இயல்பு என்பது வெளிப்பாடு. தலைவனின் மனைவியைத் ***'தலைவி'*** எனக் கூறாது ***'தன்புதல்வனின் தாய்'*** எனப் பரத்தை கூறுவதில் அவளது ***'செருக்கு'(உரிமை)*** வெளிப்படுகிறது.

***"இனிதுறு கிளவியும், துனியுறு கிளவியும் உவம மருங்கில் தோன்றும் என்ப" (தொல்.உவமஇயல்.28) என்பதால் இப்பாடல், இனிதுறு கிளவி பற்றி வந்த உள்ளுறை உவமம் எனப் பேராசிரியர் விளக்குவர். இப்பாடலைக் காமக் கிழத்தியர் தலைவனை இகழ்ந்தது என இளம்பூரணரும், இல்லிடத்திருந்து தலைவனும், தலைவியும், ஊடியும், கூடியும், உணர்த்தியும் செய்த தொழில்களைக் கேட்டுக் காமக்கிழத்தி இகழ்ந்தது என நச்சினார்க்கினியரும் விளக்குவர்"*** [35] (தொல்.*கற்பியல்* 10).

***"பலவகை இன்பமும் வருந்தாது பெறுவரென்பதனைப் புலப்படுத்தி நிற்றலின் இனிதுறு கிளவிபற்றி உள்ளுறை உவமம் தோன்றியது"*** [36]

இப்பாடலுக்குத் தமிழண்ணல் தமது உரையில், ***"கழனி மாம்பழத்தைப் பொய்கை வாளை எளிதில் கவ்வுமாறு அது அங்கு விழுந்தது. பரத்தை, தலைவனை அவன் மனைவியிடமிருந்து எளிதிற் பற்றி இன்பந் துய்த்ததை இது சுட்டுவதால் உள்ளுறை ஆகிறது. பரத்தை கூற்றாதலின் தானே பழுத்து விழுந்த கனியைக் கவ்வியது, வாளை மீனின் குற்றமன்று என்ற குறிப்புத் தொனிக்கிறது"*** [37] என்கிறார்.

மு.கருணாநிதியின் சங்கத் தமிழில் இந்நிகழ்வை ***"கட்டிலுக்குத் துணையாய் வாய்த்த மங்கை – பிள்ளைத் தொட்டிலுக்கு முழுநேரக் காவல் ஆனாள்."*** [38] என்று தலைவியின் பிள்ளைப்பேறு காரணமாகத்தான் தலைவன் பரத்தையை நாடினான் என்பதை அறுதியிட்டுக் காட்டுகிறார். மேலும் ***"கலைமகளாய் மாற்றம் பெறக் கனவுகண்டேன்; ஆனால் விலைமகளாகவே வாழ்க என்று, வாணன் வாழ்த்திவிட்டான்; அந்த வீணன் வாழ்க நன்று!"*** [39] என்ற கவிநயம் மிக்க வரிகளால் பரத்தையின் ஒருமைப் போக்கையும் தலைவனின் பிரிவால் ஏங்கும் பரத்தையும் அவை நிறைவேறாததால் தலைவனைத் தூற்றுபவளாகவும் சித்திரித்துக் காட்டுகிறார்.

தலைவனின் ஆசையும் சுதந்திர எண்ணமும் பரத்தையின் மனையிலே நிறைவேறுகின்றன. பரத்தை சிறிதும் முயற்சி செய்யாமலே எளிதில் தலைவன் கிடைத்ததால் மகிழ்கிறாள். இதில் பரத்தை தனது தவறு ஏதுமில்லை என்பதனையும், தலைவனின் இன்பமும் தனதின்பம் என்றும் எடுத்துரைப்பதாக ஆலங்குடி வங்கனாரின் பாடல் அமைகிறது.

இக்கருத்தை ஒட்டியே மாங்குடி மருதனாரின் பாடலும் அமைகிறது. காதற்பரத்தை தலைவியின் பாங்காயினாள் கேட்கும்படி, தலைவி, தன் அறியாமையால் பரத்தையான தம்மைப் பழிக்கிறாள். தலைவி வெறுக்கும்படியோ, பழிக்கும்படியோ தாம் எத்தவறும் செய்யவில்லை. மாம்பழம் பழுத்துத் தானாக வந்து அருகில் உள்ள நீர்நிலையில் விழ அங்கே துள்ளித்திரியும் வாளைமீன் கவ்வித் தின்கின்றது. இது வாளை மீனின் குற்றம் அன்று. அதே போல் தலைவனும் தானாகத் தம்மிடம் தேடி வந்ததால்தான் இன்பம் துய்த்தோம். இது அறியாமல் தலைவி தங்களைப் பழிக்கிறாள். அவர்கள் (பரத்தையர்) யாரும் தலைவனைக் கைக் கொள்ளவில்லை என்று பரத்தை சூள் உரைப்பதைக்

***“கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூன் மடநாகு***
***துணர்த்தேக் கொக்கின் றீம்பழங் கதூஉம்***
***தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது***
***தண்பெரும் பவ்வ மணங்குக தோழி***
***மனையோள் மடமையிற் புலக்கும்***
***அனையே மகிழ்நற்கியா மாயின மெனினே!”*** *(குறுந்.164)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலிலும் மாம்பழம் தலைவனாகவும் வாளைமீன் காதற்பரத்தையாகவும் உள்ளுறை கூறப்பட்டுள்ளது. ***“அவள்(தலைவி) வெறுக்கும் அளவுக்கு எக்குற்றமும் நாங்கள் செய்யவில்லை. அவ்வாறு செய்துள்ளோமாயின் செய்திருந்தால் திரட்சியுள்ள கொம்பையுடைய கருப்பம் உடைய இளம்பெண்வாளை, கொத்தாக உள்ள மாமரத்திலிருந்து உதிர்ந்த இனிய கனியைக் கவ்வும்படியான மிகப் பழமைவாய்ந்த குடிகளாகிய வேளிரது குன்றூர்க்குக் கிழக்கில் உள்ள குளிர்ந்த பெரிய கடல் எம்மைத் துன்புறுத்துமாக”*** [40] எனப் பரத்தை கூறுவதாகச் ச.வே.சுப்பிரமணியன் விளக்குகிறார்.

மாங்குடி மருதனின் இப்பாடலில் தலைவனைத் தான் வலிய சென்று கைக்கொள்ளவில்லை. தலைவியைத் துன்புறுத்தும் இத்தவறினைத் தான் செய்திருப்பின் இறைவன் (கடல்) தன்னைத் தண்டிக்கட்டும் என்று பரத்தை கூறுகிறாள். பரத்தையின் இக்கூற்றால் சங்ககாலத்தில் பரத்தை இரக்கக்குணம் கொண்டவளாகவும், கடவுள் நம்பிக்கை கொண்டவளாகவும், தவறு செய்ய அஞ்சுபவளாகவும் வாழ்ந்து வந்தமை உணர முடிகின்றது.

***2.3.3.2.2 பரத்தையின் துணிவு:***

கிழத்தி தன்னைப் புறன் உரைத்தாள் எனக் கேட்ட காமக் கிழத்தி சினம்கொண்டு கூறுவதைக் கீழ்வரும் பாடல் எடுத்துரைக்கிறது:

***"கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்***
***பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி***
***யாம.: தயர்கஞ் சேறுந் தான.:***
***தஞ்சுவ துடைய ளாயின் வெம்போர்***
***நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி***
***முனையான் பெருநிரை போலக்***
***கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே".*** *(குறுந்.80)*

பரத்தையர் தலைவனுடன் புனலாடச் செல்லும்போது ஆம்பல் தழையால் புனையப்பெற்ற விசேட ஆடையாகிய தலையாடையை அணிவர். அவ்வாடை இளைஞர்களைக் கவரக் கூடியதாகும். அத்தகைய அழகான தழையாடையை அணிந்து தலைவனுடன் புனலாடச் செல்வதாகக் கூறினாள் காமக்கிழத்தி. இதனை அறிந்த தலைவி தலைவனைக் காத்தல் அரிது என அஞ்சுகிறாள். ***"கடுமை மிக்க போரில் நடுவில் நின்று பகையை அழித்து வெல்லும் பல வேற்படைகளையுடைய எழினி, போர் முனையில் தன் பெரிய ஆநிரைக் கூட்டத்தைக் காத்ததுபோல, தன் கணவன் மார்பைத் தனது சுற்றத்தோடும் வந்து காத்துக் கொள்க!"*** [41] எனத் தலைவிக்குச் சவால் விடுவதாகப் பரத்தைக் கூற்று அமைந்துள்ளது. இப்பாடல் பரத்தையின் துணிவை வெளிப்படுத்துகின்றது. இப்பாடலில் ***'கிளையொடும் காக்க'*** என்று வஞ்சினம் கூறியதால், தலைவியால் காக்க இயலாது என்பது குறிப்பாக அமைகிறது. எழினியிடமிருந்து பசுக்கூட்டத்தைப் பகைவராலும் காக்க

இயலாது என்பது உறுதி. ஆதலால், இதனையே சான்றாகக் காட்டுகிறார் ஔவையார்.

*2.3.3.2.3 சேரிப்பரத்தையும் காமக்கிழத்தியும்:*

பரத்தையர் இருவருக்குள் உரை நிகழ்வதை ஔவையாரின் மற்றொரு பாடல் வழியாக அறிய முடிகிறது. சேரிப்பரத்தை தன்னைப் புறங் கூறினாள் எனக் கேட்ட காமக்கிழத்தி அவளுக்குப் பாங்காயினாளிடம், பின்னிக் கிடக்கும் பரப்பங்கொடி போன்ற கோடுடைய நீர்நாய்க்கு வாளைமீன் பகலிலே உணவாகக் கிடைக்கப் பெறும் பெருமை உடையவன் மருத நாட்டுத் தலைவன். பொன்னால் செய்த ஒளி பொருந்திய தொடிஅணிந்த தகுதியுடைய சேரிப்பரத்தை தன்னைப் புறம் கூறுவதாகக் கூறினாள். இதனைத் தெளிவுபடுத்த வளைந்த மணிக்கட்டுப் பொருந்திய பருத்த தோளையும் ஒளி பொருந்திய வளையல்களையும் உடைய மகளிர் கைகோர்த்து ஆடும் துணங்கைக் கூத்து ஆடும் நாள் வந்து விட்டது. அப்போது அப்பரத்தை கண்முன்னே தலைவன் தனக்குத் தலைக்கை தந்து ஆடுவதை மள்ளர்களின் சேரிப்போர் நடைபெறுமிடத்தில் காணலாம் எனக் காமக்கிழத்தி கூறுகிறாள். இதனை,

***"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்***
***வாளை நாளிரை பெறூஉ மூரன்***
***பொற்கோ லவிர்தொடித் தற்கெழு தகுவி***
***எற்புறங் கூறும் மென்ப, தெற்றென***
***வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்***
***துணங்கை நாளும் வந்தன அவ்வரைக்***
***கண்பொர மற்றதன் கண்ணவர்***
***மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே"*** *(குறுந்.364)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது.

இற்கிழத்தியான தலைவி போல் தானும் தலைவனுக்கு உரிமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பெருமிதத்தால் காமக்கிழத்தி சேரிப் பரத்தையை இகழ்கிறாள். அவளொடு எந்த விதத்திலும் பொருந்தாத தன்னை ஒப்பக் கருதிக் கூறும் சேரிப்பரத்தைமீது சினம் கொள்கிறாள். இவ்வாறு

தலைவனிடத்தே தலைவிக்கு அடுத்து உரிமை பெற்றவளாய்க் காமக் கிழத்தி இருந்து வந்தாள் என்பது தெளிவாகிறது.

குறுந்தொகை மருதத்திணை பரத்தையர் காதற்பரத்தையாகவும் காமக் கிழத்தியாகவும் உலா வருவதைக் காட்டுகிறது. காதற் பரத்தை தலைவனைத் தான் பேணினாளும் தலைவன் தலைவியின் சொல்லுக்குக் கட்டுப்பட்டவனாய் இருப்பதாக கூறி இகழ்வதும், முடிந்தால் தலைவனைக் காத்துக் கொள்ளும்படிச் சவால்விடுவதும் துணங்கைக் கூத்தில் தலைவனுடன் தானே ஆடுபவள் என்றும், தலைவன் தானே தன் இடம் தேடி வந்ததாள், அது தன் குற்றம் அன்று எனவும் கூறுவதையும் காணமுடிகிறது.

### *2.3.3.3 ஐங்குறுநூறு மருதத்தில் பரத்தமை:*

ஐங்குறுநூறு மருதத்திணையில் நூறு பாடல்கள் உள்ளன. இப்பாடல்களை ஓரம்போகியார் பாடியுள்ளார். பரத்தையர் கூற்றாக வரும் பாடல்கள் மொத்தம் இருபத்திரண்டு. அவற்றுள் ***'தோழிக்கு உரைத்த பத்தில்'*** நான்கு பாடல்கள் (37-40) ***'புலனாட்டுப்பத்தில்'*** இரண்டு பாடல்கள் (77,78) ***'புலவி விராயப்பத்தில்'*** ஆறு பாடல்கள் (81,86-90) எனப் பன்னிரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

#### *2.3.3.3.1 காதற்பரத்தையரின் இயல்பு:*

தோழிக்கு உரைத்த பத்தில் இடம் பெறும் பரத்தை காதற்பரத்தை ஆவாள். இவர்களை ***"காதற் பரத்தை சேரிப்பரத்தையின் மகளாகித் தலைவனையே விரும்பி மற்றவரை விரும்பாதவள்."*** [42] என்று அ.மாணிக்கம் விளக்குகிறார். இக்காதற்பரத்தையரே ஐங்குறுநூறு மருதத்தில் காணப்படுகின்றனர்.

#### *2.3.3.3.2 சூளை பொய்யாக்கும் தலைவன்:*

***'தோழிக்கு உரைத்த பத்தில்'*** காதற்பரத்தை கூற்றாகச் சில செய்திகள் காணப்படுகின்றன. தலைவன் பரத்தையிடம் இருந்து பிரிந்து மீண்டும் தலைவியையே அடைகிறான். தலைவியின் ஊடல் தீர்க்க எண்ணிய தலைவன், தலைவியிடம் ***'இனி அவளை விட்டுப் பிரியமாட்டேன்'***

எனச் சூள் உரைக்கிறான். இதனை அறிந்த பரத்தை, தலைவியும் தோழியும் கேட்குமாறு பேசுவதை,

> ***“அம்ம வாழி தோழி மகிழ்நன்***
> ***நயந்தோ ருண்கண் பயந்து பனிமல்க***
> ***வல்லன் வல்லன் பொய்த்தல்***
> ***தேற்றானுற்ற சூள்வாய்த் தல்லே!”*** *(ஐங்.37)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. அதாவது ***“தோழியே! கேள்! மகிழ்நன்*** **தான் செய்த சூள் பொய்க்காத வகையில் ஒழுகுவதைத் தெளியான் ஆயினும் தன்னைக் காதலித்தவருடைய உண்கண் பசந்து நீர்த்துளி சொரியும் வண்ணம் அந்தச் சூளுரையைப் பொய்த்து விட நீங்குவதில் வல்லவனாக உள்ளான்”** [43] என்று அ.மாணிக்கம் விளக்குகிறார். இதனின்று, தலைவன் தான் உரைத்த சூளுரையைப் பொய்த்து விடும் தன்மையன எனப் பரத்தை கூறுவது அறிய முடிகிறது. மேலும் **‘வல்லன் வல்லன் பொய்த்தல்’** – என்பதனால், புலவியும் ஊடலும் நிகழும் போதெல்லாம் தலைவன் இவ்வாறு சூள் உரைப்பதும், மீறுவதும் ஆகத் தொடர்ந்து நிகழ்வது இயல்பு எனவும் உணரமுடிகிறது.

தலைவன் தன்னை விடுத்துத் தன் இல்லம் செல்ல விரும்பினான் எனக் கூறிய தனதுதோழியிடம் பரத்தை, ***“தோழியே! கேள்! குளிர்ந்த மாந்தளிர் போன்ற மேனியும், ஒளியுடைய தொடி அணிந்த முன்கையும் உடைய யாம் ஆற்ற மாட்டாமல் அழும்படி பிரிய எண்ணுவதால் மகிழ்நன், தான் தெளிவிக்கக் கூறுவனவற்றைத் தெளிந்து அமைதி பெறும் மங்கையரின் அன்பை அறிகின்ற அறிவு இல்லாதவன் ஆவான்”*** [44] என்று கூறுகிறாள். இந்நிகழ்வை

> ***“அம்ம வாழி தோழி! மகிழ்நன்***
> ***தன்சொ லுணர்ந்தோ ரறியல னென்றுந்***
> ***தண்டளிர் வெளவு மேனி***
> ***ஒண்டொடி முன்கை, யாமழப் பிரிந்தே.”*** *(ஐங்.38)*

என்ற பாடல் விளக்குகிறது. தலைவனின் பிரிவை விரும்பாத பரத்தை ***‘தன்னைவிட்டுத் தலைவன் பிரிந்தால் அழுவேன்’*** என்று கூறுவதால்

தலைவன்மேல் அவள் மிக்க காதல் கொண்டிருப்பது இப்பாடல்வழி வெளிப்படுகிறது. மேலும், தலைவன் தன் அன்பை உணர்ந்தால் தன்னை விட்டுப் பிரியான். தான் அழும் வண்ணம் தலைவன் தன்னைவிட்டுப் பிரிதலால் அறிகின்ற அறிவு இல்லாதவனாய், அத்தலைவன் இருக்கிறான் என்று பரத்தை கூறுகிறாள். இதனால் தலைவனைக் கடிந்து கொள்ளும் உரிமையும் இகழந்து கூறும் தன்மையும் உடையவள் பரத்தை என்பது புலனாகிறது.

தன் இல்லம் சென்ற தலைவன் அங்குத் தலைவியைக் கூடி மகிழ்ந்தான். இதனைத் தலைவியின் தோழிவாயிலாக அறிந்த பரத்தை தன் தோழியிடம், **“தோழி! நம் தலைவன் விருப்பத்துடன் நம் மார்பை இறுகி அணைத்து இன்புற்றவன். நம் அணிகள் நெகிழப் பருத்தத் தோள்கள் மெலிய பிரிந்தாலும் உள்ளத்தால் நம்மைப் பிரியவில்லை”** [45] எனக் கூறுவதைப் பின்வரும் பாடல்வழி அறியமுடிகிறது:

***“அம்ம வாழி, தோழி! யூரன்***
***வெம்முலை யடைய முயங்கி நம்வயின்***
***திருந்திழைப் பணைத் தோள் நெகிழப்***
***பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே!*** *(ஐங்.39)*

மேலும் தலைவனின் இப்பிரிவு தற்காலிகமானதுதான் என்றும் மீண்டும் விரைவில் தன்னை வந்து அடைவான் என மிக உறுதியாகக் கூறுகிறாள் பரத்தை. ஆதலால், தலைவனின் இப்பிரிவு நெஞ்சத்தால் அன்றி உடலால் மட்டுமே நிகழ்ந்தது ஆகும் எனப் பரத்தைப் நம்புவதை இப்பாடல் உணர்த்துகிறது. தலைவனின் பிரிவை ஆற்றிக் கொள்ள இயலாத பரத்தையை அடுத்த பாடலில் காணமுடிகிறது. தன்னை விட்டுப் பிரிந்து தலைவியிடம் சென்ற தலைவன், அங்கேயே தங்கிவிட்டான் என அயற் பரத்தையர் பலர் கூறியதைக் கேட்ட காதறபரத்தை, ***“தோழியே! கேள்! கெண்டைமீன் பாய்வதால் மலர்ந்த வண்டு விரும்பும் ஆம்பல் மிக்க நாடு உடையவன் தலைவன். அவன் ஒளியுடைய தொடியை அணிந்த முன்கையையுடைய யாம் அழும்படி பிரிந்து போய்த் தன் மனைவி வாழும் வீட்டை அடைந்து அவளைப் பிரியாமல் அங்கே தங்கினான் என***

***அயற்பரத்தையர் உரைப்பர். இ்.து ஏன்? கூறுக”*** [46] எனத் தன் தோழியை நோக்கி வினவுவதை,

***“அம்ம வாழி, தோழி! மகிழ்நன்***
***ஓண்தொடி முன்கை யாமழப் பிரிந்துதன்***
***பெண்டி ரூரிறை கொண்டனன னென்ப***
***கெண்டை பாய்தர வவிழ்ந்த***
***வண்டுபிணி யாம்பல் நாடுகிழ வோனே!”*** *(ஐங்.40)*

என்ற பாடல் புலப்படுத்துகிறது. தலைவன் பிரிவைத் தாங்க இயலாத பரத்தையின் இயல்பை இப்பாடலில் காண முடிகிறது.

***“வண்டுபிணி ஆம்பலையுடைய ஊரன் எனவே ஆம்பல் வண்டு ஓரோவழி பிறவிடங்களினும் செல்லுவதுண்டாயினும் அவற்றை மீண்டும் தம்பால் வருவித்துக்கொள்ளும் இயல்புடைய தேனைத் தன்பால் உடையவாய் அவற்றைப் பிணித்துக் கொள்ளுதல் போன்று தலைவன் உலகியல்பற்றித் தன்மனைக்கண் சென்றானாயினும், மீண்டும் எம்மனைக்கு வருமாறு செய்யும் பெண்மை நலமும் பேரழகும் உடையேம் யாம் என்பது உள்ளுறை”*** [47] என பொ.வே.சோமசுந்தரம் கூறுகிறார்.

தலைவன் தமக்கும் உரியவன் எனக் கருதும் காதற்பரத்தையைப் பிரிந்த தலைவன் மீண்டும் தன்னிடத்தே வருமாறு செய்யும் அழகும் பெண்மை நலனும் தம்மிடத்தே உள்ளதாகக் கூறுவது புலப்படுகின்றது.

***2.3.3.3.3 புனலாடலும் பரத்தையும்:***

காதற் பரத்தை ஒருத்தி, ஊரார் அலர் கூறத் தம்முடன் தலைவன் நீராட வேண்டும் எனக் கூறியமை பின்வரும் பாடல்களில் காண முடிகிறது. தலைவன் தலைவியுடன் புனலாடினான் எனக் கேட்ட பரத்தை, தலைவனுடன் இனி நீராடக் கூடாது என ஊடல் கொண்டிருந்தாள். அதனை அறிந்த தலைவன் பரத்தையின் ஊடல் நீக்க எண்ணிப் பரத்தையை நீராட அழைத்தான். அதற்குப் பரத்தை தலைவனிடம் அவன் தன் இல்லத்துக்குப் போகாமல் பலரும் காணும்படி தன்னுடன் (பரத்தையுடன்) வந்து நீராட வேண்டும் எனக் கூறுவதைக் கீழ்வரும் பாடல் புலப்படுத்துகிறது.

***"அம்ம வாழியோ மகிழ்ந நின்மொழிவல்***
***பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி***
***நின்னொடு தண்புன லாடுதும்***
***எம்மொடு சென்மோ செல்லனின் மனையே!"*** *(ஐங்.77)*

'***பேரூர் அலர்எழ நீரலைக் கலங்கித் தாம் தலைவனுடன் நீராடலை ஊரார் கண்டு அலராகப் பேச வேண்டும்'*** என்னும் பரத்தையின் விருப்பத்தை இப்பாடலில் காணமுடிகிறது.

தலைவனைப் புனலாட அழைத்த பரத்தை, ***"மகிழ்ந! நின் இல்லத்துக்குப் போய் நின் மனைவியுடன் கூடிப் புனலாடுவதை விடுத்து எம்முடன் வந்து, புணையைப் போன்ற எம் தோளைப் பற்றிப் புனல் ஆடுவாயாயின், யாம் ஒளி வீசும் இலையையுடைய நீண்ட வேலும் விரைவான ஓட்டத்தையுடைய குதிரையையும் உடைய கிள்ளியின் பகைவரின் மதிலை அழிக்கும் யானைபோல் தன்னெறியில் விரைந்து வந்து கரையை அழிக்கும் புதிய நீரில் நின்னுடன் ஆடுவோம்!"*** [48] என்று அ.மாணிக்கம் கீழ்வரும் பாடலுக்கு விளக்கம் தருகிறார்:

***"கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி***
***மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த***
***சிறையழி புதுப்புன லாடுகம்***
***எம்மொடு கொண்மோவெந் தோள்புரை புணையே"*** *(ஐங்.78)*

இப்பாடலில் சோழமன்னன் கிள்ளியின் போர்த்திறன் உள்ளுறையாக வைத்துப் பாடப்பட்டுள்ளது. இலை வடிவுடைய வேலையும், விரைந்து ஓடும் குதிரைகளையும் கொண்ட கிள்ளி வேந்தனின் யானை பகைவனின் அரணை விரைந்து அழிப்பதைப் போன்று ***'கரைக்கடந்து வேகமாக வந்த புதுப் புனலில் ஆட தன்னுடன் வருக!'*** எனப் பரத்தை உரிமையுடன் தலைவனை அழைப்பதாகக் காட்டுகிறது இப்பாடல். இந்நிகழ்வை நச்சினார்க்கினியர், ***"இது காமக்கிழத்தி நின் மனைவியுடனன்றி எம்மொடு புணை கொள்ளின் யாம் ஆடுதும் என்று புனலாட்டிற்கு இயைந்தாள் போல மறுத்தது"*** [49] என்கிறார். நீராட அழைத்த தலைவனை நோக்கிப் பரத்தை, ***"நீ இனித்***

***தலைவியோடு நீராடாமல் எம்மோடு மட்டுமே நீராடுவதாக உறுதி கூறின் யாம் நின்னோடு ஆடவருவேம். அன்றேல் எம்மை அழையற்க"*** [50] என்று பொ.வே.சோமசுந்தரம் விளக்குவதினின்று சங்ககாலத்தில் பரத்தை பெற்றிருந்த இடத்தை அறியமுடிகிறது.

**2.3.3.3.4 பரத்தையின் முதன்மை:**

தலைவி தன்னை இழிவாகப் பேசினாள் என அறிந்த பரத்தை, தலைவிக்குப் பாங்காயினர் கேட்கும் படியாகத் தலைவனிடம், கூறிய செய்தியைக்

***"குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை***
***அரிப்பறை வினைஞு ரல்குமிசைக் கூட்டும்***
***மலரணி வாயிற் பொய்கை யூரநீ***
***என்னை நயந்தனெ னென் றிநின்***
***மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே!"*** *(ஐங்.81)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில் பரத்தை, நெல் விளைந்து முற்றியதும் அதை அறுவடை செய்யப்போகும்முன் உழவர்கள் பறைஒலி எழுப்புவர். அவ்வொலி கேட்ட குருகுகள் பறந்து, வெண்மையான யாமை இறைச்சியை மகிழ்ந்து உண்டு கொண்டிருந்ததையும் அங்கேயே விட்டுவிட்டு பறந்து ஓடும். குருகுகள் உண்டு கழித்த யாமை இறைச்சியை உழவர்கள் தம் இன்னமுதுடன் சேர்த்து உண்பர். அத்தகைய ஊரின் தலைவன் தன்னை விரும்புவதைத் தலைவி அறிந்தால் பொறுத்துக் கொள்ள மாட்டாள் எனத் தலைவனிடம் கூறுகிறாள். இப்பாடலில் அமைந்துள்ள உள்ளுறை உவமம் பரத்தை, தலைவி ஆகியோர் நிலையைக் காட்டுகிறது. தலைவியை விடத் தலைவன் தன்னையே நேசிப்பதாகப் பரத்தைக் கருதுவதை இப்பாடல் உணர்த்துகிறது. ***"குருகுகள் உண்டு கழித்த யாமை இறைச்சியை உழவர் தம் உணவுடன் கூட்டி உண்பர் என்றது; தான் அனுபவித்துக் கழித்த தலைவனின் மார்பை நுகர்வாள் தலைவி என்பதை உணர்த்துகிறது."*** [51] என்கிறார் அ.மாணிக்கம். இந்த உள்ளுறைச் செய்தியால் பரத்தை தான் தலைவனை முதலில் கூடி மகிழ்கிறாள்; பின்னேதான் தலைவியுடன் தலைவன் சேருவான் என்பது தெளிவாகிறது.

*2.3.3.3.5 பரத்தையின் புலம்பல்:*

தலைவியின் பேறுகாலத்தில் தன்னை நாடிவந்த தலைவனுடன் இன்புற்று வாழ்ந்தாள் பரத்தை. ஆனால் தற்போதோ அவன் தன் புதல்வனின் மொழி கேட்டு, அவன் மனையிடத்தே சென்று விடுவான் என அஞ்சிய பரத்தை தலைவனுடன் ஊடல் கொள்கிறாள். ஊடல் கொண்ட பரத்தை, ***"வெண்மையான தலையையுடைய குருகு இனத்தின் பார்புக்களது அழைக்கும் குரல் நீண்ட வயல்களை அடைந்து ஒலிக்கும் ஊரனே! இனி நீ எம்மை அருளுதல் கூடாது. ஆதலால் நின் மனையை அடைந்து நின் மனைவியுடன் கூடி இன்புறுக!"*** [52] என்று கூறுவதை,

***"வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்***
***நீள்வய னண்ணி யிமிழு மூர***
***எம்மிவ ணல்குத லரிது***
***நும்மனை மடந்தையோடு தலைப்பெய் தீமே"*** *(ஐங்.86)*

என்ற பாடல் காட்டுகின்றது. தலைவனின் குழந்தைமேல் பரத்தை கொண்டிருந்த பாசத்தைப் புலப்படுத்துகிறது இப்பாடல். குழந்தைக்காகத் தலைவனை அவன் மனைக்குச் சென்று தலைவியுடன் சேருக என அறிவுறுத்தும் பரத்தையின் சொல்லில் வருத்தமும் அவள் இரக்ககுணம் கொண்டிருந்தமையும் தெளிவாகிறது. ***"குருகின் பார்ப்புகளின் விளிக்குரல் நெடிய கழனிக்கட் சென்று ஒலிக்கும் ஊரன் என்றது, நின்னுடைய மகவின் இனிய அழைப்பாகிய மழலைமொழி இப்பரத்தையர் சேரிவரையில் எட்டுவதாயிற்று."*** [53]என்றுஉள்ளுறையால் விளக்குகிறார் பொ.வே.சோமசுந்தரம். குழந்தை பெறும் உரிமை இன்மையால் பரத்தை இவ்வாறு கூறுவதாக எண்ண முடிகிறது.

*2.3.3.3.6 பரத்தையின் புறங்கூற்று:*

தலைவி தன்னைப் புறங்கூறினாள் எனக் கேட்ட காதற் பரத்தை தலைவிக்குப் பாங்காயினர் கேட்குமாறு தலைவனிடம் புலந்து சொல்லியதைப்

***"பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்***
***கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்***

*யாண ரூரநின் மனையோள்*
*யாரையும் புலக்கு மெம்மைமற் றெவணோ* (ஐங்.87)

என்ற பாடலால் அறிய முடிகிறது. பரத்தை, ***"பகன்றை மலரால் கட்டப்பட்ட மாலையைச் சூடிய பல பசுக் கூட்டங்களையுடைய ஆயர்கள் கரும்பை அடிக்கும் குறுந்தடியாகக் கொண்டு மாம்பழத்தை உதிர்க்கும் புது வருவாயை உடைய ஊரனே! நின் மனைவி யாவரையும் புலந்து சொல்லும் குணம் உடையவளாதலால் என்னைப் புலந்து கூறுவதற்கு என்ன?"***[54] என்று தலைவியை இகழ்ந்து சொன்னாள் என அ.மாணிக்கம் விளக்குகிறார்.

***"புலவி தீர்க்குமிடத்து தலைவிக்குத் தலைமகன் இன்சொற் கூறலும், அவள் பரத்தையைப் பழித்துக் கூறுவனவற்றை ஏற்று அப்புலவி தீரத் தகுவன செய்தலும் உண்மையின், யாங்கள் பழித்தோம் என்று தலைவிக்கு இனிய சொல் சொல்லி, அவள் எங்களைப் பழித்துக்கூறும் சொற்களை நினக்கு இனியனவாகப் பெறுவாய்!"***[55] எனப் பழைய உரை கூறுகிறது. **"இனிய உணவாகிய கரும்பினையே இன்னாமை செய்யும் குணிலாக மாற்றிக் கொண்டு** ***இனிய மாவின் கனியை உதிர்ப்பது போல நின் மனையாட்டி என்னுடைய இனிய செயல்களையே இன்னாச் செயல்களாகத் திரித்துக் கொண்டு என்னைத் தூற்றிப் பொல்லாங்கு செய்வாளாயாயினள்"***[56] என்று உள்ளுறை பகர்கிறார் பொ.வே.சோமசுந்தரம்.

தலைவன் தலைவியின் புலவியைத் தீர்க்கப் பரத்தையரைப் பழிப்பனாயின் அவள் (தலைவி) இன்பம் பெறுவாள் என்பதை உணர்ந்த பரத்தையைக் காட்டுகிறது இப்பாடல். மேலும் இன்பம் துய்க்க வேண்டி தலைவன் இவ்வாறெல்லாம் நடந்து கொள்வதும் உண்டு என இப்பாடலால் அறிய முடிகிறது. இயல்பாகத் தலைவி தலைவனின் பரத்தமையை அறிந்தபோதிலும் அவனை ஏற்றுக்கொள்ளும் மனநிலையைப் பரத்தையைப் பழிப்பதன் மூலம் பெறுகிறாள். தனக்குப் போட்டியாக நிற்கும் பரத்தையைத் தலைவி பழிப்பது இயல்பு என்றாலும் பரத்தையும் அதனை உணரும் மனநிலையைப் பெற்றவளாக இப்பாடல் காட்டுகிறது. தலைவனும் தன் நிலையை வெளிக்காட்டாமல் பரத்தையைப் பழிப்பது போல் கூறித் தலைவியிடம் இன்பம் பெறத் துடிப்பதையும் உணர்த்துகிறது இப்பாடல்.

***2.3.3.3.7 தலைவி புறங்கூறுதலும் பரத்தையின் செயற்பாடும்:***

காதற்பரத்தை ஒருத்தி, தன் இளமையாலும் அழகு நலத்தாலும் தலைவனைத் தன்பால் இருத்திக் கொள்கிறாள். தலைவன் தன்னுடனே இருத்தல் வேண்டும் என நினைக்கும் அப்பரத்தையைத் தலைவி புறங்கூறுகிறாள். இதனை அறிந்த பரத்தை, ***"வண்டுகள் வாழும் யாவரும் விரும்பும் வளமான பொய்கையின் குளிர்ந்த துறையினை உடைய ஊரனை யாம் எம்மிடமே வருவதை வேண்டுகின்றோம் என்று எம் தங்கை சொல்வதைப் புறத்தே விரும்பாதவர் போன்று காட்டி அகத்தே அதை விரும்பி ஒழுகுகின்றோம்"*** [57] என்று உரைத்தாள். இக்கருத்தை,

***"வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கைத்***
***தண்டுறை யூரனை யெவ்வை யெம்வயின்***
***வருதல் வேண்டுது மென்ப***
***தொல்லேம் போல்யா மதுவேண் டுதுமே"*** *(ஐங்.88)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில் ***'நயவரும் வளமலர்'*** என்பதற்கு, ***"எல்லாரும் நயந்து கொள்ளும் வண்ணம் பூக்கின்ற வளவிய மலர் என்று உள்ளுறுத்த கருத்துக்கேற்பப் பழையவுரைகாரர் கூறுகின்றார்."*** [58]

***"எல்லோரும் விரும்பும் வண்ணம் பூக்கின்ற மலர்களையுடைய 'பொய்கையூரன்' என்றது தலைவியும் யாமுமாகிய மகளிர் பலரும் விரும்பி நகரும்படி நயந்து போந்து இன்பம் அளிப்பான் எனத் தலைவனின் பொதுவியல்பை உணர்த்தினார். எனவே தலைவன் பலர்க்கும் பொதுப்பட ஒழுகுபவன் என்பது பெறப்படும்"*** [59]

தலைவன் தன்பால் வருதல் வேண்டும் எனத் தலைவியும், பரத்தையும் கருதுகின்றனர். இவ்விருவரும் ஓரே கருத்தை கொண்டிருந்தமையின் காரணமாக, பரத்தைத் தலைவியை 'எவ்வை' எனக் கூறுகிறாள். ***'எவ்வை'*** என்பது ***'எம் தங்கை'*** எனப் பொருள்படும். இதனால் பரத்தை தலைவியைத் தங்கை எனக் கூறும் உரிமை கொண்டிருந்தமை புலப்படுகிறது.

தலைவன் பரத்தையிற் பிரிந்து தலைவியிடம் சென்று விட்டான் எனப் பாணன் கூறினான். அதைக் கேட்ட காதற்பரத்தை, ***"பாணனே! கேள்!***

***பழனங்களில் பூத்துள்ள பூக்களில் வண்டுகள் தேனை உண்ணும் ஊரன். எம் தங்கையான தலைமகளைப் பெரிதும் அன்பு காட்டி ஒழுகுகின்றான் என்று அவளுக்குப் பாங்காயினார் சொல்லுவதென்னை? அவளைத் தனக்குப் பெண்டெனக் கருதி அவன் விரும்பி ஒழுகுகின்றதற்குக் காரணம் அவள் அவனுடைய மனைவி என்ற பண்புடைமையே அன்றி வேறில்லை. இதை அவர்கள் அறியவில்லை போலும்”*** [60] என்று தலைவியின் பாங்காயினார் கேட்பக் கூறினாள். இக்கூற்றினை

***“அம்ம வாழி பாண வெவ்வைக்***
***கெவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து***
***வண்டுதா தூது மூரன்***
***பெண்டென விரும்பின் றவடன் பண்பே*** *(ஐங்.89)*

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

இப்பாடலிலும் ***‘எவ்வை’*** என்றே தலைவியைக் கூறுகிறாள் பரத்தை. இதனால் தலைவனைத் தலைவி வரைந்து கொள்ளும் முன்பே பரத்தையுடன் தொடர்பு கொண்டிருந்தான் என்பது உணரமுடிகிறது. ஆதலால் காதற்பரத்தை தலைவியைத் தங்கை எனக் குறிப்பிடுவது உணர முடிகிறது. மேலும் தலைவனைக் காணாது துன்பத்தில் வாழும் தமக்குத் தலைவனின் இச்செயல் அதிகத் துன்பத்தையே ஏற்படுத்துகிறது எனக் காதற்பரத்தை புலம்புவதனைக் காண முடிகிறது.

***“அவன் பரத்தமையாற் புலந்து வேறுபட்டாளை அது நீக்கி ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுதலாற் காமம் சிறத்தலின், அது செய்வதும் தகுமென வறிக. ‘அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப், புலந்தாரைப் புல்லா விடல்’ எனத் திருவள்ளுவப் பெருந்தகையனார் அறிவுறுத்துமாறு காண்க.”*** [61] என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***“பண்புடைமை என்பது தலைவனிடம் புறத்தொழுக்கம் தோன்றினாலும் அவனை வெறுக்காது கற்பறம் மேற்கொண்டு அன்பு மிக நடந்து கொள்வது”*** [62] என்று விளக்கம் தருகிறார் அ.மாணிக்கம்.

***“பொதுவான பழனங்களிற் பூத்திருக்கும் மலரிலுள்ள தேனை வண்டு உண்டு மகிழும் என்றதனால் தலைவன் பொதுமகளிரான பரத்தையிற் பிரிந்து இன்ப நுகர்தலைப் புலப்படுத்தினாள்”*** [63] என்பர் அ.மாணிக்கம். தலைவன் பரத்தையரை புலந்து நீங்கியும் காமம் குறையாததால் தலைவியிடம் சென்று, அங்குத் தம் புலவியைத் தீர்க்க முற்பட்டான். தலைவன் மிக்க காமம் கொண்டவன் என்பது உணர முடிகிறது.

தலைவனை அவன் மனைக்குச் செல்லாதபடி காதற்பரத்தை தடுக்கிறாள் எனத் தலைவி கூறினாள். அறியாமையில் தலைவி இவ்வாறு பேசுகிறாள் என அறிந்த பரத்தை கீழ்க்கண்டவாறு மொழிகிறாள். தலைவன் வண்டினத்தின் நற்குணம் அடைந்தானோ? அல்லது வண்டு தலைவனின் நற்குணம் அடைந்ததோ? அறியேன்! இருவரின் செயல் ஒற்றுமையானது இயல்பானது. ஆதலால் தலைவன் புதிய நலம் வாய்ந்த இள மகளிரைக் கூடும் இயல்புடையவன். இதனைத் தலைவி அறிய மாட்டாள். அதனால் அவள் தன்னைப் பழிக்கிறாள் எனக் கூறியதை,

***“மகிழ்நன் மாண்குணம் வண்டு கொண் டனகொல்***
***வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொல்***
***அன்ன தாகலூ மறியாள்***
***எம்மொடு புலக்குமவன் புதல்வன் றாயே!”*** *(ஐங்..90)*

என்ற பாடல் விளக்குகிறது. தாதுண்ணும் வேட்கையால் வண்டுகள் புதுப்பூ மற்றும் பழம்பூ எனப் பாராது அனைத்துப் பூவில் உள்ளத் தேனை உண்ணும் தன்மை உடையன. அதுபோல் தலைவனும் இளமையான தன்னை மட்டுமின்றி, முதியவளான தலைவியையும் கூடுகின்றவன் என்று பரத்தைக் கூறுகிறாள்.

***“தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா***
***வண்டோ ரன்ன அவன் தண்டாக் காட்சி ”*** *(நற்.25)*

என்ற நற்றிணை வரிகளும் இச்செய்தியைப் புலப்படுத்துகின்றன. *ஆயின்,* ***“புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு, அகன்ற கிழவன்”*** (தொல்.பொருள்:147) *எனத் தொல்காப்பியரும்* ***“ஊரன் புதுவோர் மேவலன்”***

(ஐங்.17) என்ற ஐங்குறுநூறு வரியும் தலைவன் புதுநல மகளிரையே நாடுவான் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. மேலும்,

*"..................................அவனே,*
*நெடு நீர்ப் பொய்கை நடு நாள் எய்தி,*
*தண் கமழ் புது மலர் ஊதும்*
*வண்டு என மொழிப; மகன் என்னாரே"* *(நற்.290:6-9)*

என்ற மருதன் இளநாகனாரின் பாடலும் இதனைப் புலப்படுத்துகிறது.

கூற்றுகள், தலைவன் புதுநலப் பெண்டிரையே நாடி கூடுவது இயல்பு என்றும், அவன் தன் இளமை தீரும் வரை இச்செயல் மாறாது என்பதும் எடுத்துரைப்பதை உணரமுடிகிறது.

ஐங்குறுநூறு மருதப் பரத்தையர் காதற் பரத்தையர்களாகவே காணப்படுகின்றனர். இவர்கள் தலைவன்மேல் காதல் கொண்டவர்களாகவும், அலருக்கு அஞ்சாதவர்களாகவும், தலைவியின் மேல் இரக்கம் கொண்டவர்களாகவும், தலைவியைத் தங்கை என எண்ணும் குணம் படைத்தவர்களாகவும், தலைவியின் அறியாமையை விமர்சிப்பவர்களாகவும், அன்பும் அழகும் இளமையும் கொண்டவர்களாகவும், தலைவன் தன்னுடனே இருத்தலை விரும்புபவர்களாகவும் இளமைச் செருக்கு கொண்டு தலைவனிடம் உரிமை பூண்டு பேசுபவர்களாகவும் விளங்குகின்றனர்.

### *2.3.3.4 கலித்தொகை காட்டும் பரத்தையர் கூற்று:*

***"கற்றறிந்தோர் ஏத்தும் கலி"*** எனத் தனிச் சிறப்புக் கொண்ட கலித்தொகை எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகும். ***"நற்கருத்துகளைச் சுவைதோன்ற ஊட்டி எழுச்சியும் இன்பமும் பெறவைத்து அவற்றை மேன்மேல் வளர்ச்சி பெறச் செய்தற்குச் சிறந்த இலக்கிய நூல்கள் மிகவும் இன்றியமையாதனவாயிருக்கின்றன."*** [64] என உணர்வுக்கு இன்பம் தரவல்ல இலக்கியமாகக் கலித்தொகை திகழ்கிறது. கலித்தொகையில் மருதக்கலிப் பாடியவர் மருதனிளநாகனார். அவர் மிக்க உலகியற் பழக்கங்களை நேரே கண்ணெதிரில் காண்பது போல் அத்தனை இயல்பும் வழுவாமல் காட்டியுள்ளார். இயற்கை இன்ப உறவுகளை இப்பாடல்கள் இவ்வோசையால்

வெளிப்படுத்துகின்றன. ***'கலி'*** என்னும் சொல்லும் களிப்பின் பெருக்கு, செருக்கு, ஆரவாரம் முதலிய எழுச்சி நிலைகளை உணர்த்துகின்றது. ***"இங்ஙனமெல்லாம் இன்பம் பொருளாக இயல்பின் எழுந்த பண்டுதொட்டே புலனெறிப்பட்டு வந்தமையாற்றான் ஆசிரியர் தெய்வத் தொல்காப்பியர் இன்பவொழுக்கம் என்னும் அகத்திணை பற்றிப் பாடுதற்கு இக்கலிச் செய்யுளே மிகவும் உரியதெனத் தெரிந்து அதற்கே முதன்மை தந்து அதனையே முன்வைத்து யாப்புறுத்து இலக்கணஞ் செய்வாராயினர்."*** [65] (தொல்.பொருள்:53) எனக் கலித்தொகையின் துள்ளலோசையின் சிறப்பு கூறப்படுகிறது.

மருதக் கலியில் முப்பத்தைந்து பாடல்கள் இடம்பெறுகின்றன. அவற்றில் பரத்தையர் கூற்றாக அமைந்தவை எட்டுப் பாடல்களாகும். இவ்வெட்டுப் பாடல்களும் காமக்கிழத்திக் கூற்றாக அமைந்துள்ளன. மேலும் இப்பாடல்கள் காமக்கிழத்தி மட்டுமின்றிச் சேரிப்பரத்தையரும் அச்சமுதாயத்தில் உலா வந்தமையைக் காட்டுகின்றன. இப்பரத்தையரின் இயல்புகள் இங்குத் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

### *2.3.3.4.1 இடையன் கொன்ற மரம் போன்ற பரத்தை:*

கலித்தொகைப் பாடலில் பரத்தையர் சேரியினின்று வந்த தலைவனோடு கூடினாள் காமக்கிழத்தி. தன் காதல் மிகுதியால் ஊடியபின் தலைவனுடன் கூடித் தன் ஊடலைத் தீர்த்துக் கொள்கின்றாள் அவள். கனவில் செல்வம் பெறுவதுபோல் கண்ட பரத்தை விழித்தவுடன் அச்செல்வம் தன்னிடம் இல்லாதது போல, தலைவனது மார்பு தனக்கு நிலையாகக் கிடைப்பதில்லை என்று ஏங்கித் தவிப்பதைக் காணமுடிகிறது.

இந்த மண்ணுலகம் அனைவருக்கும் பொதுவாகும். இந்நாடு முழுவதையும் ஆளுகின்ற அரசனுக்கே அறிவுரை கூறும் அமைச்சனைப் போலவும் நல்லாசிரியர் தந்த கல்வியால் நற்சொற்களை மட்டுமே பேசும் குணமும், நல்லவற்றையே கேட்கும் திறன் கொண்டவராகவும் விளங்கும் மதுரையின் தலைவன் எனப் புகழும் காமக்கிழத்தி அத்தலைவனைத் தழுவ விரும்பினாள். தலைவன் தமக்கு உறவுடையவன் அல்லன் என உணர்ந்தவளாயும் தலைவனது நினைவால் வாடும் நெஞ்சம் கொண்டவளாகவும் காமக்கிழத்தி இருக்கிறாள். இதனால் ஒரே சமயத்தில்

இரு வேறுபட்ட மனம் கொண்டவளாக அவள் இருப்பது உணரமுடிகிறது. முன்பு வேறு ஒரு சேரிப்பரத்தையருடன் ஒப்பாகி அவர்களின் பழிச் சொல்லையும் பொருட்படுத்தாது தலைவன் குறித்த இடத்திற்குச் சென்றாள் காமக்கிழத்தி. அங்கு அவனைக் காணாது பரத்தை, தன் இல்லத்தில் வந்திருப்பான் எனக் கருதிக் கதவைத் தட்டியதுடன், தனது வரவை வளையல் ஓசையால் உணர்த்த எண்ணினாள். இச்செயலைக் குறை கூற முடியுமோ எனக் கேட்கிறாள் காமக்கிழத்தி. தலைவனிடம் தங்களுக்கு உரிமை இல்லையே!! எனப் புலம்புகிறாள். தாமரை அரும்பின் இயல்புடைய முலைகள் கொண்ட பரத்தையை முயங்கியதால் தலைவனின் தன்மை கெட்டது. அதனால் அவனது மாலை பூங்கூடையில் பயன்படாது இருக்கும் மாலையைப் போன்ற தன்மையது ஆயிற்று. இற்பரத்தையின் ஊடலைத் தீர்த்துத் தழுவாமல் தலைவன் அவள் மனதை நோகச் செய்தமையின் அவள், ***'இடையன் கொன்ற மரம் போல் ஆனாள்.'*** சேரிப்பரத்தையரின் ஊடலைத் தீர்க்கும் தலைவனது செயலைக் குறை கூற உரிமையில்லை. ஊராரின் செயலுக்குப் பயந்து சேரியில் ஒவ்வொரு இல்லமாய்த் தேடித் திரிந்த அவனது பாகனைக் குறைகூறவும் உரிமையில்லை என்றெல்லாம் புலம்புகிறாள் காமக்கிழத்தி. தம் இல்லத்திற்குத் தலைவன் வருங்கால் கூடி மகிழும் பரத்தை தலைவனைப் பிரிந்த காலத்தில் உடல், தோள் மெலிந்து நிற்பாள். அதனை உணர்ந்தவர்கள் ***'இவரும் இவளும் இப்படி இருந்தனர்'*** என்று புறங்கூறுதலால் பழைய நிலையைப் பெறுவதற்கு மனம் நொந்தாள். முன்பு போலவே அவனது மார்பை விரும்பி முயங்கினும் உண்மை வேறாக உள்ளது. தலைவன் விரும்பாத முயக்கம் தமக்குத் கனவில் கிடைத்த பொருள் போல் இருப்பதாகக் கூறினாள் காமக்கிழத்தி. இதனைப்

***"பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு***
***மதிமொழி யிடன்மாலை வினைவர்போல் வல்லவர்***
***செதுமொழி சீத்த செவிசெறு வாக***
***முதுமொழி நீராப் புலனா வுழவர்***
***புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர;***
***ஊரன்மன் உரனல்லன் நமக்கென்ன உடன்வாளா***
***தோரூர்தொக் கிருந்தநின் பெண்டிருள் நேராகிக்***

*களையாநின் குறிவந்தெங் கதவஞ்சேர்ந் தசைத்தகை*
*வளையின்வாய் விடன்மாலை மகளிரை நோவேமோ*
*கேளலன் நமக்கவன் குறுகன்மின் எனமற்றெந்*
*தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம்;*
*ஊடியார் நலந்தேம்ப ஓடியெறிந் தவர்வயின்*
*மால்தீர்க்கும் அவன்மார்பென் றெழுந்தசொல் நோவேமோ*
*முகைவாய்த்த முலைபாயக் குழைந்தநின் தாரெள்ள*
*வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்;*
*சேரியாற் சென்றுநீ சேர்ந்தஇல் வினாயினன்*
*தேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ*
*ஓலிகொண்ட சும்மையான் மணமனை குறித்தெம்மிற்*
*பொலிகெனப் புகுந்தநின் புலையனைக் கண்டயாம்*
*எனவாங்கு.*
*நனவினான் வேறாகும் வேளா முயக்கம்*
*மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள் வாட*
*இனைய ரெனவுணர்ந்தா ரென்றேக்கற் றாங்குக்*
*கனவினான் எய்திய செல்வத் தனையதே*
*ஐய எமக்குநின் மார்பு"* *(கலித்.68)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இதனால் தலைவன் சேரிப் பரத்தை, இற்பரத்தை, காமக்கிழத்தியரோடு தொடர்பு கொண்டிருந்தமை அறியமுடிகிறது. தலைவன் தனக்குரிய மனைக்கண் தங்காது பரத்தையர் சேரியிலேயே தங்கும் இயல்பினைச் ***'சேரியாற் சென்று நீ சேர்ந்த இல் வினாயினன்'*** என்ற அடி புலப்படுத்துகிறது. தலைவனின் இச் செயலுக்குப் பாகனும், பாணனும் துணை போயினர் என்பதும் புலனாகிறது.

### *2.3.3.4.2 தலைவனைத் தன் வசமாக்கின பரத்தை:*

நாளும் புதுப்புதுப் பரத்தையரை நாடிச் செல்லும் தலைவன், பரத்தையிடம் இன்பம் நுகர்ந்தபின் அச்சேரியினின்று மீண்டு வரும்போது அத்தலைவனை எதிர்கொண்ட காமக்கிழத்தி ஊடினாள். மான்விழி மங்கையாம் காதலியை, மணம் முடித்தான் தலைவன். இம்மைக்கும் மறுமைக்கும் துணையாதல்பொருட்டு வேதம் ஓதும் அந்தணர்கள் வளர்த்த

தீயை வலம்வந்த தலைவியும் தலைவனும் போல அன்னமும் தன் பெடையும் தாது நிறைந்த புதுமலர் தாமரையைச் சேர்ந்து வலம்வரும் சிறப்புடைய ஊரின் தலைவனே! நேர்த்தியான பரல்களை உள்ளடக்கிய சிலம்பு அணிந்த பரத்தை தெருவிலே வந்து தன் அழகினால் தாக்கணங்கு போலத் தாக்கி மயக்கினாள். தலைவனின் மனதை அவள் வசம் ஆக்கினாள். பின் தலைவனைக் கைவிட்டாள். அவ்வாறு கைவிட்ட பரத்தையை வேண்டி நின்றபோது அவளின் எண்ணம் வேறாக இருக்க, அதனை அறிந்தவனாய்த் தலைவன் வந்து அக்காமக்கிழத்தியைப் பணிந்து நின்ற செயலைப்

***"போதவிழ் பனிப்பொய்கைப் புதுவது தளைவிட்ட***
***தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு***
***காதல்கொள் வதுவைட் கலிங்கத்துள் ஒடுங்கிய***
***மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன் துணையாக***
***ஓதுடை யந்தணன் எரிவலஞ் செய்வான்போல்***
***ஆய்தூவி அன்னந்தன் அணிநடைப் பெடையொடு***
***மேதகத் திரிதரூஉம் மிகுபுனல் நல்லூர;***
***தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கண் தாக்கிநின்***
***உள்ளங்கொண் டொழிதாளைக் குறைகூறிக் கொளின்றாய்***
***துணிந்தது பிறிதாகத் துணிவிலன் இவளெனப்***
***பணிந்தாய்போல் வந்தீண்டுப் பயனில மொழிவாயோ"*** *(கலித்.69:1-11)*

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன. மேலும் இந்தச் செயல் அவனை வருத்தமடையச் செய்யாதோ? எனவும் வினவுகிறாள் காமக்கிழத்தி. அவனிடம் (தலைவனிடம்) அகப்பட்ட பரத்தையரது நெஞ்சம் வலிமையுடையதுயென அறியாமல், அப்பரத்தையிடம் தேர்ப்பாகனை அனுப்பி, அத்தேரில் அவளை ஏறி வருமாறு அழைப்பு விடுத்தான் தலைவன். ஆனால் அவளின் எண்ணம் வேறாக இருந்தது. இவள் நிறை என்ற குணமுடையவள் அல்லள் என்று கருதித் தலைவன் தனது பொய் வன்மையால், அவளிடம் வந்து பயனற்ற சொற்களால் அவள் மன உறுதியைத் தகர்த்துவிட எண்ணினான். தலைவனுக்கு இத்தகைய செயல் தேவையா? என்று காமக்கிழத்தி வினவுவதைப்

***"பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்***
***விட்டவள் வரல்நோக்கி விருந்தேற்றுக் கொளநின்றால்***

*நெஞ்சத்த பிறவாக நிறையிலள் இவளென*

*வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ"* (கலித்.69:12-15)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

பூங்கொத்துகள் நிறைந்த சோலையிலே தான் குறித்த குறியிடத்திற்கு வந்த பரத்தையை நலம் பாராட்டிப் புணாந்து பின்பும் கொண்டாடி அவளுடன் புனல் விளையாடினான் தலைவன். ஆனால், ***'காமக்கிழத்தி தனக்கென ஒரு ஆசை இல்லாதவள்'*** என்று கருதிச் செருக்குக் கொண்டு காமக்கிழத்தியிடம் வீணான சொற்களைக் கூறினான். இது தலைவனுக்குத் தேவையற்றது என்றும் பரத்தையிடம் கூற வேண்டியவற்றைத் தன்னிடத்திலும் கூறி வீணாக்குகின்றான் எனக் காமக்கிழத்தி கருதுகிறாள். மேலும் தலைவனின் அருளால் அவள் மனச் செருக்குக் கொள்வதில்லை. விரும்பிய பரத்தையரிடம் விரும்பியவாறு சென்று அணைக்கும் தன்மையுடையவன் தலைவன்!. அப்பரத்தையர்களது மீதான ஆசை தீரும்போது தான் தம்மைத் தேடி வருவான்!' என ஊடினாள் காமக்கிழத்தி. இவ்வாறு தலைவன் அவள் மீது உரிமைப்பூண்டு ஊடிய செய்தியினை

**"இணர்ததை தண்காவின் இயன்றநின் குறிவந்தாள்**

**புணர்வினிற் புகன்றாங்கே புனலாடப் பண்ணியாய்**

***தருக்கிய பிறவாகத் தன்னிலள் இவளெனச்***

***செருக்கினால் வந்தீங்குச் சொல்லுகுத் தீவாயோ;***

***எனவாங்கு***

***தருக்கேம் பெருமின் அல்கல் விருப்புற்றுத்***

***தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது***

***சூழ்ந்தவை செய்துமறந் றெம்மையும் உள்ளுவாய்***

***வீழ்ந்தார் விருப்பற்றக் கால்".*** (கலித்.69:16-24)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. தலைவன் பரத்தையைத் ***'துணிவிலள்', நிறையிலள்'*** என ஆற்றாமை வாயிலாகக் கூறுவதைக் காமக்கிழத்தி வெளிப்படையாக் கூறுவது,

***"வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த***

***தாவின் றுரிய தத்தங் கூற்றே"*** (தொல்.பொருள்.237)

என்று தொல்காப்பியர் கூறுவதற்கு ஏற்ப அமைந்துள்ளது. ***"உன் விருப்பத்தில் வீழ்ந்தவர்களாய பரத்தையர்மீது உனக்கு எழுந்த ஆசை அற்றுப்போன போதுதான் நீ எம்மை நினைக்கின்றாய் என்பதை யாம் அறிவோம் என்கிறாள் ஒரு காமக்கிழத்தி"*** [66] என விளக்கம் தருகிறார் பெ.மாதையன். காமக்கிழத்தி, ***'தலைவன் புதுப் பரத்தையரிடம் சென்று வந்தாலும்'*** தனதில்லத்திற்கும் வருதல் வேண்டி ஊடல் கொள்வதுபோல் அமைகிறது இப்பாட்டு. தலைவன் தீ வலஞ்செய்து கைப்பிடித்த குலமகளிராம் தலைவியைப் பாதுகாவாது; தலைவனைச் சாரந்து ஒழுகும் காமக்கிழத்தியையும் பாதுகாவாது வேறுபலப் புதுப் பரத்தையருடன் தொடர்பு கொண்டமையை அன்னம் தன் பெடையோடு தனி மலரை வலம் வருதற்கு ஒப்பாக்கி உள்ளுறை உவமையாக அமைந்துள்ளது. இப்பாடல்வழி '***பரத்தையரிடத்தே பெறும் இன்பத்தை மேலாகக் கருதுகின்றான் தலைவன் என்று காமக்கிழத்தி எண்ணினள். அங்கு, செல்லக்காலம் தாழ்த்தும்போது, காமக்கிழத்தியை நாடும் இயல்புடையவன் தலைவன்; மேலும், இவள் துணிவிலள், நிறையிலள், தன்னிலள் எனக் காமக்கிழத்தியைக் கருதியவன். இதனால் தலைவன் நாளும் புதுப் புதுப் பரத்தையரை நாடிச் செல்பவன் என்பதும் புலனாகின்றது.'***

சேரிப் பரத்தையினின்று திரும்பி வந்த தலைவனைக் கண்ட காமக்கிழத்தி ஊடினாள். ஊடிய காமக்கிழத்தியை நெருங்கிய தலைவனிடம், இள ஞாயிற்றின் விரிந்த கதிர்களைக் கண்டு மலரும் அழகிய மலரை வண்டுகள் மொய்த்து நுகாந்து தேனை உண்ணும். பின்னும் அவ்வண்டுகள் பூக்கள் நிறைந்த பொய்கையான அவ்விடத்தையே சுற்றித் திரிந்தன. அளவற்ற ஊடல் கொண்ட ஒருத்திக்குக் காமம் மிகுதியால் கண்களில் நீர் வழிந்தது. அவளின் கணவன், அவளின் வருத்தம் நீக்கி அருள் செய்தான். அத்தகைய செல்வச்சிறப்பு மிக்க ஊரின் தலைவனிடம், அவள் ஒருத்தியேயன்றி அவனுக்கு உரிய பெண்டிர் பிறர் இல்லை; அதை ஆராயந்து பார்; எனக் கூறித் தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சூளுரைத்த பாகன் இங்கு இல்லை; பாகன் கொண்டு வந்த பரத்தை கோபம் காரணமாகத் தலைவனுடனான புலவியில் செய்த நகக்குறி, பற்குறி முதலிய வடுக்களுடன் நாணமின்மையால் பலரும் காணத் தலைவன் இங்கு வந்துள்ளான். இவனின் இச்செயலை,

***“விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப்***
***புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி***
***வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுள்***
***துனிசிறந் திழிதருங் கண்ணின்நீர் அறல்வார***
***இனிதமர் காதலன் இறைஞ்சித்தன் அடிசேர்பு***
***நனிவிரைந் தளித்தலின் நகுபவள் முகம்போலப்***
***பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்***
***தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர;***
***ஒருநீ பிறரில்லை அவன்பெண்டிர் எனவுரைத்துத்***
***தேரொடு தேற்றிய பாகன்வந் தீயான்கொல்***
***ஓரிற்றான் கொணர்துய்த்தார் புலவியுட் பொறித்தபுண்***
***பாரித்துப் புணர்த்தின் பரத்தமை காணிய”.*** *(கலித்.71:1-12)*

என்னும் வரிகளால் அறிய முடிகிறது. இதன்வழி அவ்வடுக்களைக் கொண்டு தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் காண்பதற்குப் பாகன் இங்கில்லை எனப்புலம்பும் காமக்கிழத்தியைப் பார்க்க முடிகிறது.

இதனால், ***“வைகறை காலத்து மனைவயிற் செல்லாது இளைய செவ்வியையுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி அதனின் அமையாது பின்னும் அவரைப் புணர்தற்குச் சூழ்ந்து திரிகின்ற இவ்வூரிடத்தே நின்னைப் பெறாது சுற்றத்திடத்தே யிருந்து கண்ணீர் வாரா நிற்க, நீ ஒரு காலத்து அளித்தலிற் சிறிது செவ்வி பெற்றனளாயிருக்கும்படி தலைவியை வைத்தாய்; என்னை வருத்துதல் கூற வேண்டுமோ வெனக் காமக்கிழத்தி உள்ளுறை யுவமம் வழி உணர்த்துகிறாள்”*** [67] என்கிறார் நச்சினார்க்கினியர். ***“தலைவனின் பரத்தமையைத் தலைவியைப் போலவே இகழ்ந்துரைத்துள்ளாள் காமக்கிழத்தி”*** [68] என்கிறார் பெ.மாதையன்.

அவளை விட்டுத் தலைவன் வேறு பரத்தையர் எவரிடத்திலும் செல்வதில்லை அவ்வாறு சென்றால் மறைக்காது கூறுவேன் என்று யாழ் முதலாகிய பல தெய்வங்கள்மேல் சூளுரைத்த பாணனும் இவ்விடத்தே இல்லை அவன் கூறியது முழுவதும் பொய்யே. அப்பொய்யைப் பலகாலும் அனுபவித்தவர்களைக் கூடின தலைவனின் கழுத்தில் பரத்தையர்கள் தழுவிய

வளையலின் தழும்புகள் மறையாமல் இன்னும் கிடக்கின்றன எனக் காமக் கிழத்தி கூறுவதனை,

***"மடுத்தவன் புகுவழி மறையேனென் றியாழொடும்***
***எடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொல்***
***அடுத்துத்தன் பொய்யுண்டார்ப் புணர்ந்தநின் எருத்தின்கண்***
***எடுத்துக்கொள் வதுபோலுந் தொடிவடுக் காணிய"*** *(கலித்.71:13-16)*

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.

தலைவனிடம் இவ்வாறான தீய குணங்கள் உள்ளன எனக் காமக்கிழத்தி உணர்ந்துள்ளதாகக் கூறுகிறாள். ஆயின் அக்கூற்றினை மறுத்து, தலைவனிடம் நற்குணங்களே உள்ளன எனக் கூறிய தோழனும் அங்கு வரவில்லை; அழகிய காதணி உடைய மகளிருடைய புணர்ச்சியால் குலைந்து வீழ்ந்த அறலைக் கூந்தலாகிய அணையிலே உறங்குகையில், அணங்கு (தெய்வம்) போல் மணம் வீசும் அலர்ந்த மார்பைக் காண்பதற்குத் தோழன் வரவில்லை என ஏங்கினாள் காமக்கிழத்தி. இவளின் இக்கூற்றினைத்

***"தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்***
***குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்***
***கணங்குழை நல்லவர் கதுப்பறல் அணைத்துஞ்சி***
***அணங்குபோற் கமழுநின் அலர்மார்பு காணிய;*** *(கலித்.71:17-20)*

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறு, தலைவனின் இடைவிடாத தழுவுதலையும் அன்பையும் பெறும் பரத்தையரை வெறுப்பவர் யார்? இவ்விடம் ஓர் ஆண்டுக்கு ஒரு முறை வருகின்ற தலைவனின் செயல் ஆனது ***'பெருமழையை விரும்பி வாடிய நெற் பயிருக்குச் சிறு தூறல் போன்றது'*** ஆகும். இச்சிறு தூறலானது, வெப்பத்தைக் கிளப்பி விட்டு மிக்க வருத்தத்தையும் துயரத்தையும் தான் தரும். ஆதலால், தலைவன் தன்னை நாடிவரும் வரை அவள் காத்திருப்பதாகவும், தலைவனை அப்பரத்தையர் மனைக்கே செல்க! என்றும் கூறினாள் காமக்கிழத்தி. இவளின் இச்சொற்களை,

***"என்றுநின்,***
***தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்***

***யார்நீ வருநாட்போல் அமைகுவம்யாம் புக்கீமோ***
***மாரிக் கவாவுற்றுப் பீள்வாடு நெல்லிற்காங்***
***காராத் துவலை அளித்தது போலுநீ***
***ஓர்யாட் டொருகால் வரவு"*** *(கலித்.71:21-26)*

என்னும் அடிகளால் அறிய முடிகிறது.

***"இளநாகனாரின் திணைத்தலைவி தலைவனது பெரும் பரத்தமை எவ்வளவு அவ்வளவினையும் பொறுக்கும் இல்லற திலகமாக விளங்குகின்றனள், பரத்தைக் குறியொடு வரினும் அவன்பால் உள்ளம் நெகிழ்ந்து ஏற்கின்றனள், ஆண்டிற்கு ஒரு முறை "ஓர் யாட்டு ஒரு கால் வரவு" (கலி.71) வரினுங்கூட மழை வரவுபோல அவன் வரவை மதிக்கின்றனள்"*** [69] என்றுரைக்கிறார் வ.சுப.மாணிக்கம்.

இப்பாடலுக்குக், "***கதிர்விட்டு நிற்கும் நெல்லிற்குச் சிறு தூறல் போன்று ஒரு ஆண்டுக்கு ஒரு முறை மட்டுமே வரும் நின்வரவு எமக்கு இன்பம் தருமாறு இல்லை. எனவே, நீ நின் பரத்தையரிடமே செல்வாயாக என்கிறாள் காமக்கிழத்தி"*** [70] என்றுரைக்கிறார் பெ.மாதையன். இதன்வழி காமக்கிழத்தியர் தலைவனின் வரவிற்காகக் காத்திருந்து துன்பப்படுதலை உணர்த்துகிறது இப்பாடல். தலைவன் சேரிப்பரத்தையருடன் கூடுவதற்காகப் பாணன், புலைத்தி, அந்தணன் என மூவரின் துணையுடன் சேரியை அடைந்தான். சேரிப்பரத்தையருடன் இன்பம் நுகர்ந்த தலைவன், அக்கோலம் மாறாது காமக் கிழத்தியின் அகத்தே (இல்லத்தில்) வந்தான். அதனைக் கண்ட காமக்கிழத்தி, தலைவன் சேரிப்பரத்தையருடன் கூடியதால் ஏற்பட்ட பற்குறியைக் காட்டு எனப் பாணன் கூறினானோ அல்லது சாதிலிங்கத்தை காமக்கிழத்திக்குக் காட்டித் துன்பத்தை ஏற்படுத்து எனப் புலைத்தி (வண்ணாத்தி) கூறினாளோ அல்லது சேரிப்பரத்தையைக் கூடும் போது அவிழ்ந்த கூந்தலை முடிக்கும் போது வீழ்ந்த துகளைக் காட்டு என அந்தணன் கூறினானோ? என வினாவி ஊடினாள். இவ்வாறு காமக் கிழத்தி ஊடுவதை,

"***இணைபட நிவந்த நீலமென் சேக்கையுள்***
***துணைபுணர் அன்னத்தின் தூவிமெல் அணையசைஇச்***
***சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி***

*ஊடுமென் சிறுகிளி உணர்ப்பவள் முகம்போலப்*
*புதுநீரத புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க*
*மதிநோக்கி யலர்வீத்த ஆம்பல்வான் மலர்நண்ணிக்*
*கடிகயத் தாமரைக் கமழ்முறை கரைமாவின்*
*வடிதீண்ட வாய்விடுஉம் வயலணி நல்லூர;*
*கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்*
*பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றானோ*
*பேணானென் றுடன்றவர் உகிர்செய்த வடுவினான்*
*மேனாள்நின் தோள்சேர்ந்தார் நகை சேர்ந்த இதழினை;*
*நாடிநின் தூதாடித் துறைச்செல்லாள் ஊரவர்*
*ஆடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ*
*கூடியார் புனலாடப் புணையாய மார்பினில்*
*ஊடியார் எறிதர ஒளிவிட்ட அரக்கினை;*
*வெறிதுநின் புகழ்களை வேண்டாரில் எடுத்தேத்தும்*
*அறிவுரை யந்தணன் அவளைக்காட் டென்றானோ*
*களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட உருவின்மேற்*
*குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை*
*எனவாங்கு*
*செறிவுற்றேம் எம்மைநீ செறிய அறிவுற்*
*றழிந்துகு நெஞ்சத்தேம் அல்ல லுழப்பக்*
*கழிந்தவை யுள்ளாது கண்ட விடத்தே*
*அழிந்துநிற் பேணிக் கொளலின் இழிந்ததோ*
*இந்நோய் உழத்தல் எமக்கு".* *(கலித்.72)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில் ஐவகைப்பட்ட உயர்ந்த நீலப் பட்டால் ஆன படுக்கையில் அன்னத்தின் இறகால் செய்யப்பெற்ற மெல்லிய தலையணை அணையாய் கிடக்க, அதில் இருந்த ஒருத்தி தன் செல்லக் கிளிக்கு வெள்ளிக் கிண்ணத்தில் பாலைக் கொணாந்து அக்கிளி உண்பதற்குரிய சொற்களைக் கூறிக் குடிக்க வைத்தாள். அப்போது அவளின் அளவற்ற மகிழ்ச்சியானது, பசும் புதர் நிறைந்த புதிய நீரிலையில் வளர்ந்த தாமரை அரும்பானது வண்டு நுகர மலராமல், கரையில் உள்ள மாமரத்தின் தாழந்த கிளையில் உள்ள பிஞ்சு (வடு) முதலில் ஆம்பலைத்

தீண்டி மலரப், பின் தாமரை அரும்பைத் தீண்டிட அத்தாமரை மலர்வதை ஒத்திருந்தது. இத்தகைய சிறப்புடைய ஊரின் தலைவன், தம்மைப் போற்றாமல் சேரிப் பரத்தையரைப் போற்றியதால் ஊடினாள் காமக்கிழத்தி.

இப்பாடலில், ***"தாமரை வண்டு நுகர்வதற்குப் பயன்கொடாது வடுத் தீண்ட அலருமென்பதனால், நின் தலைவி நீ நுகாந்த செவ்விபெறாமற் சேக்கையிடத்தே இருந்து பால் உண்ணாத புதல்வன், பால் உணப் பெற்றதற்கு அவனை முத்தங் கொண்டு மகிழ்திருக்குமாறு போல ஆற்றியிருக்குந் தன்மை எமக்கின்றெனக் காமக்கிழத்தி உள்ளுறையுவமங் கூறினாள்."***[71] என்பர் நச்சினார்க்கினியர். தலைவனிடம் ஊடிய காமக் கிழத்தி, தலைவன் தன்னிடம் முன்பு காட்டிய அன்பால் மனநிறைவு பெற்றதாகவும் கூறுகிறாள். ஆனால் தற்போது தலைவன் நடந்து கொள்ளும் இச்செயலில் உள்ள குறைகளைக் குறையென்று கூறாமல், தலைவனைக் கண்ட அளவிலே, நெஞ்சழிந்து பேணிக் கொள்கிறாள் காமக்கிழத்தி. இச்செயல் தனக்குரிய காமாநோயால் வந்த வருத்தம் ஆகும். இதனால் தான் தாழ்வதுமில்லை, இழிவதுமில்லை என்றும் வருந்திக் கூறுகிறாள் காமக்கிழத்தி. காமக்கிழத்தியின் இச்செயலுக்கு ***'அவள் தலைவன்மேல் கொண்டிருந்த மிகுதியான அன்புதான்'*** காரணம் என்பதை உணர முடிகிறது. மேலும், தலைவன் பரத்தையர் சேரிக்குச் செல்வதற்குப் பாணன் மட்டுமல்ல புலைத்தியான வண்ணாத்தியும், அந்தணரும் அக்காலத்தில் உதவினர் என்பதும் புலனாகிறது. ***'தலைவி ஆற்றியிருப்பதைப் போல் தாம் ஆற்றியிருக்க முடியாது'*** எனக் காமக்கிழத்தி கூறுவதாக அமைகிறது இப்பாடல்.

### *2.3.3.4.1 பித்துடையவள் அல்லள்:*

தலைவன் பரத்தையர் பலரை நுகர்ந்தும் அமையாதவனாய்க் காமக்கிழத்தியிடத்தே வந்தபோது காமக்கிழத்தி ஊடினாள். மேலும், தலைவனைப் புகழும் பாணனும் பித்தன்; அவன் கூறிய பொய்ம்மொழியை நம்பும் சேரிப்பரத்தையரும் பித்தர். தலைவனின் தேரும் பித்துடையது; தலைவனும் பித்தனே ஆவான், ஆனால் தான் பித்துடையவள் அல்ல என்று காமக்கிழத்தி கூறுவதைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகிறது:

*“பொய்கைப்பூப் புதிதுண்ட வரிவண்டு கழிப்பூத்த*
*நெய்தல்தா தமர்ந்தாடிப் பாசடைச் சேப்பினுள்*
*செய்தியற்றி யதுபோல வயற்பூத்த தாமரை*
*மைதபு கிளர்கொட்டை மாண்பதிப் படர்தரூஉங்*
*கொய்குழை அகைகாஞ்சித் துறையணி நல்லூர்;*
*அன்பிலன் அறனிலன் எனப்படான் எனவேத்தி*
*நின்புகழ் பலபாடும் பாணனும் ஏமுற்றான்;*
*நஞ்சுயிர் செகுத்தலும் அறிதுண்டாங் களியின்மை*
*கண்டுநின் மொழிதேறும் பெண்டிரும் ஏமுற்றார்;*
*முன்பகல் தலைக்கூடி நண்பகல் அவள்நீத்துப்*
*பின்பகல் பிறர்த்தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்;*
*எனவாங்கு*
*கிண்கிணி மணித்தாரோ டொலித்தார்ப்ப ஒண்டொடிப்*
*பேரமர்க் கண்ணார்க்கும் படுவலை இதுவென*
*ஊரவர் உடன் நகத் திரிதருந்*
*தேர்ஏமுற் றன்று நின்னினும் பெரிதே”* (கலித்.74)

இப்பாடலில் தலைவன், பொய்கையில் உள்ள பூவின் தேனை உண்டு பின் கழி (நீர்நிலை)யிடத்தே பூத்த நெய்தற்பூவின் தேனை உண்ணும் வண்டு பின் அவ்விடம் நீங்கி தன் மனையகத்தே செல்லும் குணம் பொருந்தியவன் தலைவன். ஆதலால் அவன் வயலின் பசிய இலைகளையுடைய சேப்பங்கிழங்குச் செடியிடையே பூத்த தாமரைப் பூவில் சென்று தங்கும் வண்டைப் போன்றவன். மீண்டும் தன்னிடம் வரும் இயல்பினன் என்று காமக்கிழத்தி கைப்படக் கூறினாள்.

அ·தாவது, தலைவன் முன்பகலில் தேரில் வந்து பரத்தையை உச்சி நுகர்ந்து இன்பம் துய்த்தான். பின்பு நண்பகல், பின்பகலில் வெவ்வேறு சேரிப் பரத்தையருடன் கூடி இன்பம் துய்த்தபின் விடியற்காலத்தில் தன் மனைக்குச் சென்றான் என்கிறாள் காமக்கிழத்தி. இத்தகைய தலைவனை அன்பு இல்லாதவன், அறம் இல்லாதவன் எனக் காமக்கிழத்தி கூறக் கேட்ட பாணன், தலைவன் மிக்க அன்புடையவன் அருள் உடையவன் எனக் கூறினான். அதனால் காமக்கிழத்தி பாணனைப் பித்தன் என்கிறாள். மேலும் தலைவனும், சேரிப்பரத்தையும், தேரும் பித்துப்பிடித்தனவே தவிர தான்அல்ல

எனக் காமக்கிழத்தி ஊடுவதை அறிய முடிகிறது. இக்காமக்கிழத்தி புலப்படுத்தும் தலைவனின் இயல்பினை, ***"ஒரேநாளில் முற்பகல், நண்பகல், பிற்பகல் எனப் பொழுதெல்லாம் பல்வேறு பெண்டிரையும் நாடும் தலைவனின் காமவேட்கை பழித்துரைக்கப்பட்டுள்ளது"*** [72] என்று சுட்டு உரைக்கிறார் பெ.மாதையன். இப்பாடலால் தலைவன் பல்வேறு பெண்டிரை நாடுபவன் என்பது புலனாகிறது.

***2.3.3.4.4 தலைவன் பரத்தையை மணத்தல்:***

பரத்தையர் சேரியினின்று திரும்பி வரும் தலைவனிடம் தலைவி ஊடல் கொள்வது போல் காமக்கிழத்தியும் ஊடியமை காண முடிகிறது. தலைவியின் ஊடலைத் தீர்க்கும் நிலையிலேயே காமக்கிழத்தியின் ஊடலையும் தீர்க்கிறான் தலைவன்.

தலைவன் சேரிப்பரத்தையருடன் புணர்ந்தபின், கரிகூறுங்கண்ணி, மலர் நாறும் மார்பு, தொடியுற்ற வடு ஆகியவற்றுடன் காமக்கிழத்தியிடம் வந்தான். ஊடிய காமக்கிழத்தியின் ஊடலைத் தீர்க்கிறான். அப்போது காமக்கிழத்தி, ***"தலைவன் பல பரத்தையர் உள்ள சேரியில் உள்ள பரத்தை ஒருத்தியை மணந்தான். அவளைத் தலைவனின் காதல் பரத்தையர் வந்து தீங்கு செய்தனர். ஆதலால் மணம் செய்து கொண்டவளிடம் (பரத்தை) புணர்ச்சியையும் வெறுத்தான். காதற் பரத்தையரிடமும் ஊடல் கொண்டான். வேறொரு பரத்தையர் சேரியிலே போய் இருந்து மணம் செய்து கொண்டவளை நினைத்து வருந்தினான். அங்ஙனம் வருந்தும்போது அவள் உறவினர் காதற் பரத்தையின் சினத்தை நீக்க மீண்டும் போய் அவளிடத்தில் தங்குகிறான் எனக் காமக்கிழத்தி உரைக்கின்றாள்."*** [73] என்பர் அ.மாணிக்கம். இக் காமக்கிழத்தியின் எண்ணத்தை,

*" பன்மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை*
***இன்மலர் இமிர்பூதுந் துணைபுணர் இருந்தும்பி***
***உண்துறை யுடைந்தபூப் புனல்சாய்ப்பப் புலந் தூடிப்***
***பண்புடை நன்னாட்டுப் பகைதலை வந்தென***
***அதுகைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்***
***பதிபடர் திறைகொள்ளுங் குடிபோலப் பிறிதுமொரு***

*பொய்கைதேர்ந் தலமரும் பொழுதினான் மொய்தப*
*இறைபகை தணிப்பஅக் குடிபதிப் பெயர்ந்தாங்கு*
*நிறைபுனல் நீங்கவந் தத்தும்பி யம்மலர்ப்*
*பறைதவிர் பசைவிடுஉம் பாய்புனல் நல்லூர;*
*நீங்குங்கால் நிறஞ்சாயந்து புணருங்காற் புகழ்பூத்து*
*நாங்கொண்ட குறிப்பிவள் நலமென்னுந் தகையோதான்*
*எரியிதழ் சோர்ந்துக ஏதிலார்ப் புணர்ந்தமை*
*கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை*
………………………………………………
*பெயின்நந்தி வறப்பின்சாம் புலத்திற்குப் பெயல் போல்யான்*
*செலின்நந்திச் செறின்சாம்பும் இவளென்னுந் தலையோதான்*
*மூடியுற்ற கோதைபோல் யாம்வாட ஏதிலார்*
*தொடியுற்ற வடுக்காட்டி யீங்கெம்மில் வருவதை;*
*ஆங்க,*
*ஐய அமைந்தன் றனைத்தாகப் புக்கீமோ*
*வெய்யாரும் வீழ்வாரும் வேறாகக் கையின்*
*முகைமலர்ந்த தன்ன முயக்கிற் றகையின்றே*
*தண்பணி வைகல் எமக்கு.”* *(கலித்.78)*

என்ற பாடல் காட்டுகிறது. தலைவனது ஊரானது, பலமலர்கள் பூத்துக் குலுங்கும் மருத நிலம். அங்குப் பசுமையான தாமரையின் இனிய மலரைத் தேடி ஆரவாரித்துச் சென்று மொய்க்கும் துணையுடன் புணாந்து மகிழ்ந்தது வண்டு. பலரும் நீரை உண்ணும் துறையில் பெருகி வந்த வெள்ள நீரால் மலர் சாய்ந்தது. அதனால் வெறுத்த வண்டு அவ்விடம் நீங்கியது. இவ்வண்டின் செயலானது, நற்பண்புகளும் நற்சிந்தனையும் உள்ள ஊரில் பகைவர் போர் எடுத்து வரும்போது அவ்வூர் மக்கள் அவ்விடத்தை விட்டு நீங்கி, வேறு தகுதியுடைய நாட்டில் தங்குவர்; போர் முடிந்தபின் மீண்டும் தங்கள் ஊருக்கே சென்று விடுவர். அதே போன்றுதான் வண்டும் வெள்ளநீர் வற்றியப்பின் மீண்டும் மலரிடம் சேரும். மேலும் காமக்கிழத்திக்கு நலம், தலைவன் புணரும்போது ஏற்படுகிறது. அவன் பிரியுமிடத்தே அவளுக்குத் துன்பம் நேரிடுகிறது எனவும் அறிய முடிகிறது. இது கதிரவனைக் கண்டு மலர்ந்த தாமரைப்பூவுக்கு ஒப்பாகிறது.

காமக்கிழத்தியின் அழகுநலம், மழை பெய்தால் நிலம் நல்ல விளைச்சலால் செருக்குற்றும், மழை பெய்யாதிருப்பின் அழகு கெட்டு அழியும் விளை நிலத்தின் தன்மையது போல் ஆகும் எனவும் குறிப்பிடப்படுகிறது.

தலைவனின் பரத்தமையால் பரத்தையர் அனைவரும் விரும்பும் வண்ணம் உள்ளான். தலைவன் விரும்பும் பரத்தையரும் வேறுபாடின்றி உள்ளதால் அவர்களின் மனைக்கே தலைவனைச் செல்க என்று கூறுகிறாள்; இயற்கையாய் மலராத மலரின் அரும்பையும் தனது கையால் வலிய மலர வைத்தாற் போல் இனிதில்லாத தலைவனது முயக்கத்தால், இனிய குளிர்ந்த பனிக்காலமும் கொடியதாய் உள்ளது என்கிறாள் காமக்கிழத்தி. தலைவன் வந்து அன்பின்றித் தழுவும் தழுவலினால் ஏதும் பெருமையும் இனிமையும் தனக்கு இல்லை எனினும் தலைவனின்றித் தங்குதல் தமக்குத் தகைமையில்லை எனக் காமக்கிழத்தி ஊடல் தீரக் கூறுகின்றாள்.

இவ்வாறாகத் தலைவன் பல பரத்தையருடன் தொடர்பு கொண்டிருந்தமை அறிந்தும் தலைவனே தமக்கு இன்பம் தர வல்லவன் என ஊடலைத் தீர்த்துக் கொள்ளும் காமக்கிழத்தியை இப்பாடல் வழியாக அறிய முடிகிறது.

### *2.3.3.4.5 தலைவிக்கு நிகர் காமக்கிழத்தி:*

தலைவனுக்கும் காமக்கிழத்திக்கும் இடையே நடக்கும் உரையாடலாக அமையும் பாடலையும் மருதக்கலியில் காணமுடிகிறது. தலைவன் தனது பரத்தமையொழுக்கத்தைப் பிறர் அறியா வண்ணம் (புறத்தாருக்குப் புலப்படாதவாறு) ஒழுகுகிறான். பரத்தையருடன் மறைந்து ஒழுகி வந்த தலைவன் காமக்கிழத்தியின் இல்லத்திற்கு வருகிறான். தன் இல்லத்திற்கு வந்து தன்னை ஏற்குமாறு பனிமொழி கூறிய தலைவனின் ஆற்றாமையைக் கண்டாள் காமக்கிழத்தி, தனது ஆற்றாமையைக் கூறி ஊடல் தீர்கிறாள்.

காமக்கிழத்திக்கும் தலைவனுக்கும் சொல்லாடலாய் அமையும் இப்பாடலில் தலைவிக்கு ஒப்ப (இணையாக) நடக்கும் இயல்பினளாய்க் காமக்கிழத்தி விளங்குகிறாள். தலைவன் மாயமொழியாம் பொய் கூறும் இயல்பினனாகவும் பரத்தையரிடம் தொடர்பு கொண்டிருந்தவனாகவும் இருந்தமையை

***கனைபெயல் தண்டுளி வீசும் பொழுதிற் குறிவந்தாட்***
***கண்ட கனவெனக் காணாது மாறுற்றுப்***
***பண்டைய வல்லநின் பொய்ச்சூள் நினக்கெல்லா***
***நின்றாய்நின் புக்கில்பல……"*** *(கலித்.90:22-25)*

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன.

காமக்கிழத்தி தலைவனிடம், பொய்யாகச் சிரித்தும், பொய்மொழி கூறியும் தன்னைத் தொடவேண்டாம் எனவும், அப்பொய்மொழியால் மயங்கும் பெண்டீர் இவ்விடம் இல்லை எனவும் கூறி ஊடிக் கொள்கிறாள். ஊடியக் காமக்கிழத்தியிடம், தான் செய்த தவறு யாதெனத் தலைவன் கேட்டான். தன் ஊடலுக்குக் காரணம், தலைவனால் ஏற்பட்ட காம நோயும், அதில் ஏற்பட்ட அலரும் பிறர் அறியா வண்ணம் மறைத்தமை எனக் காமக்கிழத்தி கூறுகிறாள். பருவமழை போலத் தலைவன் வந்து, மகிழ்ச்சி தந்த இராக்காலத்தில், பொழிவுடைய தோளும், கூந்தலும், இளமுலையும் பொருந்திய பரத்தை ஒருத்தி தனது இல்லத்திற்கு வந்தாள். அவளின் ஆர்ப்பரிக்கும் ஆரவாரத்தைப் பொறாத தலைவன் சிறிதும் தாமதிக்காது அவளிடம் சென்றான். அப்பரத்தையோ சினம் மாறாதவளாய் அவ்விடத்திலேயே தலைவனின் மார்பில்கிடந்த மாலையைப் பறித்தாள் அதனைக் கண்ட தலைவன் சிறிதும் சினங்கொள்ளாமல் அவளின் அழகிய சிறிய அடியைத் தாங்கினானே என்று காமக்கிழத்தி கூறுவதும் அறியமுடிகிறது. காமக்கிழத்தியின் இவ்வூடலுக்குத் தான் தவறு செய்யவில்லை என்கிறான் தலைவன். இராப்பொழுதில் காமக்கிழத்தி கண்ட கனவு போல் உள்ளதே என்றும் கூறும் தலைவனிடம், தான் கண்டது கனவல்ல; மழைத்துளி பெய்த இரவில் வந்த ஒருத்தியைக் கண்டது அவனுக்குத் தான் கனவாக நிகழ்கிறது. தலைவனது பொய்யான சூளுறவு தாம் அறிந்ததால், தலைவனுக்குப் பயன் இல்லை. ஆதலால் தலைவன் செல்ல வேண்டிய வீடுகள் பல உண்டு; அவ்விடமே செல்! என ஊடினாள் காமக்கிழத்தி. ஊடல் உரைக் கேட்ட தலைவன் காமக்கிழத்தியிடம், ***'அழகிய தோளும், இனிய மொழியும் உடையவளே! குறையைக் கைவிட்டு இனிது நல்குக! யானும் அதை நுகர்வேன்!'*** என்று கூற அவள் மகிழ்கிறாள். தன்னையே (தலைவன்) நொந்து கூறும் இம்மொழிகள் காமக்கிழத்தியின் பெண்மை நலனும், சால்பையும் மிகைப்படுத்திக் கூறுவனவாக உள்ளன.

இப்பாடல் தொல்காப்பியரின் காமக்கிழத்தி கூற்றாய் அமையும், ***“புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்…..”*** *(தொல்.பொருள்:148)* என்ற நூற்பா வழி அமைந்ததாகும். மேலும், ***‘காமக்கிழத்தியரும், பரத்தையரும் வேறு வேறு என்பார்’*** இளம்பூரணர். இவரின் இக்கூற்று இப்பாடலால் உணர முடிகிறது. மற்றொரு பாடலிலும் தலைவன் தனது பரத்தமையொழுக்கம் புறத்தார்க்குப் புலப்படாதவாறு பரத்தையரோடு ஒழுகி வந்தனன். மறைந்து ஒழுகிய தலைவன் காமக்கிழத்தியிடம் வந்தனன். தனது இல்லம் வந்த தலைவனிடம் அவள் ஊடினாள்; பின் தலைவனின் ஆற்றாமை கண்டு அவள் ஊடல் தீர்ப்பதைக் காண முடிகிறது. இப்பாடலும் தலைவனுக்கும் காமக்கிழத்திக்கும் இடையே நடக்கும் உரையாடலாய் அமைகிறது.

நறாம் பூவோடு அழகிய நீரில் மலர்ந்த அல்லிப்பூ, கருநீலப்பூ அனிச்சம்பூ என நன்மலர்களால் செய்த மாலையை அணிந்தவன் தலைவன். அத்தலைவன் விரும்பிய பரத்தை ஊடியதால் அம்மாலை சிதைந்து நிறங்கெட்டுப் போனது. தலைவனின் ஒப்பனை நேற்று இருந்ததைவிட இன்று அழகாக உள்ளதாகக் காமக்கிழத்தி கூறுகிறாள். தான் செய்யாத காரியங்களுக்கு ஏன் சினம் கொள்கிறாய்? எனக் தலைவன் காமக்கிழத்தியிடம் ஊடினான். தலைவனின் ஊடலை ஏற்காத காமக்கிழத்தி புதிய சேரிப்பரத்தையுடனான முயக்கத்தால் தலைவனது குழைந்த மாலையும், அப்பரத்தையின் பொய்யான சினத்தால் (தலைவனுக்கு) ஏற்பட்ட நகத்தின் வடுவும், கலைந்த மார்புச் சாந்தமும் கொண்ட தலைவனின் இவ்வடிவினை (தோற்றத்தை)க் கண்டு, தான் வருந்துவதாகக் கூறி ஊடுவதோடு, ***‘அப்பரத்தையிடத்தே செல்க!’*** என்றும் கூறினாள். காமக்கிழத்தியின் மொழியைக் கேட்ட தலைவன், தான் தீதற்றவன் எனக் காமக்கிழத்தியிடம் பணிவாகப் பேசுகிறான். அத்தலைவனின் பணிவையும் பொய்மொழியையும் கேட்ட காமக்கிழத்தி தலைவனிடம், தான் வேறுபட்டுப் பேசும்போது நெஞ்சு கலங்குபவன்; வேறுபடாமல் பேசி அவனது கையில் அகப்பட்டால் ஆர்வம் தீர்ந்ததும் மாறுபட்டு நடப்பதைச் சுட்டிக் கூறுகிறாள். மேலும், தன்னை இகழ்ந்த பரத்தையரிடத்தே செல்வதற்கு மனம் மயங்கும் இயல்பினன்; அவனது இக்குறைகளை ஒழிய வேறு குற்றங்களைத் தலைவன் செய்தாலும் அவற்றை ஒதுக்கிவிட்டுத், தலைவனைக் (அவனை) கண்ட பொழுதே தன் நெஞ்சம் நெகிழ்ந்து விடுவதாகக் கூறுகிறாள். தன்

நெஞ்சத்தின் தன்மையைத் தலைவன் உட்கொள்ளாமல் அத்தகு செயல்களைச் செய்கிறான் என்று கூறி ஊடல் தீர்ந்தாள். இக்கூற்றினைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகிறது:

*“அரிநீ ரவிழநீலம் அல்லி அனிச்சம்*
*புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த*
*தெரிமலர்க் கண்ணியுந் தாரும் நயந்தார்*
*பொருமுரண் சீறச் சிதைந்து நெருநையின்*
*இன்றுன் றென்னை யணி;*
*ஆணைமென்றோளாய் செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவன்*
*ஜயத்தா லென்னைக் கதியாதி தீதின்மை*
*தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு;*
*மற்றது அறிவல்யான் நின்சூள் அனைத்தாக நல்லார்*
*செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்*
*கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்*
*தாருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி*
*அரிமத ருண்கண்ணார் ஆராக் கவவின்*
*பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்*
*தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாயநீ தீதின்மை*
*ஆற்றின் நிறுப்பல் பணிந்து;*
*அன்னதேல் ஆற்றல்காண்*
*வேறுபட் டாங்கேகலுழ்தி அகப்படின்*
*மாறுபட் டாங்கே மயங்குதி யாதொன்றுங்*
*கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ*
*மாணா செயினும் மறுத்தாங்கே நின்வயின்*
*காணின் நெகிழுமென் நெஞ்சாயின் என்னுற்றாய்*
*பேனாய்நீ பெட்பச் செயல்.* (கலித்.91)

இப்பாடலில், *‘மாணா செயினும் ………… நெகிழும் என் நெஞ்சாயின்’* என்று குறிப்பிடும் வரிகள் ஊடல் தீர்ந்தமையை உணர்த்துகின்றன. *“மெய்ப்பரத்தமை பொய்ப்பரத்தமை என்ற இரு நிலைகளில் வைத்து மருதத்திணையைப் புனைவர் இளநாகர். ஆடவனுக்கு ஒரு மணவரம்பு இல்லை ஆதலால், அவ்வரம்பு உடைய தலைவி கணவனைப் பல*

***மணத்தனாகவும் இயல்பில் கருதுவாள், அவனுக்கு முன்னே வெளிப்படையாகக் கூறுவாள்......* இதை ஒரு தலைவன் வேண்டுரை என்று விளக்குகிறார் ”** [74] வ.சுப. மாணிக்கம்.

கலித்தொகையின் மருதக்கலியில் இடம்பெறும் பரத்தை காமக்கிழத்தியாய் உலா வருகிறாள். மேலும் தலைவன் சேரிப் பரத்தையருடன் தொடர்பு கொண்டிருந்தமையும், அதனால் காமக்கிழத்தி ஊடுவதாகவும், பின் ஊடல் தீர்ந்தவளாகவும் இடம் பெறுகிறாள். தலைவிக்கு நிகராகக் காமக்கிழத்தி வலம் வருவதையும் காணமுடிகிறது.

***“முழுக்கமுழுக்கப் பரத்தமை பற்றியனவாக மட்டுமே கலித்தொகையின் மருதக் திணைப்பாடல்கள் அமைந்துள்ள நிலையில் அகப்பாடல்களில் பரத்தை குதிரையாகவும் (96) குறும்பூழாகவும் (95), யானையாகவும் (97) உருவகித்துக் கூறப்பட்டுள்ள நிலை பரத்தையுடன் பரத்தமையும் இழிந்தாகக் கருதப்பட்ட நிலைமையை வெளிப்படுத்துகின்றது”*** [75] என்கிறார் பெ.மாதையன்.

கலித்தொகையில் ***“தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும் என்றார் ஆசிரியர் ஆகலின், பரத்தமை, பரத்தை என நின்றது”*** [76] என்பர் நச்சினார்க்கினியர். சேரிப்பரத்தையிடமிருந்து வந்த தலைவனைக் காமக்கிழத்தி ஊடிக் கொள்ளுதலும் பின் ஊடல் தீர்த்தலும் என்றவாறே இப்பாடல்கள் அமைகின்றன. காமக்கிழத்தி தலைவியைப் போல் தலைவனுடன் ஊடல் கொண்டமையை இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. மருதில மக்கள் கல்லியறிவு மிக்கவர்களாக இருந்தமையைப் பரத்தை வாயிலாக அறிய முடிகிறது.

### *2.3.3.5 அகநானூற்று மருதப் பரத்தையர்:*

***‘நெடுந்தொகை’*** என அழைக்கப்பெறம் அகநானூறு எட்டுத் தொகையிலே தலைசிறந்து விளங்கும் நூலாகும். இது பதின்மூன்று அடி முதல் முப்பத்தொன்று அடி வரை அமைந்த ***‘அகம்’*** சார்ந்த நானூறு பாடல்களின் தொகுப்பாகும். அகப்பொருளைக் கவினுற உணர்த்தும் பான்மையால் இத்தொகுப்பு ***‘அகம்’*** என்ற சிறப்புப் பெயர் தாங்கி நிற்கிறது. இந்நூல் அலெக்சாண்டரின் படையெடுப்பு போன்ற வட புல வரலாற்றுக்

குறிப்புகள், பண்டைத் தமிழரின் அகவாழ்க்கை முறை திருமணச் சடங்கு என அனைத்தையும் எடுத்துரைக்கிறது.

அகநானூறு களிற்றியானைநிரை, மணிமிடைப் பவளம், நித்திலக் கோவை என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்நூலில் ஒற்றைஎண் கொண்ட பாடல்கள் பாலைத் திணைக்கு உரியவை. இரண்டும் எட்டும் எண்களைக் கொண்ட பாடல்கள் குறிஞ்சிக்கும் நான்காம் எண்ணைக் கொண்ட பாடல்கள் நெய்தல் திணைக்குமுரியவை. இப்பாடல்களை நூற்று நாற்பத்தைந்து புலவர்கள் பாடியுள்ளனர். இந்நூலைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிக்குடி கிழான் மகனார் உருத்திரசன்மர் என்பவர். மருதத்திணைப்பற்றி நாற்பது செய்யுட்கள் உள்ளன. அவற்றை இருபத்திரண்டு புலவர்கள் பாடியுள்ளனர். அவற்றில் பரத்தையர் கூற்றாக அமைந்தது ஒன்பது பாடல்கள் ஆகும். பரத்தையர் கூற்றாய் அமைந்த பாடல்களில் பரணரே ஐந்து பாடல்களைப் பாடியுள்ளார். இவ்வைந்து பாடல்களிலும் வெவ்வேறு கருத்துகளைக் காட்டுகிறார் பரணர். தலைவனைப் பரத்தை நயப்பித்துக் கொண்டதாக எண்ணித் தலைவி புறங்கூறினாள். தலைவியின் செயலுக்குக் காமக்கிழத்தி பரத்தையரான தாங்கள் ஆடல் பாடலில் வல்லவரானவர்கள்; இன்னிசைக் கருவிகளுடன் நடத்திய ஆடல் நிகழ்ச்சியைக் காணத் தலைவனும் வந்தான்; அவ்வளவுதான் என்கிறாள். ஆயின் பரத்தையர் தம் ஆடலாலும் பாடலாலும் தலைவனை வயப்படுத்தினர் எனத் தலைவி இடையறாது கூறுவது பறையொலி போல் உள்ளது என உரைத்தாள். ***‘அழகும் இளமையும் வீரமும் பொருந்திய சேரஇளவரசன் ஆட்டனத்தியைக் கடலில் கலக்கும் இடத்தில் காவிரிஆறு கைக் கொண்டதால், அவனது காதலியாகிய ஆதிமந்தி மிகவும் வருந்தி அலறினாள். அதுபோல, தலைவி அலறும்படியாகத் தலைவனைத் தான் கைக் கொள்வேன்’*** எனச்சூள் உரைத்ததை

***“மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்***
***தண்டுறை ஊரனெம் சேரி வந்தென***
***இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு***
***நன்கலன் ஈயும் நாண்மகிழ் இருக்கை***
***அவைபுகு பொருநர் பறையின் ஆனாது***

***கழறுப என்பவவன் பெண்டிர்; அந்தில்***
***கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்***
***வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியல்***
***சுரியலம் பொருனைக் காண்டி ரோவென***
***ஆதி மந்தி பேதுற் றினையச்***
***சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்***
***அந்தண் காவிரி போலக்***
***கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே"*** *(அகம்.76)*

என்ற பரணரின் பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில் ***'அ.ஃதை'*** என்பவன் பரிசிலர்க்கு யானையும் அணிகலனும் தருவது போல், தன்னிடம் வரும் தலைவனுக்குப் பெண்மை நலமும் கலை நலமும் தான் அளிப்பேன் எனப் பரத்தை கூறுவதாக உள்ளுறை வைத்துப் பாடினமை அறிய முடிகிறது.

***"என் பெண்மை தலைவியினது பெண்மை நலத்தை விடச் சிறந்தது. அதனால் தலைவன் தானே என்னை விரும்பி என் மனைக்கு வருகின்றனன். அத்தகையவனை நான் ஆடல் பாடலால் என்வசம் செய்து கொண்டேன் எனத் தலைவி கூறுவாளாயின் அவனை என்னிடமே இருத்திக் கொள்ள எண்ணியுள்ளேன். அப்போது தலைவி என் செய்வாள்? என்றாள் பரத்தை. இச்செய்தியைத் தலைவிக்குக் கூறு என்பது பரத்தையின் குறிப்பு"*** [77] என்பர் அ.மாணிக்கம்.

பரணர், தமது மற்றொரு பாடலில் இக்கருத்தையே பிரதிபலிக்கிறார். காமக்கிழத்தியானவள் தலைவனைத் தன் வசப்படுத்தும் வகையில் உரைப்பதை அப்பாடலில் காண முடிகிறது. ஆதிமந்தி வருந்திப் புலம்பும்படியாகக் காவிரி ஆறு அவனது காதலனாகிய சேர அரசன் ஆட்டனத்தியைக் கைப்பற்றிக் கொண்டது போலத் தலைவியும் தலைவனைக் கைப்பற்றிக் கொள்வாளோ என அஞ்சினாள் பரத்தை. கொடிகட்டிய தேரையும் பொன் அணிகலன்களையும் கொண்ட நன்னன் என்ற அரசன் ***'புனல் நாட்டு'*** மக்கள்மீது கோபம் கொண்டான். யாழிசை ஒலிக்கும் தெருக்களை உடைய பாழி என்ற நகரில் நின்று ஆய்எயினன் அம்மக்களிடம் ***'அஞ்சாதீர்'*** என்றான். ஆனால், மிக்கப் பயிற்சியுடைய வீரனான மிஞிலியிடம் தோற்று உயிரையும் விட்டான். அது போல, தானும்

தலைவனால் கைவிடப் படுவோமா என அஞ்சினாள் பரத்தை. ஆதலால் தலைவனை நோக்கி, வெல்வதற்கு அரிய தெய்வத்தின்முன் தனது மென்மையான கையைப் பற்றிக் கூறிய உறுதிமொழியைக் கடந்து தம்மைக் கைவிட்டதால் அயலரைப் போல் தலைவனும் ஆயினன். '***ஆதலால் இனித் தலைவனை விட மாட்டேன்'*** என்று கூறினாள் பரத்தை. மேலும் தன் அழகையும் திருப்பித் தருமாறு கேட்பதைத்

*"தொடுத்தென், மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்*
*பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென*
*யாழிசை மறுகிற் பாழி ஆங்கண்*
*அஞ்சல் என்ற ஆஅய் எயினன்*
*இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்*
*தன்னுயிர் 'கொடுத்தனன் சொல்லிய தமையாது*
*தெறலருங் கடவுள் முன்னர்த் 'தேற்றி*
*மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து*
*ஆர்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்பநின்*
*மார்புதரு கல்லாய் பிறனா யினையே*
*இனியான் விடுக்குவென் அல்லேன் மந்தி*
*பனிவார் கண்ணன் பலபுலந் துறையக்*
*கடுந்திறல் அத்தி ஆடணி நசைஇ*
*நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்*
*மனையோள் வவ்வலும் அஞ்சுவள் சினைஇ*
*ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்*
*தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து*
*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்*
*வஞ்சி அன்னவென் நலந்தந்து சென்மே* *(அகம்.396)*

என்ற பாடல் விளக்குகின்றது. இப்பாடலில் ஆட்டனத்தி ஆதிமந்தியின் வாழ்க்கையையும், மிஞிலி, ஆய்எயினன் போர்ச் செய்திகளையும் பரத்தையின் வருத்தத்திற்குப் பரணர் ஒப்பிட்டமை காண முடிகிறது.

இப்பாடலில் ***'மார்பு தருகல்லாய் பிறன் ஆயினை'*** என்ற அடிகளால் ***"தலைவன் தண்டாப் பரத்தனாகத் திரிகின்றான். அவனது பரத்த வேட்டம் ஒரு பரத்தைக்குக் கூடப் பிடிக்கவில்லை என்று அவள் தூற்றுகின்றாள்"*** [78] – என்று கூறுகிறார் வ.சுப.மாணிக்கம்.

தலைவனைப் பற்றிக்கொண்டேன் எனக் கூறிய காமக்கிழத்தி ஒருவர் எனில் மற்றொரு காமக்கிழத்தியோ ஊடல் கொண்டு தலைவனிடம், தன் நலனைத் திருப்பித்தரும்படி கேட்பதாகப் பரணர் பாடியுள்ளார்.

காதற்பரத்தை தலைவனால் காம இன்பம் கருதி வரைந்து கொள்ளப்பட்டாள். தலைவன் சேரிப்பரத்தையிடம் கேண்மை கொண்டமை அறிந்த காதற்பரத்தை தம் இல்லம் தேடி வந்த தலைவனிடம் ஊடிக் கொண்டு, தலைவனிடம் அவனுக்குப் பணிவிடை செய்யும் கடமைகள் சில உள்ளன. பாகனால் பயிற்சிப் பெறாத யானை நீரில் நீந்துவதால் நீர்மோதி உயர்ந்த மருத மரங்கள் கொண்ட தோட்டத்தையும், முற்றிய நெற் கதிர்களைக் கொண்ட வயல்களை உடைய கழார் என்னும் ஊரின் முன்பு ஆரவாரம் கொண்ட ஊரார் மகிழும்படி கரிகால் வளவன் எடுத்த விழாவில் புனல் விளையாட விரும்பிய ஆட்டனத்தி என்ற சேர இளவரசன் காவிரியில் ஆடினான். காவிரி ஆறோ அவனது அழகைக் கவ்விக் கொண்டு கவர்ந்து சென்றது போல தலைவனையும் சேரிப்பரத்தை கவர்ந்து கொண்டாள். ஆயின் தான் தலைவனை வெறுக்கவில்லை; ஆதலால் தனது நெற்றியில் பசலை படர்ந்தது. இதனால் செங்குட்டுவனின் மரந்தை என்னும் அழகிய நகரத்தைப் போன்ற தன் அழகைத் திருப்பித் தரவேண்டும் எனப் பரத்தை தலைவனிடம் கேட்பதைச்

***"செல்லல் மகிழ்நிற் செய்கடன் உடையென்மன்***
***கல்லா யானை கடிபுனல் கற்றென***
***மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை***
***ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்***
***கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்***
***தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை***
***ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்***
***கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று***

***இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்***
***புனனய்ந் தாடும் அத்தி அணிநயந்து***
***காவிரி கொண்டொளித் தாங்கு மன்னோ***
***நும்வயிற் புலத்தல் செல்லேம் எம்வயின்***
***பசந்தன்று காண்டிசின் நுதலே அசும்பின்***
***அந்தூம்பு வள்ளை அழற்கொடி மயக்கி***
***வண்டோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்***
***துய்த்தலை முடங்கிறாத் தெறிக்கும் பொற்புடைக்***
***குரங்குளைப் புரவிக் குட்டுவன்***
***மரந்தை அன்னவென் நலந்தந்து சென்மே!”*** *(அகம்.376)*

என்ற பாடல் உணர்த்துகிறது. இப்பாடலிலும் பரணர் ஆட்டனத்தி ஆதிமந்தியின் அன்பை மேற்கோளாகக் காட்டுவதை அறிய முடிகிறது.

பரணரின் மேற்கூறிய மூன்று பாடல்களிலும் காமக்கிழத்தி தலைவனை கைக்கொள்ளும் குணமும், தலைவன்மீது கொண்டிருந்த தீராக் காதலும் காட்டப்படுகின்றன.

பரணரின் மற்றொரு பாடல் தலைவியின் அறியாமையை எடுத்துரைப்பதாக அமைகிறது. தலைவி தன்னைப் பழித்தாள் என அறிந்த காமக்கிழத்தி, பெரிய யானையின் காதுமடல்போல் உள்ள பெரிய அகலமான இலையில் நீரினை உடைய தலைவனது ஊரால் தமக்கு ஏற்பட்ட ***‘அலரோ’*** மிகப் பெரியது. தலைவனுடன் தான் புனலாடுதற்கு மட்டுமே தொடர்புடையவள். தலைவனோ வேறொரு பரத்தையுடன் தொடர்புக் கொண்டு அவளின் இல்லத்திற்குச் சென்றான். இதனை அறியாத தலைவியோ, தலைவன் இவ்வாறு செய்தமைக்குப் பரத்தையாகிய தானே காரணம் எனப் பழிக்கிறாள் எனக் கூறுகிறாள். இதனை

***“வானம் வேண்டா வறனில் வாழ்க்கை***
***நோன்ஞாண் வினைஞர் கோளறிந்து ஈர்க்கும்***
***மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை***
***நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகலிலை***
***இருங்கயம் துளங்கக் காலுறு தோறும்***
***பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு***

***எழுந்த கௌவையோ பெரிதே நட்பே***
***கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்***
***புனலாடு கேண்மை அனைத்தே அவனே***
***ஒண்டொடி மகளிர் பண்டையாழ் பாட***
***ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்***
***தண்நறுஞ் சாந்தம் கமழும் தோள்மணந்து***
***இன்னும் பிறள்வயி னானே மனையோள்***
***எம்மொடு புலக்கும் என்ப வென்வேல்***
***மாரி அம்பின் மழைத்தோல் பழையன்***
***காவிரி வைப்பிற் போஒர் அன்னஎன்***
***செறிவளை யுடைத்தலோ இலனே உரிதினின்***
***யாந்தன் பகையேம் அல்லேம் சேர்ந்தோர்***
***திருநுதல் பசப்ப நீங்கும்***
***கொழுநனுஞ் சாலுந்தன் உடனுறை பகையே"*** *(அகம்.186)*

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இப்பாடலில் இறைச்சி கையாளப் பட்டதும் அறிய முடிகிறது. கருப்பொருள் புறத்தே தோன்றிய இறைச்சி இப்பாடலில் அமைந்துள்ளது. ***"காற்று வீசும் போதெல்லாம் தாமரை இலை அசையும் என்றது தலைவி தலைவன் பிரிவினால், வருத்தம் அடையும் போதெல்லாம் என்னைப் பழிப்பாள் என்று காமக்கிழத்தி குறிப்பிட்டாள்"*** [79] என அ.மாணிக்கம் சுட்டிக்காட்டுகிறார்.

கொறுக்கம்புல் தண்டுகளை ஒன்று சேர்த்துச் செய்த தெப்பத்தில் ஒரு நாள் காமக்கிழத்தி நீராடினாள். அதுவே அன்றி வேறு தொடர்பு தலைவனுடன் தனக்கு இல்லை எனினும் தலைவி தன்னைத் தூற்றுகிறாள் என வருந்துகிறாள். காமக்கிழத்தியுடன் புனல் நீராடியப் பின் தலைவன் சேரிப்பரத்தையுடன் சென்றுவிட்டான். எனவே, தலைவன் தன்னுடன் ஒருமுறை கூடியிருந்து கைவிட்டுப் போய்விட்டான் என்றாள் காமக்கிழத்தி.

இப்பாடலில் காணப்படும், '**என் செறிவளை உடைத்தலோ இலனே**' – என்ற வரி சங்ககாலப் பரத்தையரின் பழக்கவழக்கத்தை எடுத்துக் காட்டுகிறது. பரத்தையர் தன்னை விரும்பும் ஆடவர் பிரிந்து வேறொருத்தியிடம் சென்றுவிட்டால் தம் கையில் உள்ள வளையலை

உடைப்பது வழக்கம். ஆனால் குலமகளிர் அவ்வாறு செய்யார். இவ்வழக்கம் கருதித் தானும் தன் வளையலை உடைக்கவில்லை என்கிறாள். இதனால் காமக்கிழத்தி தலைவனை விரும்புபவள் என்பதும் தலைவிக்கு அடுத்த நிலையில் இருப்பவள் என்பதும், தலைவன் பிரிந்து சென்றால் வருந்துபவள் என்பதும் புலனாகிறது. ***"திருநுதல் பசப்ப நீங்கும் கொழுநனும் சாலும் தன் உடனுறை பகையே என்ற வரியால், தலைவன் காமக்கிழத்தியை விடுத்துச் சேரிப்பரத்தையிடம் சென்றான். பின் அவன் தலைவியுடன் போய் உறைவான் என்பது தோன்றத் 'தன் உடன் உறை பகை' என்றாள். உடன் உறையும் கணவன் பகையாவது சாலும் என்று கூட்டியுரைத்தலுமாம்"*** [80] என்பர் அ.மாணிக்கம். தலைவனைப் பகைவனாகப் பரத்தை எண்ணுவதை இப்பாடல் புலப்படுத்துகிறது.

*2.3.3.5.1 வஞ்சினப் பரத்தை:*

காமக்கிழத்தியையே பாடிய பரணர் சேரிப்பரத்தையின் இயல்பையும் பாடுவதைக் காணமுடிகிறது. ***"தலைவனின் பெரும் பரத்தமையால் தலைவியை எதிர்த்து வஞ்சினம் மொழியும் துணிபு ஒரு பரத்தைக்கு வந்துவிட்டது. இது பரத்தையின் வஞ்சினப்பாட்டு. சங்கப் பனுவலில் அரிய ஒரு பாடல். அகத்திணைக்கண்ணும் வஞ்சினம் கூறலாம் மரபுக்கு ஊறில்லை"***[81] என்கிறார் வ.சுப.மாணிக்கம். இவரின் கருத்தைப் பறைசாற்றுகின்றது பரணரின் பாடல். தன்னைப் புறங்கூறிய தலைவியின் செருக்கை அடக்க இன்னது செய்வேன் எனச் சேரிப்பரத்தை சூள் உரைத்தாள். தலைவியின் பாங்காயினாள் கேட்க, இரை தேடும் நாரையானது தனக்கு மிகப் பிடித்த வாளைமீனைப் பிடிக்கக் காவலை உடைய வீட்டில் திருடன் புகுவது போல் மெல்ல மெல்ல நடையிடுகிறது. அத்தகைய ஊரின் தலைவன் தன் இருப்பிடமான சேரிக்கு வந்தால், செவ்வரி படர்ந்த மையுண்ட அழகிய விழிகளை உடைய தலைவி காணும்படி தான் தலைவனது மாலையைப் பற்றிக் கொள்வேன் என்றும், அவன் தப்பிப் போகாதபடி அவனது ஆடையைப் பற்றிக் கொள்வேன் என்றும், தன் தோளைக் கட்டுத் தறியாகவும், கூந்தலைக் கயிறாகயும் கொண்டு கட்டித் தலைவனது மார்பைப் பற்றிக் கொள்வேன் என்றும் கூறுகிறாள்.

மேலும், தான் அவ்வாறு செய்யாவிடில் ஈட்டிய பொருள் தானதர்மம் செய்யாதிருந்தால் பயனற்று போகுவது போலத் தனது தாய் பாதுகாத்து வளர்த்த தன் அழகும் பயனற்று போகட்டும் எனச் சூள் உரைக்கிறாள். இச்செய்தியை

*"வருகதில் அம்மஎஞ் சேரிசேர*
*அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்*
*தாரும் தானையும் பற்றி ஆரியர்*
*பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்*
*தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்*
*மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று*
*இரந்தோர்க் கீயாது ஈட்டியோன் பொருள்போல்*
*பரந்து வெளிப்படா தாகி*
*வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே* *(அகம்.276:7-15)*

என்ற பாடலால் அறிய முடிகிறது. ***"இது தலைவியின் பாங்காயினார் கேட்பப் பரத்தை கூறியது என்பது நச்சினார்க்கினியர் கருத்து"*** [82] இங்குப் பரத்தை தலைவனைத் தன்னகத்தே கைக்கொள்வேன் என்று உறுதியாகக் கூறுவது அறிய முடிகிறது.

***"என் அன்னை பலர்க்கெனப் போற்றி வளர்த்த இவ்வழகு யார்க்கும் பயன்படாது ஒழிக. இரந்தவர்க்குக் கொடுக்காது ஈட்டியவன் பொருள் அவனிடத்தே தங்கி அழிதல்போல என்மெய்ந் நலமும் துய்ப்பார்க்குப் பயனின்றிக் கொன்னே கழிக. தாய் வேண்டியபடி பரத்தையாகாது, கற்புடையவளாய் இழிவேனாகுக"*** [83] என்பது பரத்தையின் வஞ்சினம்; பரத்தமைக்கு ஏற்ற வஞ்சினம். "***அவன் பெண்டிர் காண என்று பன்மையிற் கூறியதனால் அவனுக்கு மனைவியர் பலர் என்பது நடைக் கருத்தன்று. மனைவி ஒருத்திதான்; அவளை உயர்த்துவது போல் இழித்துக் கூறுகின்றாள் வஞ்சினப் பரத்தை"*** [84] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

பரணரின் பாடல்களைத் தொடர்ந்து ஆலங்குடி வங்கனாரின் பாடல் ஒன்றில், தலைவி புறங்கூறியதற்காகப் பரத்தை அத்தலைவியின் இல்லம் வழியே செல்ல வேண்டும் எனக் கூறுவதுடன் தலைவியை இகழ்ந்தமையும்

அறியமுடிகிறது. தலைவனின் மனைவியான தலைவி, தலைவனையும் பரத்தையையும் ஒன்றாக வைத்தும் தொடர்பு வைத்தும் பேசி ஏசினாள். இதனை அறிந்த பரத்தை தன் தோழியிடம், சிவந்த நிறமுடன் அகன்ற இலையுடன் வாய் திறந்த தாமரை மலர்கள் நிரம்பிய வயலில் சிறிய மீன்கள் துள்ளி விளையாடும். அவற்றை உண்ண, முதிய சிச்சிலிப் பறவை (மீன்கொத்தி) இலையிலேயே தங்கும். அத்தகைய சிறப்பு மிக்க ஊரின் தலைவனைத் தான் (பரத்தை) கைக் கொண்டதாகத் தலைவி வெறுத்துக் கூறுகிறாள். அவ்வாறு தலைவி கூறிய பழியினின்று நீங்க வேண்டுமாயின் வளையல் அணிந்த கையுடன் தலைவியின் இருப்பிடம் அருகே செல்ல வேண்டும். அதனைக் கண்ட தலைவி, பாண்டியனது வெற்றியைப் புகழ்ந்து பாடி யானையைப் பரிசிலாகப் பெற்ற பாணன் அடிக்கும் மத்தளத்தின் அதிர்வைப் போல் தன் வயிற்றில் அடித்துக் கொள்ளட்டும் என இகழ்ந்து பேசியமை,

***“எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்***
***பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்***
***வெறிகொள் பாசடை யுணீஇயர் பைப்பயப்***
***பறைதபு முதுகிரல் அசைபுவந் திருக்குந்***
***துறைகே ழூரன் பெண்டுதன் கொழுனை***
***நம்மொடு புலக்கும் என்ப நாமது***
***செய்யா மாயினும் உய்யா மையின்***
***செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவண்***
***உலமந்து வருகம் சென்மோ தோழி***
***யொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்***
***வெளிறில் கற்பின் மண்டமர் அடுதொறும்***
***களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்***
***தண்ணுமைக் கண்ணின் அலைஇயாதன் வயிறே”*** *(அகம்.106)*

என்ற பாடல் உணர்த்துகிறது. முதுமையால் பறக்க மாட்டாத சிரல் பறவை மீனுக்கு அண்மையில் இலையின் மீதிருந்தும் அதனைக் கவரமாட்டாமலும் ஏனைச் சிரல் பறவை கவர்தற்குப் பொறுக்காமல் இருத்தல் போல, முதுமையால் எழுச்சி குன்றிய தலைவி, தன் இல்லத்தில் கணவனைக் கொண்டிருந்தும் அவனை வளைத்துக் கொள்ள மாட்டாமலும் ஏனை

இளம்பருவமுடையோர் தழுவுதற்கும் பொறுக்காமல் அவள் தன் வயிற்றை அடித்துக் கொள்கிறாள். அதாவது, தலைவனைத் தானும் கொள்ளாமலும், பரத்தையரும் கொள்ள விடாமலும் தலைவி செயல்படுகிறாள் என்பது வெளிப்படை.

அகநானூற்றில் பரத்தை ஒருத்தி தன்னுடன் நீராடிய தலைவனை இகழ்ந்து பேசுவதாக, இடையன் நெடுங்கீரனாரின் பாடல் அமைந்துள்ளது. தலைவன் பரத்தையொடு நீராடினான் என அறிந்த தலைவி ஊடல் கொண்டாள். தலைவியின் ஊடல் தீர்க்க எண்ணிய தலைவன், தான் பரத்தையுடன் நீராடவில்லை எனத் தெய்வத்தின்மீது ஆணையிட்டுக் கூறினான். இதை அறிந்த பரத்தை தன் தோழியிடம், ***'அப்படியானால் நேற்று என்னுடன் நீராடியவர் யார்?'*** என்று வினவி இகழ்ந்து உரைத்தாள். பழைய நெற்கூடுகளையும், மழைத் துளிபோல் சிதறிய கள்ளும் உடைய வேளூரில் நறுமணம் மிக்கப் பூக்களால் ஆன மாலையை வண்டுகள் மொய்க்காமல் அஞ்சி நிற்கும். அப்பூமாலை அணிந்த, அச்சம் பொருந்திய தலைவன் தெய்வம் முன் ˙ தலைவியிடம், ***'மலர்சூடிய கரிய கூந்தலுடைய பரத்தையுடன் தான் புனலாடி வந்தது உண்மை எனின் தன்னை வருத்தமடையச் செய்யட்டும்'*** எனத் தன் மனைவியின் ஊடல் தணிப்பதற்காகச் சூள் உரைத்தான். இதனைக் கேட்ட பரத்தை, அவ்வாறெனில் நேற்று தன்னுடன் நீராடியது யார் என வினவினாள். இக்கருத்தை

***"நல்மரங் குழீஇய நனைமுதிர் சாடி***
***பல்நாள் அரித்த கோஒய் உடைப்பின்***
***மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்***
***பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்***
***நறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்***
***பொறிவரி இனவண்டு ஊதல கழியும்***
***உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்***
***புனையிருங் கதுப்பின் நீகடுத் தோள்வயின்***
***அனையேன் ஆயின் அணங்குக என்னென***
***மனையோள் தேற்றும் மகிழ்ந னாயின்***
***யார்கொல் வாழி தோழி நெருநல்***

*தார்பூண் களிற்றில் தலைப்புணை தழீஇ*
*வதுவை ஈரணிப் பொலிந்த நம்மொடு*
*புதுவது வந்த காவிரிக்*
*கோடுதோய் மலிர்நிறை, ஆடி யோரே"* (அகம்.166)

என்ற பாடல் புலப்படுத்துகிறது. "**இயற்கையோடு செயற்கை அழகும் சேர்ந்து சிறந்து விளங்கும் தன்னுடன் தலைவன் நீராடினான். அதனால் தலைவன் சிறப்படைகின்றான்"**[85] என்று பரத்தை கருதுவதாக அ.மாணிக்கம் விளக்குகிறார்.

ஆலங்குடி வங்கனாரின் மருதப் பாடல் கருத்தை ஒட்டியே ஐயூர் முடவனாரின் பாடலும் அமைகிறது. தலைவி தன்மீது பழி கூறினாள் எனக் கேட்ட பரத்தை, அப்பழியை ஏற்க இயலாமல் தலைவியின் தோழி கேட்கத் தன் தோழியிடம், '***வரால் மீனைப் பிடித்த பாணர் மகள், வஞ்சி மர விறகால் சுட்டுத் தன் தந்தைக்குத் தரும் சிறப்புடைய ஊரின் தலைவனின் மனைவியான தலைவியும் அவளது சுற்றத்தாரும் மனம் போனபடியெல்லாம் தன்னைப் பழிச்சொல் கூறுகின்றனர். இப்பழிச்சொல் போகும்படியாக அவள் வாழுகின்ற சேரியிடத்தே செல்வோம்'*** எனக் கூறியதை,

***"நாண்கொள் நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்***
***தான்புன லடைகரைப் படுத்த வராஅல்***
***நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு***
***வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்***
***தண்டுறை ஊரன் பெண்டிர் எம்மைப்***
***பெட்டாங்கு மொழிப என்ப அவ்வலர்ப்***
***பட்டன மாயின் இனியெவ னாகியர்***
***கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்***
***கழனி யுழவர் குற்ற குவளையுங்***
***கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு***
***பல்லிளங் கோசர் கண்ணி அயரும்***
***மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்***
***எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல்***
***ஆதன் எழினி யருநிறந் தழுத்திய***

*பெருங்களிற்று எவ்வம் போல*
*வருந்துவர் மாதவர் சேரியாஞ் செலினே* (அகம்.216)

என்ற பாடல் விளக்குகிறது. மேலும், செல்லூர்மன்னன், ஆதன் எழினி என்பவன் எறிந்த வேல் மார்பில் பாயப்பெற்ற ஆண்யானை எவ்வாறு வருந்துமோ அதுபோலத் தலைவி வருந்த வேண்டும் எனப் பரத்தைக் கூறியமையும் அறிய முடிகிறது. இதில் தலைவி அடையும் துன்பத்தை யானை அடைந்த துன்பத்துடன் ஒப்பிடுவதைக் காண முடிகிறது.

***2.3.3.5.2 இற்பரத்தையும் நயப்புப் பரத்தையும்:***

பாவைக் கொட்டிலாரின் மருதப் பாடலில் விருப்பத்திற்குரிய புதிய பரத்தையான நயப்புப் பரத்தையைக் காமக்கிழத்தியாம் இற்பரத்தை புறங்கூறிப் பழித்தாள். அதனால் நயப்புப் பரத்தை இற்பரத்தையின் தோழி கேட்குமாறு, பாசிபடர்ந்த பெரிய இலைகளை உடைய நீர் நிலையில் வாழும் வாளைமீனைப் பிடிக்க நீர்நாய்கள் போராடியதால் நீர்துறை கலங்கியது. கலங்கிய நீரை உண்ணாது தெளிந்த கள்ளை உண்டு, குடத்தைப் பக்கத்திலே விட்டுவிட்டு, தத்தம் கணவர்மாரின் பரத்தமை ஒழுக்கத்தைப பாடிக் குரவைக் கூத்தாடினர் மனையுறை மகளிர். இனிய பெரிய பொய்கை உடைய தலைவன் அழைத்து வர, வந்த மகளிரான பரத்தையர், தன் அழகினை இகழ்ந்து பேசுவர். மதம் கொண்ட ஆண்யானை பாகனைக் கொல்லாமையால் பாகன் உயிருடன் இருக்கிறான். அதுபோலத் துணங்கைக் கூத்து ஆடும் விழாவில் தான் வராததால் நடந்த நிகழ்ச்சி இதுவாகும். அங்குத் தான் வந்திருப்பின், ஞாயிற்றுடன் திரியும் நெருஞ்சிப் பூவைப் போல் தலைவனையும் தான் செல்லும் இடம் எல்லாம் தன்னுடனே திரிய செய்திருப்பேன். அவ்வாறு தான் செய்யாதிருப்பின் தன் வளையல்கள் உடைந்துச் சிதறட்டும் எனக் கூறுகிறாள் காமக் கிழத்தி. இச்செய்தி

***“சூழற்காற் சேம்பின் கொழுமடல் அகலிலைப்***
***பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த***
***உண்ணாப் பிணவின் உயக்கஞ் சொலிய***
***நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்***
***வாளையோ டுழப்பத் துறைகலுழ்ந் தமையின்***
***தெண்கட் டேறல் மாந்தி மகளிர்***

*நுண்செயல் அங்குடம் இரீஇப் பண்பின்*
*மகிழ்நன் பரத்தமை பாடி யவிழிணர்க்*
*காஞ்சி நீழற் குரவை யயருந்*
*தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்*
*தேர்தர வந்த நேரிழை மகளிர்*
*ஏசுப என்பவென் நலனே அதுவே*
*பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக்*
*கொல்களிற் றியானை நல்கல் மாறே*
*தாமும் பிறரும் உளர்போற் சேறல்*
*முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்*
*யானவண் வாரா மாறே வரினே*
*சுடரொடு திரிதரு நெருஞ்சி போல*
*என்னொடு திரியேன் ஆயின் வென்வேல்*
*மாரி யம்பின் மழைத்தோற் சோழர்*
*வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை*
*ஆரியர் படையின் உடைகவென்*
*நேரிறை முன்கை வீங்கிய வளையே.”* *(அகம்.336)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில், யானையே பாகனைக் கொல்லும் தன்மையுடையது. யானை கொல்லாதிருந்தால் பாகன் உயிருடன் வாழ்வதும் இயல்பாகும். அதுபோலத் தான் விழாவிற்குச் செல்லாததால் இற்பரத்தையரும் பிறரும் அழகில் சிறந்தவர் போல் விளங்குகின்றனர் என நயப்புப் பரத்தை கூறுகிறாள்.

அகநானூற்று மருதப் பாடல்களில் காமக் கிழத்தியரே மிகுதியாய் உலாவருகின்றனர். இப்பரத்தையர் தலைவனைத் தம்மிடம் வைத்துக் கொள்வோம் என்று கூறுபவர்களாகவும் தலைவனை ஏசுபவர்களாகவும், தலைவியின் பேதைமை எண்ணி நகையாடுபவர்களாகவும் தலைவியின் நலம் கெடவும், தலைவி சினம் கொள்ளும் வண்ணம் அவளின் சேரிக்கே சென்று அவள் செருக்கைப் போக்குபவர்களாகவும், தலைவனைத் தன் பின்னே சுற்ற வைப்பதாக சூள் உரைப்பவர்களாகவும் செருக்குடன் உலா வருபவர்களாகவும் காணப்படுகின்றனர்.

### *2.3.4 நெய்தல்நிலப் பரத்தையர் கூற்று:*

ஐவகை நிலங்களில் இறுதியாக நெய்தல் நிலத்தைக் கூறுகிறார் தொல்காப்பியர். ***'பெருமணல் உலகம்'*** என்று நெய்தல் திணையைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. பெருமணல் என்பது கடற்கரைப் பகுதியைக் குறிப்பதாகும். நம்பி அகப்பொருளில் ***'திரை'*** என்று நெய்தல்நிலம் கூறப்பட்டுள்ளது.

***'திரை கடல் ஓடியும் திரவியம் தேடு'*** என்ற பொன்மொழியின்வழி சங்ககாலத்தில் பொருள் ஈட்டுவதற்காகக் கடல் கடந்து மக்கள் சென்றனர் என்பது புலனாகிறது. ***'கடல் சூழ் உலகு'*** என்று இவ்வுலகம் போற்றப்படுகிறது.

இந்நிலத்தில் பரத்தமை ஒழுக்கம் அதிகம் காணப்படவில்லை. எனினும் வணிகத்திற்காகக் கடல்வழி வந்தோர்களில் சில ஆடவர்கள் பரத்தமை மேற்கொண்டதால் இந்நிலத்திலும் பரத்தை வாழ்ந்தமை சில பாடல்கள்வழி காணமுடிகிறது.

#### *2.3.4.1 நற்றிணையும் ஐங்குறுநூறும்:*

நற்றிணையில் முன்னூற்றுப் பதினைந்தாவது பாடலிலும் ஐங்குறு நூற்றில் ***'கிழவற்கு உரைத்த பத்தில்'*** -நூற்றி இருபத்தொன்று முதலாக நூற்றி இருபத்தெட்டு வரையான பாடல்களிலும் நெய்தல் நிலத்தில் பரத்தை உலாவந்ததைக் காணமுடிகிறது.

##### *2.3.4.1.1 இல்லற நெறிப்படுத்தும் பரத்தை:*

அம்மூவனார் பாடிய நற்றிணை நெய்தல்திணைப் பரத்தை, தன்னை விட்டுப் பிரிந்த தலைவனைக் கடிந்தும் நொந்தும் கூறுவதாகப் பாடல் அமைகிறது. தலைவன் பரத்தையரை விடுத்து மீண்டும் தலைவியிடம் சென்றபோது தன்னைத் தேடி வந்த தலைவனின் மீதிருந்த கோபம் தீர்க்க இயலாதவாறு தலைவி நின்றாள். அச்சமயத்தே அவ்விடத்தில் வந்த தலைவனுடைய முதுமையுற்ற காமக்கிழத்தி ஒருத்தி, தலைவியைச் சினமுறாதவாறு அறிவுறுத்துகிறாள். தலைவனோடு உடன்படுத்துகிறாள். தலைவனை நோக்கி ***துறைவனே! முதிர்ச்சியுற்ற பின்னால் என்னைப்போல்***

***இவரும் உன்னால் கைவிடப்படுவாள்.*** எனவே ***‘அவளை விட்டுப்பிரியாது இருப்பாயாக! பிரிந்தால் உன்னை விரும்பிய தலைவி தீயிலே இட்ட மலர்போல கருகிப் போவாள்’*** என உள்ளுறைத்தும் வெளிப்படையாகவும் கடிந்து பேசினமையை உணர்த்துகிறது கீழ்வரும் பாடல்:

***“ஈண்டு பெருந் தெய்வத்து - யாண்டு பல கழிந்தென,***
***பார்த் துறைப் புணரி அலைத்தலின், புடை கொண்டு,***
***மூத்து, வினை போகிய முரி வாய் அம்பி,***
***நல் எருது நடை வளம் வைத்தென, உழவர்***
***புல்லுடைக் காவில் தொழில் விட்டாங்கு,***
***நறு விரை நன் புகை கொடாஅர், சிறு வீ***
***ஞாழலொடு கெழீஇய புன்னை அம் கொழு நிழல்***
***முழவு முதற் பிணிக்கும் துறைவ! நன்றும்***
***விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின்***
***தவறும்; நற்கு அறியாய் ஆயின், எம் போல்,***
***ஞெகிழ் தோள், கலுழ்ந்த கண்ணர்***
***மலர் தீய்ந்தனையர் நின் நயந்தோரே”*** *(நற்.315)*

பரத்தை தான் வயது முதிர்ந்ததால் தலைவன் தன்னை விட்டு விலகியது போலத் தலைவியையும் அவளின் முதுமையில் விலகி விடுவான் எனக் கூறுவதிலிருந்து தலைவனின் இயல்பை அறிய முடிகிறது. அதாவது, இளவயதுப் பெண்களையே தலைவன் விரும்புபவனாகக் காணப்படுகிறான்.

***“அம்பி முதிர்தலும் புன்னையின்கீழ்க் கொண்டுபோய்ப் பிணித்த வென்றது. முன்பு நின்னை யடைந்த மாதர் பலருஞ் சிறிது முதிர்தலும் அவரைப் பாதுகாவாது இவ்வயின் விடுத்தொழிந்தனை யென்றதாம்.”*** [86] **எனப்** பரத்தை தலைவன் தன்னைக் கைவிட்டுச் சேரிப்பரத்தையர் நலன் நுகர்ந்தார் என்பதை உள்ளுறையாகக் கூறுகிறார் அ.நாராயணசாமி ஐயர்.

‘‘***மனைவியை நினையாத தலைவனைப் பரத்தை இடித்துரைக்கும் பாட்டுஇது. ‘ஊரறிய மணந்த நல்லாளைக் கைவிடும் நீ எம்போல்வாரைக் கைவிடாதிருப்பாய்கொல்? தவற்றை நன்குணர். மலரைக் கருக விடாதே’ என்று தலைவனை ஒரு பரத்தை இல்லற நெறிப் படுத்துகின்றாள். ஆதலின்***

***ஐந்திணைப் பரத்தையை "மனையோள் ஒத்தலின் (1096) என நிகர்பட மொழிகின்றது தொல்காப்பியம்"*** [87] எனப் பரத்தையின் வரம்பாக வ.சுப.மாணிக்கம் காட்டுகிறார்.

நெய்தல் நிலப்பரத்தை தன் பாடலில் கருப்பொருள்களை உவமையாகக் கையாள்வதைக் காணமுடிகிறது. நெய்தல் நிலத் தொழில் மீன் பிடித்தல் ஆகும். அதற்குத் தோணியைப் பயன்படுத்துவர். அத்தோணி பல காலம் பயன்படுத்தப்பட்டபின் ஓட்டுவதற்குரியது அல்ல எனப் பரதவர் கைவிடுவர். அப்பயனற்ற தோனியை ஞாழல் மரத்தோடு சேர்த்துப் புன்னை மர நிழலில் கட்டிவைப்பர். உழவர்கள் உழவுக்குப் பயன்படாத எருதுகளைப் புல்லுடைக் காவில் விடுவர். அ்.து அவர்களின் இரக்க குணங்களைக் காட்டுதல் ஆகும் என்றும் அத்தகைய இரக்கம் கூட தலைவனிடத்தில் இல்லையே என நொந்து தலைவனை ஏசினாள். அம்பியாகிய தோணியும் எருதுவும் பெற்ற பேறுகூட தான் பெறமுடியவில்லையே என வருந்துகிறாள் காமக்கிழத்தி. இந்தப் பாடலில், ***'தோணி முதிர்ந்த பின் புன்னையின் கீழ்ச்சேர்ப்பர் என்றது, தலைவனை அடைந்த மாதர் வயது முதிர்ந்தபின் கைவிடப்பெறுவர்'*** என உள்ளுறையாக உணர்த்தப் படுகிறது. நிலத்தின் கருப்பொருளான தோணி, புன்னை, ஞாழல் (மரம்) போன்றனவும் காட்டப் பெறுகின்றன. இப்பாடலில் அமைந்துள்ள உள்ளுறை உவமம்வழி தலைவன் மற்றும் பரத்தையரின் இயல்பு புலப்படுத்தப்படுகிறது.

#### *2.3.4.1.2 பரத்தை உணர்த்தும் தலைவியின் அறியாமை:*

ஐங்குறுநூற்றில் பெருமணல் உலகமான நெய்தல்திணைப் பாடலைப் பாடியவர் அம்மூவனார். '**கிழவற்கு உரைத்த பத்து**' என்ற பத்துப் பாடல்களில் இறுதி இரு பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை. தலைவனைக் ***'கிழவன்'*** எனக் குறிப்பிடுகிறார் அம்மூவனார். இப்பத்துப்பாடல்கள் தலைவன் கேட்கும் வண்ணம் பரத்தையானவள் தலைவியின் இயல்பைக் கூறுவதாக அமைந்துள்ளன. இத்திணையில் பரத்தையானவள் பெதும்பை பருவத்திற்குரியவள். ***"பெதும்பைப் பருவம் என்பதற்கு எட்டு வயது முதல் பதினொன்று வயதுடைய பெண் ஆவாள்"*** [88] என்று தமிழ் அகராதி சுட்டுகிறது. ஆதலால் ஐங்குறுநூறு நெய்தல் பரத்தை இளமை மிக்கவளாய்

இருந்தாள். இவ்விளம் பரத்தையுடன் கூடி நின்றான் தலைவன். அதனை அறிந்த தலைவி ஊடினாள். அதை அறிந்த தலைவன் இத்தவறுக்குத் தான் காரணமல்ல; அவள் தான் இப்புலவியை நீக்க வேண்டும் என்று பரத்தையின் தோழியிடம் கூறினான். அப்புலவியை நீக்க எண்ணியவள் தலைவியின் இளமையைச் சொல்லி நகையாடினாள். மேலும், 'தலைவனே, நின் நட்பாயினாளான தலைவியை தான் நன்கு அறிவேன் என்றும் கழிமுள்ளி மலரை அணிந்த தன் கூந்தல் நனையும்படியாகத் தெளிவான அலை (திரை) நிரம்பிய கடலில் அவள் விளையாடி மகிழ்கிறாள் எனக் கூறுவதாகக்,

***"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே***
***முண்டகக் கோதை நனையத்***
***தெண்டிரைப் பெளவம் பாய்ந்து நின்றோளே!"*** *(ஐங்.121)*

என்ற பாடல் விளக்குகிறது. தலைவி மடமைப் பொருந்தியவள்; ஆதலால் அவளுடன் பழகுதல் ***'ஒத்த காமம் அன்று'*** என்று குறிப்பாக உணர்த்துவதை,

***"ஒள்ளிழை உயர் மணல் வீழ்ந்தென***
***வெள்ளாங் குருகை வினவு வோளே"*** *(ஐங்.122:2-3)*

என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது. இவற்றில் தலைவி, மணல் பரப்பில் விளையாடும்போது தனது ஒளிப் பொருந்திய அணிகலன் மணலில் விழுந்தது. அதனைத் தேடுதல் பொருட்டு, அம்மணற் பகுதியில் மேய்ந்து கொண்டிருந்த வெள்ளாங் குருகினை நோக்கி, ***'நீ என் அணியைப் பார்த்தாயா? என வினவுகிறாள். அணியின் பயன் தலைவியே அறிவாள். திறமில்லாத குருகா அறியும்?; இச்செயலில் இருந்தே உன் தலைவி 'மடமைப்' பொருந்தியவள் என்பதை அறிந்து கொள்!'*** எனத் தலைவனிடம் பரத்தை கூறுகிறாள்.

தலைவியோ சிறுமியர்களுடன் சேர்ந்துக்கடலில் குதித்து நீராடி விளையாடும் தன்மையள். ஒளிபொருந்திய நெற்றியை உடைய தலைவி இவ்வாறு சிறுபிள்ளையாய் விளையாடுவதை யான் அறிவேன் என்று பரத்தை தலைவனிடம் கூறுவதை

***"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே***
***ஒண்ணுத லாய மார்ப்பத்***
***தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே"*** *(ஐங்.123)*

என்ற பாடல் அழகுறப் புலப்படுத்துகிறது. மேலும் தான் செய்த ***'வண்டற் பாவை'***யான மணல் வீட்டை கடல் அலை அழித்ததால் தலைவி தன்கண்கள் சிவக்க அழுது நின்றாள். இச்செயலும் அவளது அறியாமையைத் தான் காட்டுகிறது எனப் பரத்தை தலைவனிடம் கூறுகிறாள். இதனை

***"கண்டிகு மல்லமோ கொண்கின் கேளே***
***தெண்டிரை பாவை வௌவ***
***உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே"*** *(ஐங்.125)*

என்ற பாடல் உணர்த்துகிறது.

வண்டல் பாவையை அலை அழித்ததைப் பார்த்த தலைவி செய்வதறியாது அழுகிறாள். இவற்றை ***'அறியாமை'*** என்று பரத்தை கருதுகிறாள். இதன்வழி அம்மூவனாரே உள்ளுறைப் பொருளை உணர்த்துகிறார். தலைவன் தலைவியோடு ஒழுகிக் கற்பொழுக்கம் மேற்கொள்ளாமல் பரத்தையோடு வாழ்ந்ததால் இல்லறவாழ்வு சிதைந்தது என்பதே உள்ளுறை ஆகும். ***'வண்டல் பாவை'*** என்பது ***'இல்லறத்தையும்'***; ***'கடல் அலை'*** என்பது ***'பரத்தமை'***யையும் குறிப்பன ஆகும். இல்லற ஒழுக்கம் பரத்தமையொழுக்கத்தினால் சிதைந்ததை எண்ணித் தலைவி துயருவதை மேற்கூறிய பாடல்கள் உணர்த்துகின்றன. தலைவி தெளிந்த கடலில் பெரிய அலைகளின் நடுவே மூழ்கி நீராடினாள் எனப் பரத்தை தலைவனிடம் கூறியதைப் பின்வரும் பாடலில் காணமுடிகிறது.

***"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே***
***உண்கண் வண்டின மொய்ப்பத்***
***தெண்கடற் பெருந்திரை மூழ்குவோளே"*** *(ஐங்.126)*

***"இது புலவி கொண்டு கூறியதாகக் கொண்ட வழி, வண்டுகள் மொய்த்தல் போல் நின் உள்ளம் அவளின் பிரியாது சூழ்ந்தது எனச் சினந்து உரைத்ததாம்"***[89] என்று பரத்தையின் சினத்தை எடுத்துரைக்கிறார் அ.மாணிக்கம்.

இதனின்று தலைவன் பரத்தை ஒழுக்கம் மேற்கொண்டிருந்தாலும் அவனது மனம் தலைவியையே சேர்ந்திருந்ததால் பரத்தை சினம் கொள்வதையும் உணர முடிகிறது.

இளம் மகளிர் மட்டுமே அணியும் தும்பைப்பூ மாலையை அணிந்த தன் இள முலைகள் பொருந்திய நுண்ணிய பூண் அணிந்த மார்பு தழுவுவதற்கண் பொருந்தாத வகையில் வலிந்து நீங்குகின்றாளாகலின் நின் தலைவியை (வேறொரு பரத்தையை) அறிவேன் எனப் பரத்தை தலைவனிடம் கூறுவதைக்

***"கண்டிகு மல்லமோ கொண்கின் கேளே***
***தும்பை மாலை யிளமுலை***
***நுண்பூ ணாகம் விலங்கு வோளே"*** *(ஐங்.127)*

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இதில், ***"நுண்பூண் ஆகம் விலங்குவோள் என்பதில் எம்மிடம் நின்றதைப் போன்று பிற மகளிர் மாட்டும் தாழ்ந்து நிற்பதை நீ வெறுப்பதில்லை. ஆதலால் நின் பரத்தமையை மறுக்க எண்ணின நின் கேளாகிய அப்பரத்தை நின் தழுவுதலுக்கு உட்படாது விலகினாள் என்றாள்."***[90]

இதனின்று இப்பாடலில ***'நின் கேளே'*** என்பது தலைவியைக் குறிக்காது மற்றொரு பரத்தையைக் குறிக்கிறது; மற்ற பரத்தையரிடத்தும் தலைவிமாட்டும் புலப்பட ஒழுகாது தலைவன் அவர் புல்லுதலை மறைத்து ஒழுகுவதால் தோன்றிய புலவி ஆகும்.

***'தலைவி விளையாட்டுப் பருவம் உடையவளாக இருப்பதை மேற்கூறிய பாடல்கள் விளக்குகின்றன ஆயின் தலைவனுடன் கூடிப் பிள்ளை இன்பம் பேணத் துடிப்பதை'*** உணர்த்துகிறது கீழ்வரும் செய்தி. பால் ஊறப்பெறாத தன்வறிய முலையில் தலைவி மரப்பாவையை வைத்துப் பால் உண்ணச் செய்கிறாள். மேலும் அன்புச்சொற்களைக் கூறி விளையாடுகிறாள். இத்தகைய தலைவியை நன்கு அறிவதாகப் பரத்தை தலைவனிடம் கூறுகிறாள். மேலும் இச்செயலுக்கு இகழ்ந்தும் பேசினாள். தலைவியின் இச்செயலைக்

***"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே***
***ஊறாஅ வறுமுலை மடாஅ***

***உண்ணாப் பாவை யூட்டு வோளே!"*** *(ஐங்.128)*

என்ற பாடல் உணர்த்துகிறது.

இந்நெய்தல் பரத்தை, தலைவியின் விளையாட்டுக் குணத்தை எள்ளி நகையாடுவதிலிருந்து தலைவி அறியாமையும் சிறுபிள்ளைத்தனமும் கொண்டிருப்பது புலனாகிறது.

***2.4 பரத்தையின் தோழி கூற்று:***

சங்கப் பாடல்களில் தலைவன், தலைவி, தலைவியின் தோழி, பரத்தை, நற்றாய், செவிலித்தாய் வரிசையில் ஓரம்போகியார், பரத்தையின் தோழியையும் காட்டுகிறார். ***"சங்க இலக்கியத்தில் பரத்தையின் தோழிக்குப் பெரிதும் இடமில்லை. அத்தோழியைக் கேட்பவளாக வைத்துப் பரணர் பாடிய பாட்டு ஒன்று உண்டு (நற்.100). பரத்தை தன் தோழிக்குச் சொல்லியது என்ற துறையில் வைத்து ஓரம்போகியாரும் சில பாடல்கள் பாடியுள்ளனர். இவ்வளவில் பரணரும் ஓரம்போகியாரும் ஒப்பர்."*** [91] பரத்தையின் தோழி கூற்றாகப் பாடிய ஓரம்போகியாரின் பாடல் கீழ்வருமாறு:

***"புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்***
***யார்மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந***
***யார்மக ளாயினு மறியாய்***
***நீயார் மகனையெம் பற்றி யோயே"*** *(ஐங்.79)*

இப்பாடல் தலைவனிடம் ***'நீயார் மகன்?'*** எனப் பரத்தையின் தோழி வினாவுவதாக அமைகின்றது. புதுப்புனலில் தலைவன் தனித்து நீராடினான். அதனைக் கண்டு பொறுத்துக்கொள்ள இயலாத பரத்தையும் தனித்து நீராடினாள். தலைவன் அவ்விடத்தைவிட்டு நீங்கும் வரையிலும் தொடர்ந்து வெகுநேரம் நீராடினாள். அவ்வாறு நீராடியதால் பரத்தையின் கண்கள் சிவந்தன. அவளது பார்வையிலேயே அவளின் புலவி தென்பட்டது. அவளின் புலவியைத் தீர்க்க எண்ணிய தலைவன், ***'யார் மகள் இவள்?'*** என்று அறியாதவனைப் போல் வினவிப் பரத்தையின் கைகளைப் பற்றிக் கொண்டான். அப்போது, அப்பரத்தையின் தோழி தலைவனிடம், ***'இவள் யார் மகள் என்று அறியாமலே கைப்பற்றியவனே, நீ யார் மகன்? அதனை***

***முதலில் கூறுக!'*** என்று வினாவுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இக்கூற்றினை, ***"அப்பரத்தையை அறியாதவன் போல் தலைவன் மக்களினத்தன்றித் தேவமகள் போல் அழகுடையவளாய் விளங்கும் இவள் என்னும் கருத்துத் தோன்ற 'யார் மகள் இவள்' என்றான். இவள் நின் பெண்டே என்றாலும், 'நீ தனித்துப் போய் நீராடினாய். ஆதலால் இப்போது இவள் யார் என்பதை எடுத்துக் கூறினும், நீ அறியாய்' எனச் சொல்ல வந்தவள் யார் மகளாயினும் அறியாய் என்றாள். அறியாதவன் போன்று வினவுவதும் அறிவதற்கு முன்பே கைப்பற்றுவதும் செய்தாய். ஆதலின் நின்னை விரும்புகின்றோம் என்பாள். 'நீ யார் மகனை எம்பற்றியோயே' என்றும் கூறினாள்"*** [92] என்பர் அ.மாணிக்கம். பரத்தையின் தோழி கூற்றில் அமைந்த இப்பாடல்வகையால் கற்புக்கூற்றுக்கு உரியோர் எண்ணிக்கையில் ஒன்றைக் கூட்டிய ஓரம்போகியாரின் பெருமையை, ***"இத்தோழி கூற்றாகப் பாடிய சங்கச் சான்றோர் ஓரம் போகியார் ஒருவரே. இவ்வகையால் கற்புக் கூற்றுக்கு உரியோர் எண்ணிக்கையில் ஒன்றைக் கூட்டிய பெருமை உடையவர் இப்புலவர். மரபுநிலை திரியாமல் அகத்திணையை வளர்க்கலாம் என்பதற்கு ஈண்டு ஒரு சான்று காண்க. தலைவியும் தோழியும் இணைபிரியா நண்பிகளாதலின், தலைவி நிலையில் தன்னை வைத்துத் தோழி பேசுவாள் என்பது இலக்கணம். தலைவி தோழியின் இலக்கணத்தைப் பரத்தைத் தோழியின் நடையிலும் காணலாம். 'நீயார் மகனை எம்பற்றியோயே? என்று சொல்லும்போது, 'எம்' என்பது உண்மையில் பரத்தையைக் குறிக்கும் எனினும், அன்பின் ஒற்றுமைபற்றி அவளது தோழி தன்மைப்பன்மை நடையிற் கூறுவள்"*** [93] என்று கூறுகிறார் வ.சுப.மாணிக்கம்.

சங்க இலக்கிய எட்டுத் தொகை, பத்துப்பாட்டில் எந்த ஒரு புலவரும் இத்தகு சிந்தனையுடன் பாடியமையைக் காண முடியவில்லை தலைவிக்குத் தோழி போல் பரத்தைக்கும் தோழி இருந்தமைக்கு இப்பாடலே சான்றாக அமைகிறது.

### *2.5 தொகுப்புரை:*

தமிழர்களின் பண்பாட்டையும் நாகரீகத்தையும் எடுத்துரைப்பது சங்க இலக்கியங்களே ஆகும். அகவாழ்வின் காதலையும் புறவாழ்வின்

வீரத்தையும் எட்டுத்தொகை பத்துப்பாட்டு நூல்கள் விளக்குகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளின் அகவாழ்வின் காதலையும் அன்பையும் அந்நில அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, தாய், நற்றாய், பரத்தை போன்ற கதாப்பாத்திரங்கள் உணர்த்துகின்றன. இவர்களில் பரத்தையானவள் தலைவன் தலைவியை விட்டுப்பிரிவதற்கும், தலைவன் தலைவிக்கிடையேயான ஊடலுக்கும் காரணமாகிறாள். இப்பரத்தை ஐந்நிலத்திலும் பெறும் இடமும் செயலும் குறித்துப் பரத்தைக்கூற்றுவழி விளக்கப்பட்டுள்ளது.

பரத்தையர் கூற்றாய் அமையும் இவ்வியலில் ஐந்திணைகளிலும் பரத்தையர் பொருட்பெண்டிராக, காமக் கிழத்தியாக, இற்பரத்தையாக, சேரிப்பரத்தையாக, காதற்பரத்தையாக உலா வருவதை அறிய முடிகின்றது. தலைவியின் பூப்புக் காரணமாகப் பரத்தையை நாடிவரும் தலைவனைப் பூப்பு முடிந்தபின் மீண்டும் தலைவியிடமே சென்று சேருமாறு கூறும் பரத்தையை இரக்ககுணமும் பரிவும் கொண்டவளாகக் காண முடிகின்றது. வில்லக விரலினார் பாடிய முல்லைநிலப் பரத்தை தலைவியை விட தலைவனிடம் அதிக அன்பைக் காட்டி மிக்க இன்பம் தருபவளாகவும் ஓருயிர் ஈருடலாக வாழ்ந்து தலைவியை இகழ்ந்தும், தன்னைத்தானே புகழ்ந்து கொள்பவளாக இருப்பதையும் உணர முடிகின்றது. தலைவிக்கு மகவு பிறந்தது எனக் கேட்ட உடன் பரத்தையை விட்டுவிட்டு நடுயாமத்தில் தனதில்லம் செல்லும் தலைவனின் செயலைக் கண்டு இகழ்வதையும், தன்னை நாடிவந்த தலைவனிடம் தலைவனது செயலைத் தலைவியிடம் கூறிவிடுவேன் எனக் கூறி அச்சுறுத்தும் பரத்தையையும், தலைவன் தரும் பொருளைப்பெற்று இன்பம் தரும் வஞ்சினப் பரத்தையையும், தலைவனின் அன்பிற்கும் வரவிற்கும் ஏங்கி நிற்கும் காதற்பரத்தையையும், அழகுமிகுந்த புதிய பரத்தையைக் கண்டு வியக்கும் மற்றொரு பரத்தையையும், தலைவன் பல மகளீரை மணம் புரிவதை அறிந்து இகழும் பரத்தையை ஔவைப் பாடலிலும், ஆலங்குடி வங்கனாரின் பாடலில் தலைவன் தன்னை விட்டுப் பிரியமாட்டான் என நம்பும் காமக்கிழத்தியையும் தலைவனின் சுதந்திரப் போக்கை எடுத்துரைக்கும் பரத்தை, தலைவியைத் ***‘தன் புதல்வன்தாய்’*** என்று கூறி குழந்தை மீதான உரிமையைக் கொண்டாடும் காமக்கிழத்தி, தானாக வந்தத் தலைவனையே தான் புணர்ந்தேனன்றி வேறுத் தவறு

செய்யவில்லை என அஞ்சும் காமக்கிழத்தி, தன்னோடு புனலாட வந்த தலைவனைத் தலைவி காக்க முடிந்தால் காத்துக் கொள்ளட்டும் எனத் தலைவிக்குச் சவால்விடும் பரத்தை, எந்த விதத்திலும் தனக்கு ஈடுஆகாத சேரிப்பரத்தையின்மீது சினம் கொண்டு பொய்யாக்குவதிலும் வல்லவன் எனக் கூறும் பரத்தை, தலைவனைக் கடிந்து கொள்ளும் உரிமை கொண்ட பரத்தை, தலைவன் தன்னுடன் மட்டுமே நீராடவேண்டும் இவ்வூரார் அலரலாகப் பேசுவேண்டும் என விரும்பும் பரத்தை ஆகியோரை காண முடிகின்றது.

பரத்தையர் கூற்றில் உள்ளுறை உவமம் இல்லை என்று தொல்காப்பியர் கூறியிருந்தாலும் பிற்கால உரையாசிரியர்கள் பரத்தையர் கூற்றிலும் உள்ளுறை அமைந்திருத்தலை நற்.315,390, குறுந்.8, ஐங்.40,81, 86,87,88,125, அகம்.76 ஆகிய பாடல்களில் அறியமுடிகிறது.

பரத்தையர் கூற்றுப் பாடல்களின் வாயிலாகப் பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் அன்பும் பண்பும் கொண்ட கற்புடைத் தலைவியை விட கட்டுப்பாடின்றித் திரியும் பரத்தையர்க்குப் பிள்ளைப்பேற்று உரிமையைத் தவிர கருத்துச் சுதந்திரம் தலைவன்மீது உரிமைக் கொண்டிருக்கும் துணிச்சல், தலைவிக்கு நிகராகத் தம்மை எண்ணும் குணம் கொண்டவர்களாகவும் வலம் வருவதை அறியமுடிகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பக்.24
2. மேலது, பக்.5,6
3. வரதராசன், மு., தமிழ் இலக்கிய வரலாறு, பக்.38
4. மேலது, பக்.55
5. தமிழண்ணல், சங்கமரபு, பக்.362,364,367,368,377,382,383,384
6. கழக வெளியீடு, கலித்தொகை சொற்பொழிவுகள், பக்.98-99
7. மாதையன், பெ., தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், பக்.137
8. செல்வராசு, சிலம்பு நா.,சங்க இலக்கிய மறுவாசிப்பு, பக்.170
9. மேலது, பக்.170
10. மேலது, பக்.172
11. நாராயணசாமி ஐயர், அ., (உ.ஆ) நற்றிணை, மூலமும் உரையும், பக்.220
12. மேலது, பக்.221
13. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.221
14. சிலம்பு நா.செல்வராசு, மேலது, பக்.175
15. சாமிநாதையர் உ.வே., (பதிப்பாளர்) குறுந்தொகை மூலமும் உரையும், பக்.737
16. சுதமதி, இரா.,(உ.ஆ), நம்பி அகப்பொருள், பக்.14
17. பாலசுப்பிரமணியன், கு.வெ., (உ.ஆ) சங்க இலக்கியம், நற்றிணை, பக்.180
18. மேலது, பக்.180
19. நாராயணசாமி ஐயர், (உ.ஆ) அ., மேலது, பக்.126
20. கருணாநிதி. மு., சங்கத்தமிழ், பக்.90-91
21. பாலசுப்பிரமணியன், கு.வெ., (உ.ஆ) மேலது, பக்.277
22. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.220
23. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) சங்க இலக்கியத்தில் மருதப் பாடல்கள் பக்.49
24. பாலசுப்பிரமணியன், கு.வெ., மேலது, பக்.398
25. மேலது, பக்.398

26. மேலது, பக்.590
27. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) மேலது, பக்.65
28. பாலசுப்பிரமணியன், கு.வெ.,(உ.ஆ), மேலது, பக்.722
29. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) மேலது, பக்.65
30. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.220
31. நாராயணசாமி ஐயர், (உ.ஆ) அ., மேலது, பக்.492
32. சாமிநாதையர் உ.வே., (பதிப்பாளர்), மேலது, பக்.xxxvii
33. கழக வெளியீடு, குறுந்தொகை சொற்பொழிவு, பக்.124
34. மேலது, பக்.124
35. நடராசன், வி.,(உ.ஆ) சங்க இலக்கியம், குறுந்தொகை, பக்.29.
36. சாமிநாதையர், உ.வே., (பதிப்பாளர்) மேலது, பக்.24
37. தமிழண்ணல், (உ.ஆ) சங்க இலக்கியம், குறுந்தொகை, பக்.32
38. கருணாநிதி, மு., மேலது, பக்.56
39. மேலது, பக்.58
40. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) மேலது, பக்.79
41. தமிழண்ணல், (உ.ஆ), மேலது, குறுந்தொகை, பக்.117
42. மாணிக்கம், அ.,(உ.ஆ), சங்க இலக்கியத் தொகுதி-3, பக்.97
43. மேலது, பக்.96
44. மேலது, பக்.97
45. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) மேலது, பக்.117
46. மாணிக்கம், அ.,(உ.ஆ), மேலது, பக்.101
47. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ) மேலது, பக்.67
48. மாணிக்கம், அ.,(உ.ஆ) மேலது, பக்.174
49. மேலது, பக்.175
50. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), மேலது, பக்.117
51. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.183
52. மேலது, பக்.188
53. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ)ஈ மேலது, பக்.128
54. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.190
55. ஔவை சு.துரைச்சாமி, (உ.ஆ) ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக்.257
56. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), மேலது, பக்.130

57. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.192
58. ஔவை சு.துரைச்சாமி, (உ.ஆ), மேலது, பக்.258
59. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.193
60. மேலது, பக்.193
61. ஔவை சு.துரைச்சாமி, (உ.ஆ), மேலது, பக்.263
62. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.194
63. மேலது, பக்.194
64. நச்சினார்க்கினியர், (உ.ஆ), கழக வெளியீடு கலித்தொகை, மூலமும் உரையும், பக்.9
65. மேலது, பக்.24
66. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.139
67. நச்சினார்க்கினியர், (உ.ஆ), மேலது, பக்.208
68. மாதையன், பெ., மேலது, பக்.133
69. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.347
70. மாதையன், பெ., மேலது, பக்.140
71. நச்சினார்க்கினியர், (உ.ஆ), மேலது, பக்.211
72. மாதையன், பெ., மேலது, பக்.140
73. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.461
74. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.348-349
75. மாதையன், பெ., மேலது, பக்.141
76. அரவிந்தன், மு.வை., உரையாசிரியர்கள், பக்.302
77. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.387
78. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.331
79. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.259
80. மேலது, பக்.259-260
81. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.331
82. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.593
83. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.332
84. மேலது, பக்.332
85. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.186
86. நாராயணசாமி ஐயர், அ., (உ.ஆ), மேலது, பக்.389
87. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.226

88. சுப்பிரமணியன், ச.வே., (பதிப்பாசிரியர்), மெய்யப்பன் தமிழகராதி, பக்.880
89. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.257
90. மேலது, பக்.257
91. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.283
92. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.176-177
93. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.283-284

# இயல்-மூன்று

# பொருளடக்கம்

# இயல் மூன்று

## தலைவி தோழிக் கூற்றில் உள்ளுறை வழிப் பரத்தமை

### *3.0 முன்னுரை:*

கற்பிலும் களவிலும் பரத்தையர் ஒழுக்கம் இருந்தமை சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. புலவர்கள் இவ்வொழுக்கத்தைப் போற்றவும் இல்லை, புறக்கணிக்கவும் இல்லை என்ற உண்மையை அவர்தம் பாடல்களில் காணப்படும் உள்ளுறை உவமங்கள் எடுத்துரைக்கின்றன. தொல்காப்பியரும் பரத்தமையை ஏற்கவில்லை என்பது அவரின் பரத்தையர் பிரிவு சூத்திரத்தால் அறியமுடிகிறது. ஆனால் பாடலுக்கு இன்பம் சேர்ப்பது உள்ளுறை உவமையே ஆகும். புலவர்கள் உள்ளுறை என்னும் கருவியைக் கொண்டு பரத்தையர்களின் இழிநிலையையும் தலைவனைப் பரத்தன் என்று சுட்டி அவன் இயல்பையும் உணர்த்தியமை இவ்வியல் எடுத்துரைக்கின்றது. தலைவி மற்றும் தோழி கூற்றில் வரும் உள்ளுறையால் பரத்தையர் எவ்வாறு சித்திரிக்கப்பட்டுள்ளனர் என்பதையும் இவ்வியல் எடுத்துரைக்கிறது. இவ்உள்ளுறையின் பயனை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய சங்க நூல்கள்வழி உணர்த்துவதற்கு இவ்வியல் முயல்கின்றது.

### *3.1 உள்ளுறை – ஒரு விளக்கம்:*

அகத்திணைப் பாடல்களின் உள்ளடக்கத்தில் சிறப்புற்று அமைவது உள்ளுறை உவமம். கவிஞர், தாம் உணர்த்த விரும்பும் செய்தியை நேரடியாகக் கூறாமல் குறிப்பால் உணர்த்தும் பாங்கு படிமத்தின் புறத்ததாக அமையும். நிலத்திற்கேற்ப உள்ளுறை உவமங்களைப் பாடுவதில் சங்கப்புலவர்கள் சிறப்புடனே திகழ்கின்றனர். உள்ளுறை உவமத்தின் இலக்கணமாகத் தொல்காப்பியர்

> ***“உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென***
> ***உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்”*** *(தொல்.பொருள்-51)*

என்னும் நூற்பாவில் உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளைக் கருதிய இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம் என விளக்குகிறார்.

***“வினைபயன் மெய்உரு என்ற நான்கே***

***வகைபெற வந்த உவமைத் தோற்றம்.”*** *(தொல்.பொருள்-272)*

என்ற நூற்பா உவமையின் சிறப்பை எடுத்துரைக்கிறது. பாடலுக்கு அழகு சேர்க்கும் அணிகலனே உவமை. கவிஞர்களின் நுண்ணிய பார்வையும், தெள்ளிய உணர்வும் கலந்து உவமை உருவாகும்போது பாடல் அழகு பெறுகிறது. இந்த வகையில் சங்க இலக்கியப் பாடல்கள் தெளிந்த நீரோட்டமான உவமைகளுடன் அமைந்து உள்ளத்தை ஈர்க்கின்ற வாழ்வியல் காட்சிகளை வெளிப்படுத்துகின்றன. உவமையின் இந்த அழகுணர்ச்சி சங்கப் பாடல்களில் சிறப்புற அமைந்துள்ளது.

**“உள்ளுறையுடைய பாட்டு மலரணிந்த கூந்தல் போன்றது. இலக்கிய அழகை மிகுவிப்பது. இயற்கை வனப்பும் உவமைத் தன்மையும் உள்ளப்பதிவும் நாகரிகப் பண்பும் புலமைக்கூர்மையும் உள்ளுறையால் விளங்கும்”** [1] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

உவமைக்காட்சிகள் யாவும் இயற்கையாக அமைந்த இயல்பின தொன்மம், இறைமை என்பன முதலாகக் கண்முன் தெரியும் நுட்பமான காட்சிகள் வரை தம் உள்ளத்தைக் கவர்ந்த காட்சிகளை எல்லாம் உவமைகள் வாயிலாகச் சிறப்புறுத்தும் வளமான புலமை சங்கப் புலவர்களின் திறமைக்குச் சான்றுமாகும்.

உவமைக்காட்சிகள் கண்ணுக்குள் நிற்பன; எண்ணத்தில் நிலைப்பன; இயற்கையின் இயல்பான செயல்களை வெளிப்படுத்துவன; உலகியல் தன்மையை உணர்த்துவன; உள்ளத்தில் கவிதைச் சுவையைப் பதிப்பன.

***‘புலவன் தான் கருதிய பொருளைப் பாடலின் உள்ளே வைத்துப் பாடுவதே’*** உள்ளுறையாகும். ***“உள்ளுறை என்பது உட்படுகை, உள்ளிருக்குஞ்சத்து, உள்ளான கருத்து, உடன்படிக்கை இரகசியம்”*** [2] என்று மதுரைத் தமிழ்ப்பேரகராதி விளக்கம் தருகின்றது. ***“அகமும் புறமும் பற்றிய ஒழுகலாறுகளைச் செய்யுளில் வடிக்கும் புலவன், அகத்திணை நிகழ்ச்சி புலப்படுவதற்குத் தான் கருதிய பொருளைக் கருப்பொருள் வாயிலாக***

***அச்செய்யுள் தொடர்களில் உள்ளுறையாக அமைத்துக் கூறுவதே உள்ளுறையாகும்"***[3] என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்குகின்றது.

***"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்***
***கொள்ளும் என்ப குறியறிந் தோரே"*** *(தொல்.பொருள்.50)*

என்ற தொல்காப்பியச் சூத்திரம் வழியாக உள்ளுறையில் தெய்வம் தவிர்த்த ஏனைய கருப்பொருள்கள் நிலைக்களமாகக் கையாளப்பட்டுள்ளமை உணரமுடிகின்றது.

***"உடனுறை உவமம் சுட்டுகை சிறப்பெனக்***
***கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே."*** *(தொல்.பொருள்.238)*

எனத் தொல்காப்பியர் உள்ளுறையை ஐந்து வகையாகப் பிரித்துக் காட்டுகிறார்.

***"ஒன்றனை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமற் கூறலின் அவற்றை உள்ளுறையாமென்றார் என்பது உள்ளுறைக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம்."***[4] முடிவில்லா இன்பம் நல்கும் சங்க அகத்திணையில் இடம்பெறும் உள்ளுறைக் கருத்துச் சிறப்பினை எடுத்துரைப்பதே உள்ளுறையின் பயன் என்பதை,

***"அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்***
***தன்வயின் வருதலும் வகுத்த பண்பே"*** *(தொல்.பொருள்-239)*

என்ற நூற்பா எடுத்துரைக்கின்றது.

***"உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று...........உடனுறையாவது உடனுறைவதொன்றைச் சொல்ல, அதனாலே பிறிதொரு பொருள் விளங்குவது....... உவமம் என்பது உவமையைச் சொல்ல, உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது........சுட்டு என்பது ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல்......, நகையாவது நகையினாற் பிறிதொரு பொருளுணர நிற்றல்...........சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இ.்.து எனக் கூறுவதுதானே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது"***[5] என்பார் இளம்பூரணர்.

"***தலைவி, தோழி போன்றோர் தலைவனை விமர்ச்சிக்க இயலாது. தலைவனின் குறைகளை உள்ளுறை உவமம்வழி மிக மென்மையாகச் சுட்டிக் காட்டலாம். அதுவும் எல்லை மீறாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும்"*** [6] என்று உள்ளுறையின் இன்றியமையாமையை அ.க.அழகர்சாமி குறிப்பிடுவதைக் காண முடிகின்றது.

### *3.2 தலைவி கூற்றில் உள்ளுறைவழிப் பரத்தமை:*

சங்க அக நூல்களில் தலைமைப் பாத்திரமாய் உலாவரும் தலைவி தனது உணர்வுகளின் இன்ப துன்பங்களைத் தனது கூற்றின் வழியாக உணர்த்துவாள். உரிப்பொருளைச் சுட்டி உணர்த்தும் தன்மையன அகப்பாடல்கள். ஐங்குறுநூற்றில் தலைவி தன் கூற்றில் கருப்பொருளை உள்ளுறையாகப் பயன்படுத்தும் நெறியை இப்பகுதி விளக்குகின்றது. தலைவனின் பரத்தமையொழுக்கத்தையும், பரத்தையின் இயல்பையும் தலைவியின் கூற்றால் உணர முடிகிறது. ***"உள்ளுறை என்னும் இலக்கியக் கருவி மருதப்புலவர்க்கு இன்றியமையாதது. 50 பாடல்களுக்கு மேலாக உள்ளுறை அமைத்துள்ளார் ஓரம்போகியார். இரண்டடிகளில் உள்ளுறை காட்டித் தொடுப்பது இவர்தம் யாப்பு முறையாகும்"*** [7] என்பர் வ.சுப.மாணிக்கம்.

### *3.3 ஐங்குறுநூறும் பரத்தமையும்:*

### *3.3.1 தலைவி பார்வையில் பரத்தமை:*

ஓரம்போகியார் தமது வேழப்பத்து, களவன்பத்து, தோழிக்கு உரைத்த பத்து, புலவிப் பத்து, தோழிகூற்றுப் பத்து, கிழத்திகூற்றுப் பத்து, புனலாட்டுப் பத்து, புலவி விராயப் பத்து, எருமைப் பத்து ஆகிய பாடல்களில் வரும் பரத்தையின் இயல்பு உள்ளுறைவழி கூறப்பட்டமை இப்பகுதி எடுத்துரைக்கிறது. தலைவி இல்லிலே இருந்து சிறப்புச்செய்தாலும் தலைவன் தலைவியிடமும் பரத்தையிடமும் இன்பம் நுகரும் இயல்புடையவன் என்பது பின்வரும் பாடல்கள் வாயிலாகப் புலப்படுகிறது.

#### *3.3.1.1 வேழஞ் சுற்றும் ஊரன்:*

***"கொடியோர் கொடுமை கடுமென ஓடியாது***
***நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்***
***பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்"......*** *(தொல்.பொருள்:145:25-27)*

என்னும் தொல்காப்பிய அடிகளுக்கேற்பப் பரத்தையொழுக்கம் மேற்கொண்டொழுகிய கொடியவன் தலைவன். தலைவியிடம் வாயில் வேண்டி நிற்கும் பாணனுக்கும் ஏனையோர்க்கும் தலைவனின் பிரிவால் உண்டான வருத்தத்தையும் துயரையும் எடுத்துரைக்கின்றாள் தலைவி. அவ்வருத்தத்தினைக் ***‘கொடுமை’*** என்றே கூறுவதனைப் பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடல்கள்வழி காண முடிகின்றது. தலைவனின் புறவொழுக்கத்தைக் கூறும் தலைவி,

***“மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்***
***துறைகே ழூரன் கொடுமை நாணி”*** ***(ஐங்.11:1-2)***

என்று கூறுகிறாள். ***‘மனைக்கண் வயலைப் புறத்து வேழம் சுற்றும் ஊரன்’*** என்ற பழைய உரை வாயிலாக ***‘மனைநடு வயலை’*** என்ற அடியில் உள்ளுறை கூறப்பட்டுள்ளது.

***“மனைக்கண் நட்ட வயலைப்புறத்தே நிற்கின்ற வேழத்தைச் சுற்றும் ஊரன் என்றதனால், தலைமகன் மணமனை வைகிய ஞான்றும் பரத்தையர்திறமே சூழ்வான் என உள்ளுறுத்து உரைத்தமையின், கொடுமைத் திறத்தை வெளிப்படக் கூறாது கொடுமைநாணி என வேறு வாய்பாட்டாற் கூறினாள்”*** [8] என்கிறார் ஔவை. சு.துரைச்சாமி.

**“வீட்டில் நட்ட வயலைக் கொடி வெளியே நிற்கும் வேழத்தைச் சுற்றும் என்றதனால், தலைவன் தன் வீட்டிலேயே தங்கினாலும், பரத்தையருக்கு வேண்டிய நன்மைகளையே நாடுவான்”** [9] என்பது உட்குறிப்புச் செய்தியென அர.சிங்காரவடிவேலன் எடுத்துரைக்கிறார்.

***“மனையின் கண் நட்ட வயலைப் புறத்தே நிற்கின்ற வேழத்தைச் சுற்றும் ஊரன் என்றதனால், தலைவன் மணமனையில் உள்ள போதும் பரத்தையர் இயல்பையே எண்ணுபவன் என்பது புலப்படுகிறது”*** [10] என்று அ.மாணிக்கம் உள்ளுறை உவமத்தை விளக்குகிறார். இவ்உள்ளுறை வாயிலாக ஓரம்போகியார் **‘*வேழம்*’** என்னும் சொல்லால் பரத்தையையும், ‘***வயலை***’ என்னும் சொல்லால் தலைவனையும் குறிக்கிறார்.

***'இவ்வளவு கொடுமை கூடாது'*** என்று கழறிய பாங்கிக்குத் தலைவி நாணித் தலைவனை நல்லன் என்று கூறினாலும் அவள் தோள் தலைவனின் பரத்தையால் உண்டான வருத்தத்தைக் வெளிக்காட்டியது. இதனின், தலைவன் தலைவியுடன் தன் இல்லத்திலே இருந்தும் பரத்தையின் நினைவுடனே திரிகின்றான். தலைவியுடன் இன்பம் நுகர்ந்து பின் பரத்தையிடமும் தனது காம இச்சையைத் தீர்த்துக் கொள்பவனாகவும் (தலைவன்) காணப்படுதலை இப்பாடலால் உணர முடிகிறது.

***3.3.1.2 வேழம் கரும்பிற் பூக்கும் ஊரன்:***

ஊரன் கொடுமையைக் கூறும் தலைவி மற்றோர் இடத்தில், ***'தலைவன் குலமகளான தன்னைப் போன்றே பொதுமகளான பரத்தைக்கும் சிறப்புச் செய்கிறான்'*** என்பதனைக்,

***"கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்***
***துறைகே ழூரன் கொடுமை நன்றும்"*** *(ஐங்.12:1-2)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளுக்குக் ***"கரைமருங்கு நிற்கும் வேழம், வயலகத்து விளையும் தீங்கரும்பு போலப் பொலியும் ஊரன் என்றது, பொது மகளிர்க்குக் குலமகளிரைப் போலச் சிறப்புச் செய்கிற்பான்"*** [11] என்கிறது பழையஉரை.

***"பேராசிரியர் பயவுவமப் போலிக்கு இதனை உதாரணமாகக் காட்டி, 'இதனுள் தலைமகன் கொடுமை கூறியதல்லது அக்கொடுமைக்கு ஏதுவாகியது ஒன்று விளங்கக் கூறியதிலளாயினும், இழிந்த வேழம் உயர்ந்த கரும்பு போலப் பூக்கும். எனவே, அவற்றிற்கும் இழிபு உயர்வு என்பதொன்றில்லை எல்லாரும் இன்பம் கோடற்குரியர் தலைமகற்கு என்றமையின், யாமும் பரத்தையரும் அவற்கு ஒத்தனம் என்றமையின் அவை கூறினாள் என்பது"*** [12] என்பர்.

இக்கூற்றுகளின் வழியாக வேழம் பரத்தைக்கும் கரும்பு தலைவிக்கும் ஒப்பிட்டுக் கூறியமை அறிய முடிகின்றது. தலைவனின் பரத்தமையொழுக்கம் தலைவியால் ஆற்றிக்கொள்ள இயலாததைத் தலைவியின் தோள் பொலிவிழந்ததைக் கொண்டு உணர முடிகின்றது மேலும், தலைவன் தலைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தும் பரத்தைக்கும்

செய்கின்றான். இதிலிருந்து ***'மனைவி, பரத்தை'*** என இருவரையும் உயர்வு தாழ்வு கருதாது ஒப்ப நினைக்கும் தலைவனது போக்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

சங்ககாலப் பரத்தை தலைவனின் காம உணர்ச்சி அறிந்து, அதற்கேற்ப அன்பைத் (இன்பத்தை) தருகின்றாள். தலைவிக்கு நிகராகவும் தலைவனிடம் உரிமை கொண்டு ஒழுகுகின்றாள். ஆதலால் தலைவிக்கு நிகராகப் பரத்தைக்கும் தலைவன் சிறப்புச் செய்கின்றான் என்பது இப்பாடலின் உள்ளுறை உவமையால் அறிய முடிகின்றது.

### *3.3.1.3 வேழம் வெண்பூப் பகரும் ஊரன்:*

தன் தலைவனின் பரத்தை மற்றும் ஊரார் என அனைவரும் கண்துயிலும் யாமத்தில் தான் மட்டும் உறங்காமல் துயர்கொண்டுள்ளதாகத் தலைவி கூறுகிறாள். இதனைப்,

***"பரியுடை நன்மான் பொங்குளை யன்ன***
***அடைகரை வேழம் வெண்பூப் பகருந்***
***தண்டுறை யூரன் பெண்டிர்***
***துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே"*** *(ஐங்.13)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலில் ***'பரியுடை நன்மான்'*** என்பது தலைவிக்கும், அடைகரை வேழம் என்பது பரத்தைக்கும் உவமையாகின்றது. ***"பரியுடை நன்மானின் உளைபோல அடைகரையில் நின்ற வேழம் மலரும் என்றதனால், கற்புச் சிறப்புடைய குலமகளிரைப் போலப், பரத்தையரும் தாம் நலம் சிறந்தார் போலக் காட்டி நயப்பித்து, நயந்தார்க்கு அதனை நல்குவர் என்றாளாம். வேழ வெண்பூவிற்கு உளை நிறத்தாலும் வடிவாலும் உவமையாயிற்று"*** [13] *என்பர்.* இவ்உள்ளுறை உவமத்தை

***"வினையிலும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்***
***பிறப்பினும் வருஉம்"*** என்னும் நூற்பாவைக் கொண்டு விளக்குகிறார் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை.

தலைவனுக்கு வாயில் மறுக்கும் இப்பாடலுக்குப் ***"பரியுடை நன் மான் தலைக்கணி வெண்கவரி போல வேழம் வெண்பூவைக் கொள்வாரைக் குறித்துக் கொடுக்கும் ஊரன் என்றது, நன்றுபோலக் காட்டித் தம் நலத்தினை விற்பார் வாழும் ஊரன்"*** [14] எனப் பழைய உரை எடுத்துரைக்கிறது.

***"குதிரையின் தலையில் அணியும் சாமரை போலப் பார்வைக்குத் தோன்றும் வெள்ளைப் பூக்களை வேழம் சொரியும் என்பதால் கற்புச் சிறப்பினையுடைய குலமகளிரைப் போலப் பரத்தையரும் நலமுடையவர் போலக் காட்டி ஆடவரைக் கவர்ந்து அவருக்குத் தம் கற்பையளிப்பர்"*** [15] என்பதைக் குறிப்புச் செய்தியாக விளக்குகிறார் அர.சிங்காரவடிவேலன்.

***"வேழம் வெண்பூப் பகரும் என்றது உள்ளுறை. சிறப்பில்லாத வேழ வெண்பூ, சிறப்புடைய குதிரையின் உளைப்போல் மலரும் என்னும் ஏனை உவமம் உள்ளுறைக்குச் சிறப்புத் தந்தது. வேழம் வெண்பூப்பகரும் ஊரன் என்றது, பரத்தையரின் பொய்ம்மையை மெய்யான அன்பு எனக் கருதியும், அவர்தம் செயற்கையழகை இயற்கையழகு எனக் கருதியும் அவர்பால் விடுதலறியா விருப்பினன் ஆயினன் என்று உள்ளுறுத்துக் கூறினாள் என்க"*** [16] என்று உள்ளுறை உவமத்தை விளக்குகிறார் அ.தட்சிணாமூர்த்தி.

தலைவன் தலைவியை விடுத்துப் பரத்தையிடம் செல்கின்றான். பரத்தையின் அன்பு பொய் என அறியாத தலைவன் அப்பரத்தையிடத்தே தங்கியும் விடுகின்றான். அதனால் துன்பம் அடைந்த தலைவி தான் மட்டும் உறக்கமின்றித் தவிக்கத் தலைவனின் பரத்தை மற்றும் ஊரார் என அனைவரும் உறங்குகின்றனர் எனப் புலம்பித் தவிக்கின்றாள் தலைவி. இதன் வழியாகப் பரத்தையுடன் தலைவன் கூடியமையால் பரத்தை மகிழ்வுடன் உறங்கினாள் என்பதையும், ஆனால் தலைவிக்கு அவ்வின்பம் கிடைக்காததால் உறக்கமின்றி அவள் தவித்தாள் என்பதையும் இப்பாடல் புலப்படுத்துகின்றது.

***3.3.1.4 புலனாடும் மகளிரும் ஊரனும்:***

தலைவன், பெருகிவரும் வெள்ளத்தில் தழையாடை உடுத்திப் புனலாடும் மகளிர்க்கு விரும்பியவனாக நடந்து கொள்வதனைக் கண்ட தலைவியின் வருத்தத்தை

***"மணலாடு மலிர்நிறை விரும்பிய வொண்டழைப்***
***புனலாடு மகளிர்க்குப் புணர் துணையுதவும்***
***வேழ மூதூ ரூரன்***
***ஊர னாயினு மூரனல் லன்னே*** *(ஐங்.15)*

என்ற பாடலால் அறிய முடிகின்றது. இப்பாடலில்,

***"புனலாடும் மகளிர்க்குப் புணர்ந்த துணையை உதவுகின்ற வேழத்தையுடைய ஊரனாதலால், புனலாடும் பரத்தையர்க்கு வேழம் செய்வனவெல்லாம் செய்வான்"*** [17] என்று தலைவி எண்ணுவதைப் பழைய உரையைக் கொண்டு அறியமுடிகிறது.

***"நீண்ட பூக்களை உடைய வேழம் புனலாடும் பெண்களுக்கு உதவுவது போலத் தலைவன் பரத்தையருக்கு வேண்டுவன செய்து ஒழுகுகிறான் என்பது உள்ளுறை"*** [18] எனக் கூறுவர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***"புனலாடும் மகளிர்க்கு வேழம் புணர்துணை யுதவும் ஊரன் என்றது உள்ளுறை. இதன் கருத்து, அவனும் அந்த வேழம் போன்று காமக்களியாட்டம் ஆடுகின்ற பரத்தையர்க்குப் புணர்துணையாகின்றான்"*** [19] என்பர் பொ.வே.சோமசுந்தரம்.

வேழக்கோலால் தெப்பம் அமைத்துக்கொண்டு நீர்விளையாடும் வழக்கம் உண்மையைக்

***"கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்***
***குழைமாண் ஒள்ளிழை நீவெய் யோளொடு***
***வேழ வெண்புணை தழீஇ.....***
***நெருநல் ஆடினை புனலே"*** *(அகம்.6:6-11)*

எனவும்

***"கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்***
***புனலாடு கேண்மை அனைத்தே"*** *(அகம்.186:8-9)*

என்னும் வரிகளால் உணரமுடிகிறது.

புதுப்புனலாடும்போது பரத்தையர் தழையாடை உடுத்துவது வழக்கமாகும். அவ்வாறு தழையாடை உடுத்திப் புனலாடும் பரத்தைக்கே தலைவன் உதவுகின்றான் எனத் தலைவி வருந்திப் புலம்புவதைக் காண முடிகின்றது.

### *3.3.1.5 நாள்தோறும் புதுப்பரத்தையரை நாடும் ஊரன்:*

நாளொரு வண்ணம் புதுப்பரத்தையரைத் தேடிச் செல்லும் தலைவனின் புறத்தொழுக்கத்தைக் கண்டு வருந்திப் புலம்புகிறாள் தலைவி. அத்தலைவியின் வருத்தத்தைப்

***"புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ***
***விசும்பாடு குருகிற் றோன்று மூரன்"*** *(ஐங்.17:1-2)*

என்ற அடிகளால் அறிய முடிகின்றது.

***"புதன்மிசை நுடங்கும் வேழத்தின் வெண்பூ விசும்பின்கட் பறக்கும் குருகு போலத் தோன்றும் என்றது, சிறப்பில்லாப் பரத்தையராயினும் புதுமை நலத்தால் உயர்ந்த குலமகளிர் போலத் தோன்றுவர் என்றவாறு வேழத்தின் வெண்பூ புதன்மிசை நுடங்கினும், விசும்பாடு குருகு போலத் தோன்றும் என்று கொண்டு நனவின்கண் நம்பால் அன்பின்றிப் புறத்தொழுகுவனாயினும் கனவின்கண் அன்புடையனாய்த் தோன்றுகின்றான்"*** [20] என்று உள்ளுறை காண்பர் பழைய உரைகாரர்.

***"புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ விசும்பாடு குருகிற்றோன்று மூரன் என்றது உள்ளுறையாம். இதன் கருத்து, முட்புதரிலே நின்று அதன்மேலே அசையும் மணமற்ற இழிந்த வேழ வெண்பூ தூயதான வானத்திலே பறக்கும் சிறந்த அன்னம்போலக் காணப்படுதல் போன்று இவனுக்கும் இழிகுலத்திற்றோன்றி நடிக்கும் பரத்தையர் தூயவரும் சிறந்தவருமாகிய குலமகளிர் போலக் காணப்படுகின்றனர் என்பதாம். தன்னெஞ்சு தனக்குத் துணையாதலன்றி அவனையே நினைந்து சுருங்குதலின் மடங்கெழு நெஞ்சு என்றாள்"*** [21] என்று விளக்குகிறார் பொ.வே.சோமசுந்தரம்.

***“புதர் வானமாகவும் வேழப்பூ குருகாகவும் பொய்த்தோற்றம் தருவதுபோல், புதுப்புதுப் பெண்களின்மேல் மோகம் கொள்கிற தலைவனுக்கு அவர்கள் தரும் இன்பம் புதுமையாகவும் உயர்ந்ததாகவும் தோன்றுகின்றது”*** [22] என்று குறிப்புச் செய்தியாகத் தருகிறார் அர.சிங்காரவடிவேலன்.

இப்பாடலில் வேழவெண்பூ பரத்தைக்கும் வெண்குருகு தலைவிக்கும் உள்ளுறையாக அமைந்துள்ளன. தலைவன் நாள்தோறும் புதுப்பரத்தையரை நாடும் இயல்பினன் ஆதலால் தலைவி வருந்தினாள். தலைவன் இனித் திருந்த மாட்டான் என்று அறிந்து தன்னம்பிக்கையை இழந்தாள். தலைவனின் அன்பிற்கு ஏங்கிய தலைவி, தலைவனைக் கொடியவன் என்று கூறுவதை இப்பாடல் காட்டுகின்றது.

### *3.3.1.6 பொதுமகளிரோடு தருக்கித் திரியும் ஊரன்:*

தலைவியைவிட்டுப் பிரிய மாட்டேன் என வாக்குறுதி அளித்த தலைவன் பிரிந்ததால் தலைவி அழுதாள். குலமகளிரைப் போல் பொதுமகளிர் தருக்கித் திரிந்ததை அறிந்து தலைவி மேலும் அழுதாள். இக்காரணத்தால் தலைவனுக்கு வாயில் மறுத்ததை

***“இருஞ்சா யன்ன செருந்தியோடு வேழங்***
***கரும்பி னலமருங் கழனி யூரன்”*** *(ஐங்.18:1-2)*

என்ற அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

**“செருந்திப்பூவோடு வேழம் கரும்புபோல அலமரும் ஊரன் தன் பாங்கியரோடு பொதுமகளிர் குல மகளிரைப் போலத் தருக்கி ஒழுகும் ஊரன்** என்ற பழைய உரைக்கு உள்ளுறை உவமமாக, ***வேழம் செருந்தியொடு கூடிக் கரும்பு போலக் காற்றினால் அலமரும் என்றதனால், பரத்தையரும் தம் தோழியருடன் கூடித் தமக்குத் தலைமகன் செய்யும் தலையளியால் தருக்கி ஒழுகுகின்றனர்”*** [23] என்று கூறுகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***“வேழமானது தன்னைப் போன்ற பயனற்ற தண்டான்கோரையோடும் நெட்டிக்கோரையோடும் பயனும் இனிமையும் உடைய கரும்புபோலச் சுழன்றாற் போன்று இழிந்த பரத்தையர் தம் தோழியரொடு குலமகளிரைப் போலத் தருக்கித் திரிகின்றமையால் அவர் மயக்கிற்பட்டுத் தன்***

***உறுதிமொழியையும் தப்பி ஒழுகாநின்றான்”*** [24] என உள்ளுறை கூறுகிறார் பொ.வே.சோமசுந்தரம்.

இவ்உள்ளுறை உவமையால் செருந்திப்பூ பரத்தையின் தோழியருக்கும் வேழம் பரத்தையருக்கும் கரும்பு தலைவிக்கும் உவமையாக்கிப் பாடியமை அறிய முடிகிறது.

***“பரத்தை சுதந்திரமாகச் செயலூக்கத்துடன் செயல்படுகிறாள். தலைவி தன்னுடைய காதலை, விருப்பத்தைச் சுதந்திரமாக வெளிப்படுத்த இயலாதவாறு ஆணாதிக்க விழுமியங்களால் தடை செய்யப்பட்டவளாய் உள்ளாள். தொல்காப்பியம்,***

***“தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்***
***எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை”*** *(தொல்.பொருள்.116)*

***என்று தலைவியின் காதல் வேட்கையைத் தடை செய்கிறது. ஆனால் இந்த ஆணாதிக்க விழுமியங்களுக்குப் பணிந்து நடப்பவளாக இல்லை. அதனை எதிர்த்துத் தனது விருப்பத்தை, வேட்கையை எழுச்சியுடன் வெளியிடுகிறாள் பரத்தை.”*** [25] என்கிறார் அ.கா.அழகர்சாமி.

தலைவன் கற்புக் காலத்தில் தலைவியை விட்டுப் பிரியமாட்டேன் என உறுதியளித்திருந்தான். அவ்உறுதி பொய்யாகும்படி தலைவன் பரத்தையை நாடிச் சென்றான். பின்பு பரத்தையிடம் இருந்து மீண்டு வந்த தலைவன் தலைவியுடன் கூட எண்ணி, நயப்புரைகளைப் பேசினான். அதனால் மனம் இரங்கிய தலைவி தன் ஊடல் தணிந்தாள். தலைவன் தலைவியுடன் இருக்கும் போதே அவளை விடுத்து மீண்டும் பரத்தையிடம் சென்றான். இதனால் பரத்தை தன் தோழியுடன் தலைவியைப் போல் தருக்கிக் கொண்டு உலா வந்தாள். இதனின் சங்க சமூகத்தில் பரத்தமை ஒழுக்கத்திற்குத் தலைவனுக்கு உரிமை இருந்தமையும் அதனாலே தலைவன், தலைவி மற்றும் பரத்தையிடம் மாறி மாறி இன்பம் துய்த்தமையும் அறிய முடிகின்றது. இதனை அக்காலச் சமூகம் ஒரு குறையாகக் கருதவில்லை என்பது புலனாகிறது.

### *3.3.1.7 அலருக்கு அஞ்சாத தலைவன்:*

தலைவன் தலைவியிடம், களவுக் காலத்தில் இன்சொல்லும், கற்புக் காலத்தில் **'பிரியேன்'** என்ற நன்சொல்லும் கூறினான். ஆனால் தற்போது ஊராரின் அலருக்கும் அஞ்சாது தன்னைவிட்டுப் பரத்தையை நாடிச் செல்கிறான் எனத் தலைவி புலம்பினாள். தலைவியின் ஆற்றாமையை

***"அள்ள லாடிய புள்ளிக் கள்வன்***
***முள்ளி வேரளைச் செல்லு மூரன்"....*** *(ஐங்.22:1-2)*

என்ற அடிகளில் காணமுடிகிறது.

***"சேறாடிய கள்வன் முள்ளி வேரளைச் செல்லும் என்றது, பிறர் கூறும் அலரஞ்சாது பரத்தையர் மனைக்கட் செல்வான் என்பதாம்"*** [26] எனப் பழைய உரை எடுத்துரைக்கிறது. இவற்றில் சேறாடிய கள்வன் என்பது பரத்தமை யொழுக்கம் மேற்கொண்ட தலைவனைக் குறிப்பதாகும்

"***தன் உடல் முழுவதும் சேற்றைப் பூசிக் கொண்ட நண்டு, அதனைச் சிறிதும் கருதாது, அச் சேற்றுடனேயே தன் வளையினகண் சென்று உறையும் ஊரன் என்றது, தகுதிப்பாடு மிகுதியும்*** **கொண்ட தலைவன், தன் தீயொழுக்கம் பற்றி ஊரவர் சொல்லும் பழிச்சொல் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாது, பரத்தையர் மனைக்குச் செல்கிறான்"** [27] என்ற கருத்து உள்ளடக்கியமையால் இ.·.து உள்ளுறையாகிறது. இவ் உள்ளுறையால் சேறு எனப் பரத்தமையும், நண்டு எனத் தலைவனையும் கூறியமை புலனாகின்றது. தலைவன் பிரியேன் என உறுதி கூறும் செய்தியைச்

***"சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய,***
***கற்போல் பிரியலம்"*** *(அகம்:1:5-6)*

என்ற அகநானூற்று பாடல் வழியும் அறிய முடிகிறது.

தலைவன் களவுக் காலத்தில் தலைவியைப் பிரியேன் என்று கூறிப் புணர்ந்து பின் தலைவியைத் திருமணம் செய்து கொண்டான். மணம் முடித்த பின்னும் தலைவியிடம், தான் பிரியமாட்டேன் என்று வாக்களித்தான். ஆனால் அவ்வாக்குப் பொய்யாகும்படி தலைவன் பரத்தையை நாடிச் சென்றான். மேலும் இச்செயலை ஊரார் அறியும்படியே நடந்து கொண்டான்.

இதனால் தலைவி மிகவும் வருந்துகின்றாள். இவ்வருத்தமே அவளுக்கு நோயாக மாறுகின்றது. தலைவனோ ஊராருக்கும் அஞ்சவில்லை, தலைவியை எண்ணிக் கவலையும் கொள்ளவில்லை என்பது வெளிப்படையாகிறது. தலைவிக்குத் தான் அளித்த வாக்குறுதியைவிடப் பரத்தமை ஒழுக்கமே முதன்மையாகக் கொண்டவனாகத் தலைவன் உள்ளான் என்பது இப்பாடல் வழியாக உணர முடிகின்றது.

### *3.3.1.8 தலைவிக்குத் துன்பம் தரும் ஊரன்:*

தலைவி, தன்னை வருத்திப் புறத்துப் போய் இன்பம் நுகரும் தலைவனின் செயலைக் கூறிப் புலம்புகிறாள். இவ்வாறு புலம்பும் தலைவி,

***"முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்***
***பூக்குற் றெய்திய புனலணி யூரன்"*** *(ஐங்.23:1-2)*

என்ற அடிகளால் தலைவனின் புறத்தொழுக்கத்தைக் கூறுகிறாள். **"மகளிர் அளைவாழ் அலவனை அலைத்துப் பூக்குற்று விளையாட்டெய்தும் ஊர் என்றதனால், தலைமகன் மனையின்கண் வாழும் தன்னை வருத்திப் பரத்தையர் மனைக்கண் இன்பம் நுகருகின்றான்"** [28] என உள்ளுறையை விளக்குகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

**"முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப் பூக்குற் றெய்திய புனலணியூரன்** என்ற உள்ளுறையை, **மகளிர் தன் வளையகத்தே வாழும் நண்டினை அலைத்துப் பின்னும் பல்வேறு மலர்களையும் பறித்து வருமாறுபோல இவனும் இல்லின்கண் வதியும் என்னையும் வருத்திப் பல்வேறு பரத்தையரையும் நுகர்ந்து வருகின்றான்"**[29] என விளக்குகிறார் பொ.வே.சோமசுந்தரம்.

இவ்வாறு தலைவியின் துன்பத்தைத் ***'தாக்கணங்கு ஆவது எவன் கொல்'*** என்ற அடியால் ஓரம்போகியார் உணர்த்துகிறார். தீண்டலும் தீண்டப்பட்டோர் நெஞ்சைக் கவர்ந்து துன்புறுத்தலும் தாக்கணங்கின் செயலாகும் எனப் பொருள்படுகிறது. இதனைத் தொல்காப்பியரின்

**"கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலின்**
**அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்"** (தொல்.பொருள்:145:5-6)

என்ற சூத்திரத்தால் அறிய முடிகிறது.

தலைவன் இப்பாடலிலும் தலைவிக்குத் தந்த வாக்குறுதியை பொய்யாக்கும்படி பரத்தமை மேற்கொண்டான். மிகுந்த துன்பம் அடைந்த தலைவியைவிடவும் தனது காம உணர்வுக்கே முக்கியத்துவம் தந்தவனாகத் தலைவன் திகழ்கின்றான் என்பதும் இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

### *3.3.1.9 அன்பில் முதலை வாழும் ஊரன்:*

வாயில் வேண்டி நிற்கும் தலைவனையும், பாணனையும் மற்றும் பக்கத்தாரையும் இடித்துரைக்கும் பாடலில், தான் ஈன்றெடுத்த பார்ப்புகளைத் தானே உண்ணும் இயல்புடைய முதலையைப் போல் புறத்தொழுக்கம் மேற்கொண்டு, தலைவியின் நலத்தைத் தலைவனே அழிக்கிறான். இதனால் தலைவிக்குப் பசலை நோய் ஏற்படுகிறது என உணர்த்துகின்றன கீழ்வரும் பாடல் வரிகள்:

> ***"தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு***
> ***வெண்பூம் பொய்கைத்தவ லூரரென்ப."*** *(ஐங்.41:1-2)*

இவ்வடிகளில் "**அன்பில் முதலை** ***என்றது தலைவனை நோக்கியதெனவும், 'பொய்கையில் வெண்பூ' என்றது, புறத்தொழுக்கத்திற்குத் துணையாகிய அறிவிலாதாரை நோக்கிய தெனவும் கொள்க"*** [30] எனப் பழைய உரை எடுத்துரைக்கிறது.

பேராசிரியர், "***தன்பார்ப்புத்தின்னும் அன்பில் முதலை என்பது இன்னும் தலைமகனது கொடுமைக்கு உவமையாயிற்று. 'வெண்பூம் பொய்கைத்து அவனூர் என்பது தலைமகள் பசப்பு நிறம்பற்றி உவமையாயிற்று' என்றும், 'தன்பார்ப்புத் தின்னும்.........ஊர்க் கிழவோன் என்ற வழி இன்ன திறத்தன என்றதனாலே இத்தன்மைத்தாகிய ஊர் அனையான் எனச் சொல்லுதலும்' என்றும், 'வெண்பூம் பொய்கைத்து அவனூர் எனத் தலைவன் ஊரின்கண் உள்ளது என்றதனால் தலைவிக்கு உவமையைப் பிறப்பித்தவாறாயிற்று' என்றும், 'தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலை' என்பது தோழிகூற்று என்னை, அவற்றின் செய்கையெல்லாம் அறியாளன்றே தலைமகள் பெரும் பேதையாகலின் என்பது"*** [31] என்றும் கூறுவர்.

நச்சினார்க்கினியரும், ***"தன் பார்ப்புத் தின்னும் அன்பில் முதலையொடு வெண்பூம் பொய்கைத்து அவனூர் என்ப, என்றாற்போலத் தலைவன் கொடுமையும் தலைவி பேதைமையும் உடனுவமம் கொள்ள நிற்கும்"*** [32] என்பர்

தான் ஈன்ற முட்டைகளிலிருந்து வரும் முதலைக் குட்டிகளில் நோயுற்றனவற்றையும், இரைத்தேடி வாழ வலுவில்லாதவற்றையும், ஊறுபட்டனவற்றையும் தானே உண்ணும் இயல்புடையதாதலால் ஓரம்போகியார் ***'தன் பார்ப்புத் தின்னும் அன்பில் முதலை'*** என்றார் போலும் என ஔவை சு.துரைசாமியின் உரை வாயிலாக அறிய முடிகிறது.

பொ.வே.சோமசுந்தரம், ***"வெண்பூ என்றது, அவன் சொல்லை மெய்யென்று நம்புமியல்புடைய வெள்ளைமனமுடைய தன்னை நோக்கியது என்று கோடலே சிறப்பு"*** [33] என்கிறார்.

***"முதலை தன் பார்ப்பைத்தின்பது தலைவனின் அன்பில்லாமையையும் வெண்மையான ஆம்பல் பூக்களைப் பொய்கை பெற்றிருப்பது தலைவியின் உடம்பு பெற்ற பசலையின் நிறத்தையும் குறிப்பால் உணர்த்தும்"*** [34] எனத் தலைவியின் வெள்ளை மனதிற்குப் பசலையின் நிறம் என்று சிறப்பு விளக்கம் தருகிறார் அர.சிங்காரவடிவேலன். ***"தன் பார்ப்புத் தின்னும் முதலை என்பது அன்பில்லாத தலைவனின் கொடுமைக்கு உவமை"*** [35] என்று கூறுவர் அ.மாணிக்கம்.

வெள்ளைக் குணம் படைத்த தலைவியை விடுத்துத் தலைவன் பரத்தையர் இல்லத்திற்குச் சென்று தங்கினான். இரவு முழுவதும் தலைவன் தன்னைவிட்டுப் பிரியாதவாறு செய்த பரத்தை விடியலிலும் அத்தலைவனை அவன் இல்லத்திற்குச் செல்லவிடவில்லை. இதனால் தலைவி துன்பம் அடைந்தாள். தலைவனின் இப்பரத்தமை ஒழுக்கமே தலைவிக்கு அவன் செய்யும் கொடுமையாகும்.

### ***3.3.1.10 ஆமையின்மீது பார்ப்பு ஏறித் துஞ்சும் ஊரன்:***

தலைவனுக்கு வாயில் மறுக்கும் தலைவியைப் பாணன் பலவும் கூறித் தெளிவித்தான். அதற்குத் தலைவி, தலைவனின் பொய்மொழியையும், பாணனின் பொய்மொழியையும் ஏற்காதவளாய், ***'மரக்காலைப் போன்று***

***திகழும் ஆமையின் முதுகில் சிவந்த நிறமுள்ள குட்டிகள் தூங்கும் சிறப்புடைய தலைவன் மேற்கொள்ளும் பரத்தமை யொழுக்கம் தகாது'*** எனக் கூறுகிறாள். இதனை,

> ***"அம்பணத் தன்ன யாமை யேற்றிச்***
> ***செம்பி னன்ன பார்ப்புப்பல துஞ்சும்***
> ***யாண ரூர நின்னினும்***
> ***பாணன் பொய்யன் பவகூ ளினனே"*** *(ஐங்.43)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இப்பாடலுக்கு, ***"யாமைப் புறத்து ஏறிப் பார்ப்புப்பல துஞ்சும் ஊர என்றது, மார்பில் துயில்கின்ற புதல்வரையுடையாய் என்றவாறு மகட்பெற்று வாழ்வார்க்குப் பொய்கூறல் ஆகாது"*** [36] – எனப் பழைய உரை எடுத்துரைக்கிறது. இ.்.தே உள்ளுறையாகும் என அ.தட்சணாமூர்த்தி எடுத்துரைக்கிறார்.

***"யாமையின்மீது அதன் பார்ப்பு ஏறித் துஞ்சும் என்றதனால், தலைமகன் மார்பின்மீது அவன் புதல்வன் அமர்ந்து துயில்கின்றமை பெற்றாம் பெறவே மகப்பயந்து வாழ்வார்க்கு அம்மக்கள் தனது மார்பின்மீது ஏறி விளையாட்டயர்தலும், அமர்ந்து கிடந்து துயிறலுமாகிய இச்செயல்களால் பிறர்க்கும் இன்பத்திலும் இம்மைக்கண் சீரியது பிறிதின்மையின் அதனைச் சுட்டி உள்ளுறுத்துரைத்த வாறாயிற்று "மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்" எனத் திருவள்ளுவனாரும், 'இன்னகை மனையோள் துணைவியாகப் புதல்வன் மார்பின் ஊரும் மகிழ்நகையின்பம்' எனப் பேயனாரும் கூறுதல்காண்க"*** [37] என ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

***"ஆமை மல்லாந்து படுத்திருக்கும் காட்சி, மரக்கால் போல் இருக்குமென்றும், ஆமையின் மேல் ஏறித்தூங்கும், அதன் பார்ப்புகள், உருக்கி வார்த்த செம்புக் குழம்பு கட்டி கட்டியாக இறுகிப் படிந்திருப்பது போல் தோன்றுமென்றும், கூறிய உவமை, புலவர் ஓரம்போகியாரின் நுண்மாண் நுழை புலத்தையும், எதனையும் ஊன்றி நோக்கும் கவிதை மனத்தையும் புலப்படுத்தும். ஆமையையோ, அளவு கருவியாகிய மரக்காலையோ, பார்த்து அறியாத இக்கால மக்களுக்கு உவமையின் நுட்பம் புரிவது கடினமே"*** [38] என அர.சிங்காரவடிவேலன் சிறப்பித்துக் கூறுகிறார்

உயர்ந்த ஒழுக்கம் ஒழுக வேண்டிய தலைவன் தலைவியைக் காப்பதை விட்டுவிட்டுப் பரத்தமை மேற்கொண்டமையால் தலைவி துன்பத்திற்கு ஆளாகின்றாள். தனது அன்பை எதிர்கொண்டு நிற்கும் தலைவியையும் தன் குழந்தையையும் தாயாக இருந்து அன்பு காட்ட வேண்டியவன் தலைவன். அவன்தன் மார்பில் புதல்வன் ஏறி விளையாடி மகிழவேண்டியவன். ஆனால் அத்தலைவனின் மார்பைப் பரத்தை உரிமை கொண்டுள்ளாள். இதனால் தலைவி துன்புறுகின்றாள். இதற்குத் தலைவனின் பரத்தமை ஒழுக்கமே காரணம் என அறியமுடிகின்றது.

### *3.3.1.11 மீனுக்குப் பதிலாக வெண்நெல் தரும் ஊரன்:*

வாயில் மறுத்த தலைவியிடம் தனது அன்பைக் கூறப் பாணனைத் தொடர்ந்து தலைவன் உள்ளே புகுந்தான். தலைவன் களவில் காதலைக் கூறியது போல் தற்போதும் காதலைத் தலைவன் கூறிய போது, தலைவி **‘இ∴து பொய்’** எனக் கூறினாள். மேலும், பாண்மகள் தரும் வட்டி நிறைய தரும் கெடிறு (கெளுத்தி) மீனுக்குப் பதிலாக மனையாள் வெண்நெல் இட்டுத் தரும் சிறப்புடைய ஊரன் என்று கூறுகிறாள். இதனை,

***“முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த***
***அகன்பெறு வட்டி நிறைய மனையோள்***
***அரிகாற் பெரும்பயறு நிரைக்கு மூர***
***மாணிழை யாய மறியுநின்.”*** *(ஐங்.47:1-4)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளுக்கு, ***“நீ கூறுங் காதன்மை பொய்யென்பது ஆயமெல்லாம் அறியும்; நான் இதனை மெய்யெனக் கொள்ளினும் அவர் கொள்ளார் என்பதாம். கெடிறு சொரிந்த வட்டி நிறைய மனையோள் பயறு நிறைக்கும் ஊர என்றது, நீ நின் காதல் சொல்லி விடுத்து அவர் சிறந்த காதல் சொல் வரவிடப் பெறுவாய்”*** [39] எனப் பழைய உரை உரைக்கின்றது. ***“குறிப்பாலும் வெளிப்படையாலும் ‘வைஇயமொழி’ கூறல் தலைமகட்கு வழுவாயினும், தன் வயின் உரிமையும், அவன் வயிற் பரத்தமையும் விளங்கக் கூறும் பான்மைக்கண் நிகழ்தலின் அமையும் என்க. ஆசிரியரும் ‘மங்கல மொழியும் வைஇய மொழியும் மாறிலாண்மையிற் சொல்லிய மொழியும், கூறியன் மருங்கிற் கொள்ளு மென்ப’ என்றனர். இது,***

***துனிபோலத் தோன்றினும், உள்ளுறையால் நயப்பாடு காட்டி நிற்றலின், சிறு துனியாய்ப் பின்னர் எய்தும் இன்பத்துக்கு ஆக்கமாம் என அறிக. 'ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி, வாடினும் பாடு பெறும்' என்பதனால் அறிக"*** [40] என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

"***பாண்மகள் கொணர்ந்த இழிந்த மீனுக்குச் சமமாக மனையாட்டி சிறந்த நெல்லைக் கொடுப்பது போன்று நீயும் பரத்தையர் தரும் இழிந்த காம இன்பத்திற்கு ஈடாக உயர்தோரிடத்துச் செய்ய வேண்டிய தலையளியை அவர்பால் செய்யாநின்றனை என்பது உள்ளுறையாம்"*** [41] என்கிறார் பொ.வே.சோமசுந்தரம்.

தலைவன் பரத்தை இல்லத்திலிருந்து தனது இல்லத்திற்குத் திரும்பி வந்தான். வாயில் வேண்டி நின்ற தலைவன் தனக்குப் பரத்தையுடனான தொடர்பு இல்லை எனக் கூறுகின்றான். அதற்குப் பாணனும் உடந்தையாக நின்றான். இருவரும் பொய் கூறியதனை அறிந்த தலைவி பரத்தை தரும் இழிவான சிறுமையான சிற்றின்பத்திற்காகத் தன்னிடம் பொய் கூறுகின்றார் என்று வருந்துகின்றாள். தலைவன் இவ்வாறு பொய் உரைத்தல் அவனுக்கு இழிவான செயலேயாகும். ஆனால் இப்பொய் நிரந்தரமும் அல்ல என உணர்கிறாள். இவ்வாறு தலைவன் தனது காம இச்சைக்காகப் பொய் கூறுவதையும், தனது உயர்ந்த பண்புகளை இழந்ததையும், சங்கப் பாடல் உணர்த்துகின்றது. மேலும் தலைவியின் புலவியை வெளிப்படுத்தும் இப்பாடல் மூலம், கடகப் பெட்டி நிறையக் கெடிற்று மீனைக் கொண்டு வந்து, அதற்கு ஈடாக, வீட்டுப் பெண்களிடமிருந்து பயறு(தானியம்) பெறுவது அக்காலத்தில் பண்டமாற்றுப் பழக்கம் இருந்ததை காட்டுகின்றது. மேலும்

***"வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்***
***வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்***
***யாண்டுகழி வெண்ணெல் நிரைக்கு மூர***
***வேண்டேம் பெருமநின் பரத்தை***
***ஆண்டுச்செய் குறியோ டீண்டுநின் வரவே"*** *(ஐங்.48)*

என்ற பாடலிலும் பாண்மகள் தரும் வராஅல்மீன் நிறைந்த வட்டிக்குச் சமமாக வெண்ணெல் தருதலை அறியமுடிகிறது.

தலைவன் பரத்தமை மேற்கொண்ட சமயத்தில் ஏற்பட்ட குறிகளோடு தன் இல்லம் வந்த போது தலைவி புலந்து கூறியதை, மேற்கூறிய பாடல் புலப்படுத்துகின்றது.

தலைவனின் பரத்தமைக்கு, ***"வாயில்கள் கூறிய காதன்மைக்குத் தலைவி வாயில் நேர்ந்தமை கூறியவாறு என்று உள்ளுறை கூறுவர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. மேலும் 'ஆண்டு, ஈண்டு' என்பன பரத்தை மனையையும், தன் மனையையும் சுட்டி நின்றன"*** [42] என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***"வராஅல் மீன் பொருட்டு வெண்ணெல்லைக் கொடுக்கும் மனையோள் போன்று தலைவன் பரத்தையிடம் துய்க்கும் காம இன்பத்தின் பொருட்டு உயர்ந்த பண்பாட்டினை இழந்தான்"*** [43] எனக் கூறுகிறார் பொ.வே.சோமசுந்தரம்.

**"வராஅல் சொரிந்த வட்டியுள், இல்லக் கிழத்தி பழைய வெண்ணெல்லை நிறைப்பாள் என்பதால் வாயில்கள் கூறிய தலைவனின் காதல் தன்மையைத் தலைவியேற்று, வாயில் நேர்ந்தாள் என்பது குறிப்புச் செய்தி. ஆனால் அவன் பரத்தை செய்த குறிகளோடு வந்திருப்பதால் ஏற்கமாட்டேன் என்று தன் புலவியை வெளிப்படுத்துகிறாள்."** [44]

'காம இன்பத்தின் பொருட்டு உயரிய பண்பாட்டை இழக்கும்' தலைவனின் செயலை,

***"மற்றது அறிவல்யான் நின்சூள் அனைத்தாக நல்லார்***
***செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்***
***கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்***
***தாருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி***
***அரிமத ருண்கண்ணார் ஆராக் கவவின்***
***பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்***
***செருவொழிந்தேன் சென்றீ யினி"*** *(கலித்.91:9-15)*

என்ற அடிகளாலும் அறிய முடிகின்றது.

உயர்குடியைச் சார்ந்த தலைவன், தலைவியை விட்டுவிட்டுப் பரத்தமை ஒழுகினான். பரத்தையைப் புணர்ந்த காலத்தில் ஏற்பட்ட நகக்குறியோடு தனதில்லத்திற்கு வந்து அத்தலைவன் வாயில் வேண்டினான். தலைவனின் இவ்விழிவானச் செயலைக் கூறி வாயில் மறுத்தாள் தலைவி. தலைவன் தனது காம நுகர்ச்சிக்காக உயர்ந்த பண்பாட்டினையும் இழந்து தாழ்ந்த குலப் பரத்தையோடு உறவு கொள்கின்றான். மேலும் தலைவன் தலைவியுடனான இன்பத்தைவிடப் பரத்தையுடனான இன்ப நுகர்வையே விரும்புகின்றான் என்பது அறியமுடிகின்றது.

அடுத்த பாடலிலும் பாண்மகள் தரும் மீனிற்காக நெல்லை கொடுப்பது குறித்துப் பேசப்படுவது காணமுடிகிறது.

பாணனின் உதவியுடன் பரத்தையோடு கூடினான் தலைவன். இதனை அறிந்தாள் தலைவி. தலைவன் பாணனுடன் வாயில் வேண்டிநின்றபோது தலைவி, தலைவனின் பொய்யை நம்ப மறுத்துக் கூறுவதை:

***"அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்***
***சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்***
***யாண ரூரநின் பாண்மகன்***
***யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே"*** *(ஐங்.49)*

என்னும் பாடல் புலப்படுத்துகின்றது.

இப்பாடலில் பாண்மகள் சிலவாகிய மீனைக்கொடுத்துப் பலவாகிய நெல்லைப் பெறுவாள். அதுபோல் தலைவன் தனது பொய்யால் யார் நலனைக் கெடுக்க உள்ளானோ? மற்றப் பரத்தையரும் தலைவனின் பொய்யையுணர்ந்து கொள்ளவில்லை. தற்போது தன்நலம் கொள்ளாதவனைத் தான் இடம் தரமாட்டேன் என்று தலைவி கூறுகிறாள்.

இதற்கு, ***"சிலவாய பொய் வார்த்தைகளைக் கூறிப் பல இன்பத்தைப் பெறுவான் என உள்ளுறை காண்பார் ஈழத்து உரையாசிரியர். பற்பல மகளிரின் அழகினைச் சிதைப்பான் என்பதற்கு மாறாகப், பல மகளிரை நின்பால் புணர்ப்பான்"*** [45] *என* துரைசாமிப்பிள்ளை விளக்குவதை அ.தட்சிணாமூர்த்தி எடுத்துரைக்கிறார்.

இனிப் பொய் கூறுதலைத் தலைவனுக்கு ஆக்கி, ***“ஒரு சில பொய்களைக் கூறியே பலவேறு மகளிரின் நலத்தையும் நீ நுகர்வை”*** [46] என்று கூறுவார் பொ.வே.சோமசுந்தரம்.

***“பாண்மகள் சிறிதளவு மீன்களைக் கொடுத்து மிகுதியான நெல்லைப் பெறுதல் பாணன் சில பொய்களைத் திறம்படக் கூறி மகளிர் சிலரின் அழகினைச் சிதைப்பான், என்று உள்ளுறைப் பொருள் கொள்ளலாம்”*** [47] என்கிறார் ச.வே.சுப்பிரமணியன். ***“பாண்மகள் சில மீன்களையே தந்து பல்வேறு நெல்வகைகளையும் பெறுவாள் என்றது, நின் பாணன் சில பொய்களையே திறம்படச் சொல்லிப் பற்பல மகளிரின் அழகினைச் சிதைப்பான்”*** [48] என்னும் உள்ளுறைப் பொருள் கொண்டது என்கிறார் அ.தட்சிணாமூர்த்தி. இதற்கு ***“நினக்கு வாயிலாய் வந்த பாணன் நின் காதன்மை உணர்த்தினும் சில சொற்களைக் கூறிப் பல மகளிரைப் புணர்விப்பான்”*** [49] என்று உள்ளுறை காண்கிறார் அ.மாணிக்கம்.

தலைவன் தனது காம நுகர்ச்சிக்காகப் பல பொய்களைக் கூறுகின்றான். தனது உயர்குலப் பண்புகளை ஒழித்துச் சிற்றின்பமாகிய காம நுகர்ச்சிக்காகப் பாணனின் உதவியுடன் பரத்தையை அடைந்தான். பொருளுக்காகவே வாழும் பரத்தையரோ தலைவன் தரும் பொருளின் அளவிற்கே இன்பம் தருபவள். இதனை அறிந்தும் பல பொய்களைக் கூறிப் பல பெண்களையும் நாடி இன்பம் பெறுகின்றான் தலைவன் என இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

ஓரம்போகியாரின் ‘கிழத்திகூற்றுப்பத்தைப்’ புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் தொகுத்துச் சிறப்பித்தமை காண முடிகின்றது. இத்தலைவி கூற்றில் வரும் அனைத்துப் பாடல்களும் தலைவனின் புறத்தொழுக்கத்தினைப் பற்றிக் கூறுவனவாகும்.

### ***3.3.1.12 மீனுக்கு இரையாகும் தீம்பழம் அன்ன ஊரன்:***

தலைவனின் புறத்தொழுக்கம் அறிந்த தலைவி அவனோடு ஊடுவதைப் பின்வரும் பாடல்கள் விளங்குகின்றன. தலைவன் புறத்தொழுகிப் பின் தன் இல்லத்திற்கு வந்தான். அப்போது தலைவி தலைவனிடம், ***‘முதலில் ஒரு***

***பரத்தையை மணந்து பின் மற்றொரு பரத்தையை மணந்ததை மறைப்பது தவறு'*** என ஊடுகிறாள். மேலும் இனி ***'இதுபோல் நடக்காது'*** எனக் கூறும் தலைவனை நம்ப மறுக்கிறாள் தலைவி. தலைவனின் இச்செயலை, ***"நறுவடி விளைந்து முதிர்ந்த தீம்பழம் அதனின் நீங்கி நெடுநீர்க் குட்டத்துத் துடும் என விழும் என்றது. பரத்தையர் சேரிக்கண் நலங்கனிந்து சிறந்த பரத்தையர் தம் தாயார் முதலாயினாரின் நீங்கி நின்னோடு வதுவையிற் கூடி மகிழ்வர்"*** [50] என உள்ளுறையாற் புலப்படுத்துவதை

> ***"நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்***
> ***நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழுஉம்***
> ***கைவன் மத்தி கழாஅ ரன்ன"*** *(ஐங்.61:1-3)*

என்ற வரிகள் உணர்த்துகின்றன. இவ்வடிகளில் ***"மத்தி என்னும் சொல்லானது பரணர் மற்றும் மாமூலனாரால் பாடப்பெற்ற வள்ளலைக் குறிக்கும்"*** [51] அவ்வள்ளலின் வாரிவழங்கும் தன்மையைப் போலத், ***"தம்மை நாடி வந்த பலர்க்கும் தம் பெண்மையைக் கொடுத்து இன்புறும் பரத்தையர்"*** [52] என்று ச.வே.சுப்பிரமணியன் விளக்கம் கூறுகிறார்.

***"நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம் என்றது உரிமையுடையோர்க்குப் பயன்படாமல் பொய்கையில் வீழ்ந்து ஆங்கு வாழும் மீன்கட்கே இரையாதல் போன்று நீயும் இல்லற உரிமையுடைய எனக்குப் பயன்படாமல் பரத்தையர் பலர்க்கும் பயன்படுவாய் ஆயினை"*** [53] என்ற உள்ளுறை கொண்டார் பொ.வே.சோமசுந்தரம்.

பழுத்த மாம்பழம் குட்டத்தில் விழுவதைப் ***"பரத்தையர் சேரியில் நலம் கனிந்து சிறந்த பரத்தையர் தம் தாயார் முதலியவரினின்று நீங்கி நின்னுடன் மணத்திற் கூடி மகிழ்வர் என்பதை உணர்த்தியது. தீம்பழம் தன்னைப் பேணிய மாமரக் கிளை தனிப்ப நீரிலையில் விழுதல் போல், உன்னைக் காதலித்துப் பேணிய யாம் வருந்தப் பரத்தையரைக் கூடுகின்றாய் என்று தலைவி குறித்தாள்"*** [54] என உள்ளுறை உணர்த்துகிறார் அ.மாணிக்கம்.

தலைவி கூற்றாய் அமையும் இப்பாடலில் ***'தலைவனோடு கூடி மகிழ்வர்'*** என்று பரத்தையரைத் தோழி குறை கூறுகிறாள் என்று

அர.சிங்காரவடிவேலன் விளக்கம் தருவது நோக்கத்தக்கதாகும். இவரின் இக்கூற்றால் தலைவி தலைவனுடன் ஊடுவதற்குப் பரத்தையே காரணம் என்பதாலும், தலைவியின்மேல் அன்பு மிகுந்திருந்தமையாலும் தோழி பரத்தையைக் குறைகூறுகிறாள் என்பது அறியமுடிகின்றது.

தலைவன் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்டான். தான் காதலித்துப் பேணிய தலைவனைத் பரத்தை வரைந்துகொண்டாளே எனத் தலைவி துன்பம் அடைந்தாள். மேலும் தலைவன் பரத்தை ஒருத்தியை மணந்து நுகர்ந்தான். பின் அப்பரத்தையை விடுத்து மற்றொரு பரத்தையை மணந்தான். அவளையும் நுகர்ந்தபின் தன் இல்லம் நாடி வந்தான். இவ்வாறு பல பரத்தையருடன் வலம்வந்த தலைவனைக் கண்டு தலைவி வருந்தினாள். காதலால் கனிந்து நின்ற தலைவிக்கு மகிழ்ச்சி தராது பரத்தைக்கே இன்பம் தரும் தலைவனை இச்சங்கப்பாடல்களில் காணமுடிகின்றது.

### *3.3.1.13 இந்திர விழாவும் பரத்தமையும்:*

தலைவன், தனது ஊரில் நடக்கும் இந்திரவிழாவின்போது வெவ்வேறு ஊர்ப் பரத்தையர்களைத் தனது தேரில் அழைத்து வந்தான். விரும்பியவாறு கூடிமகிழ்ந்தான். தலைவனின் இச்செயலையும் அதனால் வருந்திய தலைவியையும்

“ ***இந்திர விழவிற் பூவி னன்ன***
***புன்றலைப் பேடை வரிநிழ லகவும்***
***இவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி***
***எவ்வூர் நின் றன்று மகிழ்நின் றேரே*** *(ஐங்.62)*

என்ற பாடலில் காண முடிகின்றது.

***“தலைமக்கள் விழவுக் காலத்துத் தம் மனத்துக்கினிய மங்கையரோடு கூடி மகிழ்தல் மரபாகலின், இந்திரவிழவு கூறப்பட்டது ‘இந்திரவிழவிற் பூவினன்ன’ என்பதை மங்கையர்க்கு அடையாக்கி, இந்திரவிழவின்கண் வேறுவேறு நிலத்தினின்றும் பூக்கள் பலகொணர்ந்து தொகுத்துப் பயன்கோடல்போல, வேறுவேறு ஊர்களிலிருந்து மகளிரைக் கொணர்ந்து வதுவையின்பம் கொள்கின்றாய்”*** [55] என்று வெவ்வேறு பூக்களுக்கு, வெவ்வேறு ஊர் மங்கையரை உவமமாகக் கூறுகிறார் துரைசாமி பிள்ளை.

இப்பாடலுக்குப் பொ.வே.சோமசுந்தரம், ***"நின் தேர் இப்பொழுது வேறு பரத்தையரை வதுவை அயரச் செல்கின்றது. வழியிலே இவ்வில்லம் இருத்தலின் ஈண்டுச் சிறிது நிற்கின்றது என்பது குறிப்பென்க. எனவே, நின் தொழிலைத் தொடர்ந்து செய்திடுக. ஈண்டு நீ தங்குதல் வேண்டா, நின் வழியே செல்க என்று வெகுண்டு கூறிப் புலந்தாளாயிற்று"*** [56] *என விளக்கம் தருகிறார்.*

***"புன்றலை மயிற்பேடை வரி நிழலில் இருந்து சேவலை அழைத்தது என்பது, நின் பிரிவினாலே மனைக்கண் தனித்திருந்து அழுது வருந்தினேன்"*** [57] என்னும் உட்பொருள் தந்தது என்று உள்ளுறையாகக் கூறுகிறார் அ.தட்சணாமூர்த்தி.

***"குயில் பேடை மரநிழலில் இருந்து அகவும் என்றது தலைவனின் பிரிவாற்றாது தான் வீட்டிலிருந்து வருந்தியதை உணர்த்தியது"*** [58] என உள்ளுறை கூறுகிறார் அ.மாணிக்கம்.

இப்பாடல் வழியாகத் தலைவன் தன் ஊரில் உள்ள மங்கையர் (பரத்தையர்) அனைவரையும்கூடித் துய்த்துவிட்டதால் வெவ்வேறு ஊர்ப் பரத்தையை நாடுகின்றான் எனத் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் கூறப்பட்டுள்ளது. இக்கருத்தால் தலைவன் ***'காம வேட்கை'*** மிக்கவன் என்பதை உணரமுடிகின்றது.

தலைவனின் ஊரில் இந்திர விழா நடைபெற்றது. அவ்விழாவில் தலைவன் தன் விருப்பப்படி பல பரத்தையருடன் கூடி மகிழ்ந்தான். தனது தேரில் தான் விரும்பிய பரத்தையை அழைத்து வந்து இன்பமும் மகிழ்ச்சியும் அடைந்தான். இதனைக் கண்ட தலைவி மனம் வருந்தினாள். இவ்வாறு தலைவன் தலைவியை விழாக் காலங்களிலும் வருத்தமுறச் செய்து பல பரத்தையுடன் கூடி மகிழும் பண்பில்லாதவன் என்பது தெளிவாகின்றது. இதனை அக்காலச் சமூகம் ஏற்றுக் கொண்டமையை இப்பாடல்வழி தெளிவாகிறது.

வாயில் வேண்டி நின்ற தலைவனிடம், ஊடிய தலைவி, பரத்தை தழுவிய தலைவனின் மார்பைத் தான் தழுவ மாட்டேன் என்று கூறுகிறாள். இதனைப்

***“பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்***
***வாளை நாளிரை பெறூஉ மூர***
***எந்நலந் தொலைவ தாயினும்***
***துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த நின்மார்பே”*** *(ஐங்.63)*

என்ற அடிகளால் அறிய முடிகிறது. புலால் நாற்றம் வீசும் நீர்நாய் வாளை மீனை நாள்தோறும் உணவாகக் கொள்ளுதல் போன்று தலைவனும் நாள்தோறும் பரத்தையை நுகருபவர் என உள்ளுறுத்துக் கூறுதலைக் காணமுடிகிறது. நீர்நாயைத் தலைவனாகவும் வாளைமீனைப் பரத்தையராகவும் உவமிக்கிறாள் தலைவி.

ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை இதற்கு, ***“உள்ளுறைக் கண் நீர்நாயைப், ‘புலவுநாறு நீர்நாய்’ எனச் சிறப்பித்ததனால், தலைவன் பரத்தையரைக் கூடிப் புணர்குறியும் மணமும் கமழ வந்தான் என்பது பெறுதும்”*** [59] என்கிறார்.

இனிப், பேராசிரியர் ***“இதனைப்பிறப்பு உவமபோலிக்கு உதாரணமாகக் காட்டி, ‘நல்ல குலத்திற் பிறந்தும் இழிந்தாரைத் தோய்ந்தமையால், அவர் நாற்றமே நாறியது”*** [60] என்றும் கூறுவதனை அறிய முடிகிறது.

இதனை, “***நீர்நாய் பொய்கையை இருப்பிடமாகக் கொண்டிருந்தும் தன்னுடலின் புலால் நாற்றத்தைக் கழுவிக் கொள்ளாமல் மீண்டும் புலால் நாறும் வாளையையே இரையாகக் கொள்ளும் தன்மையொத்து நீயும் நின் குடிக்கேற்ற உயர்நெறி நில்லாதவனாய் இழிந்த காம நுகர்ச்சிக்கெனப் பரத்தையரை நாடி நுகர்கின்றாய்”*** [61] என்று உள்ளுறை அமைக்கிறார் பொ.வே.சோமசுந்தரம்.

ஔவை.துரைசாமிப் பிள்ளை மற்றும் பேராசிரியர் உரையின் வாயிலாகத் தலைவன் பரத்தையைக் கூடியமையால் ஏற்பட்ட நகக் குறியுடனே தனது இல்லத்திற்கு வந்தான் என்பது அறிய முடிகின்றது. தலைவி தலைவனுடனான புணர்ச்சியை மறுத்து புலந்து கூறியதனைப்

***“புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு***
***அகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி***

***இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த் தருக்கி***

***எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்"*** *(தொல்.பொருள்.144:11-14)*

என்ற அடிகளால் அறியமுடிகின்றது.

**3.3.1.14 கரும்புப் பாத்தியின் ஆம்பல் சுரும்பு பசி நீக்கும் ஊரன்**

புதல்வனைப் பெற்ற தலைவி, தன் இல்லம் திரும்பிய தலைவனை இடித்துரைப்பதனைப் பின்வரும் பாடலால் அறிய முடிகிறது. பரத்தையின் இல்லில் தங்கிய தலைவன் தனக்குப் புதல்வன் பிறந்தமையை அறிந்து தனதில்லத்திற்குத் திரும்புகிறான். அச்சமயத்தில் தலைவியின் ஆற்றாமைகண்டு அவளுடன் முயங்க எண்ணினான். ஆயின் ஊடல் கொண்ட தலைவி ***'புதல்வனை ஈன்ற என் மேனியை முயங்குதலை விடுக! என்று தலைவனிடம் கூறினாள். மேலும், 'கரும்புப் பாத்தியிலே ஆம்பல் மலர்தலும், அம்மலரில் உள்ள தேன் வண்டின் பசியைப் போக்குதலும் இயல்பே'*** என்று கூறித் தலைவனின் பரத்தமையொழுக்கத்தைப் புலப்படுத்துவதைக்

***"கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்***

***சுரும்புபசி களையும் பெரும்புன லூர"*** *(ஐங்.65:1-2)*

என்ற அடிகள் விளக்குகின்றது.

ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை இவ்வடிகளுக்கு, ***"தான் இல்லிருந்து தனக்குரிய நல்லறத்தை வழுவாது ஆற்றும் உயர்வு தோன்ற 'எம்மேனி' எனப் பன்மைவாய்பாட்டாற் கூறினாள்"*** என்றும், ***"கரும்பு நடுதற்குச் செய்த பாத்தியின்கண், ஆம்பல் முதலியன தழைத்துச் சுரும்பினத்தின் பசி களையும் என்ற வினையுவமப் போலியால், பரத்தையர்க்காக அமைக்கப்பட்ட இல்லின்கண் யாம் இருந்து விருந்தோம்பல் முதலிய அறங்களைப் புரிந்தொழுகுகின்றோம் என்றாளாம்"*** [62] என உள்ளுறை காண்கிறார்.

***பேராசிரியர், "கரும்புடு பாத்திக் கலித்த தாமரை" என்று கூறுகிறார். இதன் கருத்து காதற்பரத்தையர்க்கும் இற்பரத்தையர்க்கும் என்று அமைக்கப்பட்ட கோயிலுள் யாமும் உளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம். இது சுரும்பு பசி களையும் தொழிலோடு***

***விருந்தோம்புதற்றொழில் உவமம் கொள்ள நின்றமையின் வினையுவமப் போலியாயிற்று"*** [63] என்பர். இளம்பூரணர்,

***"அவனறி வாற்ற அறியும் ஆகலின்"*** *(தொல்.பொருள்.145:1)*

என்ற தொல்காப்பியச் சூத்திரத்து, ''***கயந்தலை தோன்றிய காமர் நெய்யனி, நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ, நளியின் நீக்கிய விளிவரு நிலையும் என்புழி இளிவந்த நிலையாவது, தன்னை அவமதித்தான் என்னும் குறிப்பொன்று கூறி, இதனை அதற்கு மேற்கோளாகக் கொண்டனர். மற்றும் நச்சினார்க்கினியார் இச்சூத்திரத்தே இக் கிளவிக்கண் இதனைக்காட்டி, இது புதல்வர்ப் பயந்த காலத்துப் பிரிவுபற்றிக் கூறியது."*** [64] என்பர் பொ.வே.சோமசுந்தரம். ***"கரும்பு விளைவிக்க அமைத்த பாத்தியில் தாமரை தானே இடைப் புகுந்து பூத்துச் சுரும்பின் பசி களையும் ஊரனே! எனத் தலைவி கடிந்து கூறும் மருதப்பாடல் இது. இதில் முதலிரு அடிகளில் உட்பொருள் உளது. தலைவிக்கு என அமைந்த இல்லத்தில், இற்பரத்தை புகுந்து, தலைவனின் காமப் பசியைத் தீர்க்கின்றதைத் தலைவி இவ்வாறு மறைமுகமாகக் கடிகின்றாள்"*** [65] என்று தமிழண்ணல் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

பிள்ளைப்பேற்றால் இளமை இன்பம் தலைவனுக்குத் தரஇயலாமல் தவிர்க்கும் தலைவியின் நிலையைத்

***"திதலை மென் முலைத் தீம் பால் பிலிற்ற***
***புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே***
***வால் இழை மகளிர் சேரித் தோன்றும்***
***தேரோர்க்கு ஒத்தனெம் அல்லேம்"*** *(நற்:380:3-6)*

***"……………….கேழ்கிளர் அகலம்***
***வீங்க முயங்கல் யாம்வேண் டினமே***
***தீம்பால் படுதல் தாமஞ் சினரே ஆயிடைக்***
***கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுடைச்***
***செவிலி கையென் புதல்வனை நோக்கி***
***நல்லோர்க் கொத்தனிர் நீயிர் இஃதோ***

*செல்வற்கு ஒத்தனம் யாமென மெல்லவென்*
*மகன்வயிற் பெயர்த் தேனே”* (அகம்.26:14-21)

***என்னும் தலைவியர் கூற்றுகள் தலைவனின் தழுவல் பிள்ளைப்பேற்றால் தவிர்த்ததை வெளிப்படுத்துகின்றது. இந்நிலையில் தான் தன் பிள்ளைக்குத் துணையாக ஒத்தவளாக இருக்கத் தலைவன் பரத்தைக்கு ஒத்தவனாகவே இருக்கின்றான் என்கின்றாள் ஒரு தலைவி. பிள்ளைப்பேறுகாலம் பரத்தையர் பிரிவுக்காலமாக இருப்பதைப் பின்வரும் பாடலும் எடுத்துரைக்கின்றது. மகன் பிறந்த வேளையில் பரத்தையர்பொருட்டுத் தலைவன் பிரிந்து சென்று உறைதலையும் மகப்பேற்றுக்காலத்தில் தலைவி புணர்ச்சி தவிர்த்திருந்த நிலையையும்***

*“புதல்வனை யீன்றவெம் மேனி*
*முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே”* (ஐங்.65:3-4)

***என்னும் வரிகளும் ஐங்குறுநூற்றின் (70:4-5)வரிகளும் வெளிப்படுத்துகின்றன. மகப்பேற்றுக்கான கருவியாக மட்டுமே மனைவியர் இருந்ததை இந்தப் பாடல்கள் காட்டுகின்றன”*** [66] என்கிறார் பெ.மாதையன்.

தலைவி தனக்குரிய நல்லறத்தை வழுவாது ஆற்றுபவள். அவள் உடம்பு புதல்வனை ஈன்றதால் நலங்குறைந்தது. எனவே தன் மேனியை முயங்க வேண்டாம் என்று கூறுகிறாள். மேலும் அவ்வாறு முயங்குதல் தலைவனின் மார்பின் அழகைச் சிதைக்கும் என்று கூறித் தடுக்கிறாள். இப்பாடலில் கரும்பு நடுவதற்குச் செய்த பாத்தியுள் தாமரை தானே விளைந்துள்ளது. அம்மலரின் வண்டினங்கள் தேன் குடித்துத் தன் பசியைத் தீர்த்துக் கொள்கின்ற ஊருக்குத் தலைவன் என்று தலைவி தலைவனை விளித்துக் கூறுவதன்வழி அவள் தலைவனைச் சாடுவது உணர முடிகிறது. இவ் உள்ளுறை தலைவன் பரத்தையருடன் புணர்ந்தமையைச் சுட்டுகிறது. இங்கு அமைந்துள்ள வினையுவமப் போலிப் பரத்தையர்க்காக அமைக்கப்பட்ட இல்லின்கண் தலைவி தான் இருந்து விருந்தோம்பல் முதலிய அறங்களை மேற்கொண்டு ஒழுகுவதைக் குறிக்கிறது. பரத்தையர் வாழும் இல்லின்கண் தலைவி விருந்தோம்புவதாகக் கூறுவது ஐயத்திற்கு உரியதாகின்றது.

**3.3.1.15 ஆம்பல் தாமரைப்போல் மலரும் ஊரன்:**

தலைவியைப்பற்றிப் புறங்கூறுகிறாள் பரத்தை. ஆயின் அதனை மறைத்துத் தலைவி தன்னைப் புறங்கூறுகிறாள் எனக் காதற்பரத்தை பொய் கூறியதனைத் தலைவி அறிந்து,

***"கன்னி விடியற் கணைக்கா லாம்பல்***
***தாமரை போல மலரும்"*** *(ஐங்.68:1-2)*

என்று தலைவனிடம் கூறுகிறாள். இதனின்று ஆம்பல் மலர் தாமரை போல மலரும் என்றது ***'தன்னைப் போல் பரத்தை'*** எனத் தலைவி கூறுவதை அறிய முடிகின்றது.

இதனைச், ***"சிறப்பில்லாத ஆம்பல் தாமரை போல மலரும் என்றதனால், கற்புச்சிறப்பு இன்மையால் அடங்கிக் கிடத்தற்குரிய பரத்தை குலமகளிர் போலச் சிறப்புடையாள் எனக் கருதித் தருக்குகின்றாள்"*** [67] என்று ஔவை சு.துரைசாமிபிள்ளை கூறுகின்றார்.

***"ஆம்பல் தாமரைபோல மலரும் ஊரன் என்றது, சிறிது காலம் நின்னுடன் கூடியது கொண்டு நெடிதுகாலம் நின்னுடன் இல்லறத்தோடு கூடி வாழும் அவர் போன்று மதித்திருக்கும் ஊரன்"*** [68] எனக் குறிப்புப் பொருளாக இலங்கை உரையாசிரியர் கூறுவதனை அ.தட்சணாமூர்த்தி எடுத்துரைக்கிறார்.

***"இழிந்த ஆம்பல் உயரிய தாமரை மலர்போலத் தோன்றுதற்குக் காரணம் விடியற்காலத்திற்கு இயல்பான இருள் கதிரவனால் நன்கு அழிக்கப்படாமையே ஆதல் போன்று நின் பெண்டின் பேதைமையை நீ நன்கு அகற்றாமையே ஆகும். அகற்றியிருப்பையேல் அவள் என்னைப் பழி தூற்றாது அமைந்திருத்தல் கூடும்"*** [69] எனப் பொ.வே.சோமசுந்தரம் உரை கூறுகின்றார்.

தலைவனின் புறத்தொழுக்கத்தில் அவனொடு திரிந்த பரத்தை ***'நின் மனைவி'*** என்று கூறித் திரிகின்றாள். இது அவளுக்கு மட்டுமன்று, தலைவனுக்கும் குற்றமாகும் என்று கருதித் தலைவி புறங்கூறாமல் அடங்கியிருக்கிறாள். ஆயின் அப்பரத்தையும் பிறரும் புறங்கூறித் திரிகின்றனர். கற்புச் சிறப்பில்லாமையால்தான் பரத்தை அடங்காமல் இவ்வாறு திரிகின்றாள் என்று தலைவி தலைவனிடம் சுட்டிக் கூறுகின்றாள்.

ஆம்பல் சிறப்பில்லாதது தாமரை சிறப்பு வாய்ந்தது. தாமரை போன்று தலைவி சிறந்தவள் என்றும் பரத்தை ஆம்பல் போலச் சிறப்பற்றவளாய் இருந்தும் குலமகளிர் போலச் சிறப்புடையவளாகக் கூறித் திரிகின்றாள். அக்காலப் பரத்தையர் குலமகளிராகத் தன்னைப் புலப்படுத்திக் கொண்டனர் என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

***3.3.1.16 பன்மீன் அருந்திய நாரை தங்கும் நீர்நிலை உடைய ஊரன்:***

தலைவன் பல நாளும் பரத்தையுடனே பொழுதைக் கழித்தான். இதனால் மனம் வெறுத்த தலைவி, ***'பல மீன்களையும் உண்ணும் நாரை அந்நீர்நிலையில் உள்ள மருதமரத்திலே தங்குவதைப் போல் பரத்தை இல்லிலே தங்குவது சிறப்போ? தான் மகவு பெற்றதால் பேயானேன்'*** எனப் புலந்து கூறுகின்றாள். இதனைப்

***"பழனப் பன்மீ னருந்த நாரை***
***கழனி மருதின் சென்னிச் சேக்கும்***
***மாநீர்ப் பொய்கை யாண ரூர***
***தூயர் நறியர் நின் பெண்டிர்***
***பேஎ யனையமியாஞ் சேய்பயந் தனமே"*** *(ஐங்.70)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன.

காமக்கிழத்தியின் நலம் பாராட்டும் பாடலில், ***"பழனப் பன்மீனை உண்ட நாரை தங்குவதற்குக் கழனி மருதின் சென்னி ஆதாரமானது போலப் பரத்தையர் நலனை நுகாந்த நீ அவர்பால் நெடிது தங்குதற்கு யாம் சேய்பயந்தமை ஆதாரமாயிற்று"*** [70] என்று உடனுறையாகிய உள்ளுறை-யுவமம் என்று கூறுகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***"நாரை பொது நிலத்திலுள்ள பல்வேறு மீன்களையும் பிடித்துத்தின்று விட்டு வாளா தங்குதற்பொருட்டே நன்செய் நிலத்திலுள்ள மருதமரத்தின் உச்சிக்கு வருதல் போன்று, நீயும் பொழுதெல்லாம் பல்வேறு பரத்தை மகளிரை ஆராயந்து கூடியிருந்து தூய இல்லத்திற்கு வாளா உலகியல்பு குறித்தே வருகின்றனை"*** [71] எனப் பொருள் காண்பார் பொ.வே.சோமசுந்தரம்.

***“சேரிக்கண்ணுள்ள பரத்தையரைச் சேர வேண்டும் கருத்தோடும், இல்லின்கண் நம்மோடு தங்கும் அதற்கு வேண்டும் துணையாளரையும் உடைய ஊரன் என்று ஈழத்து உரையாசிரியர்”*** [72] உரைப்பதாக அ.தட்சணாமூர்த்தி காட்டுகின்றார்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்தமைக்குக் காரணம் அவள் குழந்தை பெற்றமை ஆகும். காமமிகுதி காரணமாக இன்பம் நுகர்வதற்கு காமக்கிழத்தி (சேரிப்பரத்தை)யரை நாடிச் சென்றான். ஏனெனில், தலைவன் கண்ணுக்கு தலைவி உடல்நலம் குன்றியமையால் பேய் போல் தோற்றம் அளிப்பதாகக் கருதுகிறாள். உடல்நலங்குன்றிய தலைவியை விடப் பரத்தையரே புணர்வுக்குச் சிறந்தவர் என அக்கால ஆடவர் கருதினமை இங்கு வெளிப்படுகின்றது. நீண்ட நாள் பரத்தையருடன் இருந்து பிறரின் பழிக்கு ஆளாக நேரிடும் என அஞ்சி வரும் தலைவனைத் தலைவி பரத்தை இல்லிலே இருக்குமாறு ஏசுகிறாள். இப்பாடல் தலைவனின் பிரிவைத் தாங்கிக்கொள்ள முடியாமையால் தலைவி இவ்வாறு ஏசுவதையும், தான் குழந்தை ஈன்றமையைச் சுட்டிக்காட்டிப் பெருமிதம் கொண்டதையும் ஒருசேர உணர்த்துகின்றது.

### *3.3.1.17 தலைவனின் அளவற்ற காமம்:*

நீண்டகாலம் பரத்தையுடனே ஒழுகிய தலைவன் தனதில்லத்திற்கு வந்த போது தலைவி

***“வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை***
***தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலும்***
***மறுவில் யாணர் மலிகே மூரநீ***
***சிறுவரி னினைய செய்தி***
***நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே”*** *(ஐங்.85)*

என்று கூறுகின்றாள். அஃதாவது, தலைவன் நல்லது கெட்டது என அறிந்துகொள்ள இயலாத சிறார்களைப்போல் நடந்துகொள்வதைக் கம்புட்கோழி (சம்பங்கோழி)-யின் பெட்டைக்கோழி தன் இனத்தோடு ஊர்ப்பொதுவிடத்தில் மற்றப் பறவைகளுடன் கூடியிருக்கும் தன்மையை ஒத்தது என்று கூறுகிறாள். இதனைக் ***“கம்புட்பேடை சேவலொழியக்***

***கிளையுடனே ஆலும் ஊரே என்றது, கிளையுடனே வாழுகின்ற எமக்கு நின்னின் நீங்கிய மெலிவு உளதாகக் கூறுகின்றேமல்லேம், நின் குலத்தொழுக்கத்துக்குத் தகாது எனக் கழறியதாம்"*** [73] என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

"***சம்பங்கோழிப்பேடை (தன் சேவலின்றியும்) தனது கிளையோடு மகிழ்ந்து ஆலும் என்றது, 'பெருமானே நீ எவ்வாறு தணந்து போயினை எனினும் யான் எனக்குரிய கடமைகளிலே நெஞ்சினைச் செலுத்தி நமது சுற்றத்தோடு ஒருவாறு மகிழ்ந்திருக்கின்றேன்"*** [74] என்று தலைவி கூற்றின் உள்ளுறை காண்பார் பொ.வே.சோமசுந்தரம்.

***"தலைவனைக் கழறிய தலைவி அவனோடு கூடவேண்டும் என்ற வேட்கை மிகுதியால் இவ்வாறு கூறியமை அறிய முடிகின்றது. இவ்வாறு மொழிதலை,***

***"தாய்போற் கழறித் தழீஇக் கோடல்***

***ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப"*** *(தொல்.பொருள்.173)*

***என்னும் தொல்காப்பிய சூத்திரம் காட்டுவதாகப் பழைய உரை சுட்டு கின்றது"*** [75] இதனால் சம்பங்கோழி தலைவனுக்கும், பெடையானது தலைவிக்கும், கிளைகள் என்பது உறவினர்க்கும் உள்ளுறையாக அமைத்துப் பாடியமை அறிய முடிகின்றது.

பரத்தையிடம் இன்பம் அனுபவித்துவிட்டுத் தலைமகன் தலைமகளை நாடி வருகிறான். இதற்குக் காரணம் தலைவியின் மகப்பேறு என்று தலைவி கருதுகிறாள். தலைவியின் உடல் நலங்குன்றிப் பேய் போல் காணப்படுவதால் பரத்தையரை நாடிச் சென்றான் தலைவன். இதற்குத் தலைவனின் காம மிகுதியே காரணம் என்று எள்ளலுடன் இகழ்ந்துரைக்கிறாள் தலைவி. உடல் நலங்குன்றிய தலைவியை விடப் பரத்தையரே புணர்வுக்குச் சிறந்தவர் என அக்கால ஆடவர் கருதினமை இங்கு வெளிப்படுகின்றது. அது போன்றே தலைவி தான் குழந்தை ஈன்றமையைச் சுட்டுவதால் அவளுடைய பெருமித உணர்வை உணரமுடிகின்றது.

***3.3.1.18 அடங்காத் தலைவன்:***

உண்டி(இரவு)க் காலத்தும் மனைக்கு வாராது பரத்தையுடனே ஒழுகினான் தலைவன். தற்போது தன் மனைக்கு வந்து வாயில் வேண்டி நின்றான். வாயில் வேண்டிய தலைவனுக்குத் தலைவி, ***'அழகிய நடையுடைய எருமை தன் கயிற்றை அறுத்துச் சென்று, நெய்தலும் ஆம்பலும் உடைய பழனத்தில் வளர்ந்த நெல்லைப் பகலில் மேயந்து உண்ணும் தன்மையைப் போல் உள்ளவனே!'*** என வருந்திக் கூறினாள். இதனை,

***"கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ***
***நெடுங்கதிர் நெல்லி னாண்மேய லாரும்***
***புனன்முற் றூரன்"*** *(ஐங்.95:1-3)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இதற்கு, ***"எருமை கயிற்றைப் பரிந்து போய் நாண்மேயல் ஆகும் என்றது, விலக்குவார்க்கு அடங்காது புறத்தொழுக்கம் விரும்புவான்"***[76] என்றுரைக்கிறது பழையஉரை.

***"இரவில் எருமை கயிற்றை அறுத்து விட்டு நெல்லின் நாண்மேயல் ஆகும் ஊரன் என்றது தலைவன் இரவில் ஒழுக்கமாகிய தளையை அறுத்தெறிந்து பரத்தையரை நுகர்ந்தான் என்னும் குறிப்பினதாகும்"***[77] என்கிறார் அ.தட்சணாமூர்த்தி.

இதன்வழித் தலைவன் பகற்பொழுதில் மட்டுமின்றி இரவிலும் பரத்தை இல்லத்திலே தங்குகின்றவனாய் யாருக்கும் கட்டுப்படாதவனாய் வாழ்கின்றான் என்பது உறுதியாகின்றது.

தலைவன் தன்னை நாடி வாராவழித் துன்பம் எய்திய தலைவி அவன் தனக்கு முன்பு செய்த தலையளி நினைத்து இதுபோன்றே பரத்தையர்க்கும் செய்கிறான் என்று எண்ணி வருந்துகிறாள். ஏனெனில் இரவுப் பொழுதில் வாராதிருந்தவன் பகல் பொழுதிலும் வாராமல் இருப்பதால் துன்பம் உற்றாள். தலைவன் பிறர் கூறுவதனை ஏற்காமல் பரத்தையரோடு கூடி உறைபவனே அன்றித் தன்னை தலைவியாய் நினைப்பவன் அல்ல எனத் தலைவி கருதுவதை அறிய முடிகிறது.

ஐங்குறுநூற்று மருதத்திணைப் பாடல்களில் ஓரம்போகியார் உள்ளுறை அமைத்துப் பாடியது போன்றே அம்மூவனாரும் நெய்தல் திணையில்

உள்ளுறையைச் சிறப்பாக அமைத்துள்ளமை தலைவி கூற்றில் வரும் தலைவனின் புறத்தொழுக்கம் வாயிலாக அறிய முடிகின்றது.

***3.3.1.19 நெய்தல் காட்டும் பரத்தமை:***

***3.3.1.20 மடநடை நாரையும் வெள்ளாங் குருகும்:***

ஐங்குறுநூற்றில், ***"நெய்தல் திணைப் பாடல்கள் இரங்கல் என்பதை விடவும் களவும் பரத்தையர் பிரிவால் வந்த நிலையும் பற்றியனவாகவே அமைந்துள்ளன"*** [78] என்று பெ.மாதையன் கூறுகிறார்.

நெய்தல்நிலக் கருப் பொருள்களுள் ஒன்றான வெள்ளாங்குருகை உள்ளுறைப் பொருளாகப் பயன்படுத்தியமையைக் கீழ்வரும் உள்ளுறைச் செய்திகள் உணர்த்துகின்றன. மனிதர்க்குள்ள வழக்கத்தைப் பறவை மேல் ஏற்றிக் கூறும் சிறப்பை இப்பாடல்கள்வழி அறியமுடிகிறது. பரத்தையர் சேரியினின்று திரும்பிய தலைவன், தலைவியின் ஊடல் தீர்க்கத் தோழி உதவியுடன் வாயில் வேண்டி நின்றான்.

தலைவியிடம், ***'தலைவன் பரத்தமை யொழுக்கம் கொண்டிருப்பினும் தலைவிபால் மிக்க அன்பும் பரிவும் அருளும் கொண்டிருப்பதனால் அவன் மேலான கோபத்தை நீக்குக!'*** என்று தலைவனுக்காகப் பரிந்து தோழி கூறினாள். அதற்குத் தலைவி, தலைவனின் புறத்தொழுக்கக் கொடுமையை நினைத்துத் தன் நெஞ்சம் வருந்துவதாகக் கூறித் தலைவனை ஏற்க மறுக்கிறது எனக் கூறி வாயில் மறுத்தாள். இதனை

***"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்***
***காணிய சென்ற மடநடை நாரை***
***மிதிப்ப நக்க கண்போ னெய்தல்***
***கட்கமழ் பானாத் துறைவதற்கு***
***நெக்க நெஞ்சம் நேர்கல் லேனே"*** *(ஐங்.151)*

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இவ்வடிகளுக்குப் பழைய உரை, ***"பரத்தையொருத்தியோடு ஒழுகுகின்ற ஒழுக்கம் இடையற்றதாகச் சென்ற வாயில்கள் நெருங்க அவள் நெஞ்சு நெகிழ்ந்து கூறிய காதல்மாற்றம் பரந்து செல்கின்ற துறைவன் என்பதாம். 'வெள்ளாங்குருகு என்றது பரத்தையாகவும்,***

***பிள்ளை என்றது பரத்தையோடு தலைமகளிடை யுளதாகிய ஒழுக்கமாகவும், காணிய சென்ற மடநடை நாரை என்றது வாயில்களாகவும் கொள்க.”*** [79] என்று கூறுகின்றது.

***“தனக்கு உரித்ததல்லாத வெள்ளாங்குருகின் பிள்ளையைத் தனக்கு உரித்தாகக் கருதி நாரை தன் பிள்ளையைக் கைவிட்டுக் காணச் சென்றாற்போலத் தலைமகன் தனக்குரிய என்னைக் கைவிட்டுப் பரத்தையை நாடிச் சென்றொழுகுகின்றான் எனத் தலைவி உள்ளுறுத்து உரைக்கிறாள்”*** [80] என்கிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

***“வெள்ளாங்குருகு தன் பார்ப்பைப் போலத் தோன்றிற்றாக அதனைக் காண்டற்குச் சென்ற மடநடை நாரை மிதித்தலானே நெய்தல் மலர் சிதைந்து இடையறாது தேன் காலும் துறை எனப் பொருள் கொண்டு, தலைவனுக்குப் பரத்தை குலமடந்தையான என்னைப் போலச் சிறந்தவளாகத் தோன்றுதலானே அவளைக் காமுற்றுச் செல்வானாக, அவன் நடையாலே (ஒழுக்கத்தாலே) என் நெஞ்சம் புண்பட்டு அன்பாலே இடையறாது கசிந்துருகி வருந்தா நின்றது காண்!”*** [81] என்ற உள்ளுறையும் அதற்கு ஏற்பப் பொருள் கோடலும் தகும் என்றார் பொ.வே.சோமசுந்தரம்.

‘‘***தனக்கு உறவல்லாத வெள்ளாங்குருகின் பிள்ளையைத் தன் குஞ்சு என்று கருதித் தன் பார்ப்பைக் கைவிட்டு நாரை காணச் சென்றாற்போல் தலைவன் தலைவியைக் கைவிட்டுப் பரத்தையை நாடிச் செல்கின்றான்”*** [82] என்று விளக்குகிறார் அர.சிங்காரவடிவேலன்.

வெள்ளாங்குருகின் பிள்ளையை நாரை தன் பிள்ளை எனக் கருதிக் காணச்சென்றதுபோல் தலைவன் தலைவியை விட்டுப் பரத்தையை நாடிச் செல்கிறான்.

தலைவன் பரத்தையை நுகாந்து இன்பம் பெற்றபின் தலைவியை நாடி வந்தான். ஊடல் தீராத தலைவி தலைவனிடம், ***‘பரத்தைத் தன்னைப் போல் குல மடந்தை அல்லள்’*** என்பதைச் சுட்டிக் காண்பிக்கிறாள். வெள்ளாங்குருகு பரத்தையாகவும் பிள்ளை தலைவியாகவும் நாரை தலைவனாகவும் உள்ளுறை பெற்றுள்ளன. தலைவன் தலைவியிடம் காட்ட வேண்டிய அன்பையும் காதலையும் பரத்தையிடம் காண்பித்தான். பரத்தைக்கே சிறப்புச்

செய்தமை கூறித் தலைவி வருந்துகின்றாள். தலைவனின் புறத்தொழுக்கத்தால் தலைவி நெஞ்சு புண்பட்டு வருந்தி நின்றதனைத் தலைவன் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை என்பது தெளிவாகிறது. மேலும், தலைவன் பரத்தையைத் தலைவி போல் காண்பதால் ***'மடப்பம்'*** பொருந்தியவன் என்றும் கூறுவது உணர முடிகின்றது.

### ***3.3.1.21 தலைவியின் மகப்பேறும் தலைவனின் பரத்தமையும்:***

தலைவனுக்காக வாயில் வேண்டி நின்றாள் தோழி. தலைவி கருவுற்றிருத்தலையும், மகப்பேறு காலம் நெருங்குதலையும் காரணங் காட்டித் தலைவனுடன் புலவி வேண்டா எனக்கூறிய தோழிக்குத் தலைவி, ***'தலைவனுக்குக் களவில் தான் 'பைஞ்சாய்ப் பாவை' பெற்றுத் தந்தேன். அதுவே தனக்குப் போதும் என்றாள்'***. இதனை

***"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்***
***காணிய சென்ற மடநடை நாரை***
***பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய***
***ஒதமொடு பெயருந் துறைவதற்குப்***
***பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே"*** *(ஐங்.155)*

என்ற பாடலில் காண முடிகின்றது. இதற்குப், ***"பதைப்ப....துறைவன் என்றது வாயில்கள் கூறிப் பரத்தை எய்திய இரக்கத்தினைத் தன் தண்ணளியால் தீர்ப்பாள்"*** [83] என்று பழைய உரை பொருள் எடுத்துரைக்கின்றது.

***"கொடுமை யொழுக்கம் தோழிக் குரியவை, வடுவறு சிறப்பின் கற்பில் திரியாமை, காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும், ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்" என (தொல்.பொருள்:147) வரும் கூற்றுவகையில்,*** "***இது பல்லாற்றானும் வாயில் நேராத தலைவியை மகப்பேற்றிற்குரிய காலம் கழிய ஒழுகாநின்றாய் என நெருங்கிய தோழிக்கு யான் களவின்கண் மகப்பெற்றேன் எனத் தலைவனைக் காய்ந்து கூறியது"*** [84] என்பர் நச்சினார்க்கினியர்.

***"பதைப்ப ..........ஓதமொடு பெயரும்" என்றதன் குறிப்புப் பொருளாவது, பரத்தையர் உறவு இடையீடுபட்டதாக அதன் பொருட்டு***

***அவரைக் காணச் சென்ற தலைவன் அவர் ஊடலைப் பொறாமல் வருந்திக் கூறிய சொற்கள் என் பாங்காயினார் வாயிலாக என் செவிக்கு எட்டியிருக்கின்றன. இத்தகையோன் எங்ஙனம் நம்மோடிருந்து இல்லறம் நிகழ்த்துவான்"*** [85] என்று உள்ளுறைப் பொருள் கொள்வார் பொ.வே.சோமசுந்தரம்.

***"வாயில்கள் கூறப் பரத்தை எய்திய இரக்கத்தைத் தன் தண்ணளியால் தீர்ப்பான்"*** [86] என்று கூறுகிறார் அ.தட்சிணாமூர்த்தி.

தலைவன், தலைவியின் மகப்பேறு காலத்தைக் காரணம் காட்டித் தனது காம இச்சைக்காகப் பரத்தமை மேற்கொண்டதுபோல் அமைகின்றது இப்பாடலின் கருத்து.

***3.3.1.22 பரத்தையிற் பிரிந்த தலைவனும் புதல்வனின் வருகையும்:***

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான். தலைவி வாயில் மறுத்ததால் மகனொடு தனதில்லத்திற்கு நுழையப்போவதாகக் கேள்வியுற்றாள். ஆனால் தலைவன் வாராது தன் மகன் மட்டுமே வருவதைக் கண்ட தலைவி புலந்தாள் தன் புதல்வன் தனித்து வருதற்குக் காரணம், அவன் தன்மேல் கொண்ட காதல் என்பது தலைவி கருத்தாகும். இதனை,

***"தான்வந் தனனெங் காத லோனே"*** (ஐங்.157:5)

என்ற அடி எடுத்துரைக்கின்றது. மேலும் இப்பாடலில் ***"நாரை காலையிலிருந்து மாலைச் சேக்கும் துறைவன் என்றது பரத்தையிடத்து விட்ட வாயில்கள் செவ்வி பெறாது பகலெல்லாம் இருந்து இரவின்கண்ணும் அங்கே துயில்கின்றான்"*** [87] என்று உள்ளுறை கூறுகிறது பழைய உரை. ***"இது வாயில் வேண்டி யொழுகுகின்றான் புதல்வன் வாயிலாக வரும் எனக் கேட்டு அஞ்சிய தலைவி அவன் விளையாடித் தனித்து வந்துழிக் கூறியது"*** [88] என நச்சினார்க்கினியர் கூறுவர். ***"காணிய சென்ற நாரை காலையிருந்து மாலைச் சேக்கும் என்றது, பரத்தையிற் பிரிந்த தலைவன் பகலும் இரவும் பரத்தையர் மனைக்கண்ணே உறைகுவன் என்பது விளக்குதலின், சேர்ப்பனோடு வாரான் என வாளாது கூறினாள்"*** [89] என ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

தலைவன் இரவு பகல் பாராமல் பரத்தையுடனே ஒழுகினான். அத்தலைவன் பரத்தை மனையிலிருந்து திரும்பி வந்து தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான். தலைவி வாயில் மறுக்கும்போது புதல்வனுடன் தன் மனையில் புகுந்து விடுவான் தலைவன் என எண்ணினாள்; ஆனால் தன் புதல்வன் தனித்து வரக் கண்டாள் தலைவி. இதனைப் பார்த்த தலைவி தலைவன் மீண்டும் பரத்தை மனைக்கே சென்றானோ? என எண்ணி வருந்துகின்றாள். தலைவி மற்றும் தன் புதல்வனுக்குத் துன்பம் தரும் தலைவனின் இயல்பை இப்பாடலால் அறிய முடிகின்றது.

***3.3.1.23 பரத்தையின் புலவியும் தலைவியின் ஊடலும்:***

காதற் பரத்தையுடனான புலவி தீராத தலைவன் தலைவியுடன் கூட எண்ணினான். அதனால் தன் மனைக்கு வந்து தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான். வாயில் வேண்டும் தலைவன் உண்மையான அன்புடன் தன்னைத் தேடி வரவில்லை காம இச்சைக்காகவே தன்னை நாடி வந்துள்ளான் என அறிந்தாள் தலைவி. ஆதலால் வாயிலும் மறுத்தாள். மேலும் தலைவனைக் காதற் பரத்தையிடமே சென்று இன்பம் நுகருமாறு கூறி ஊடினாள். இதனை,

***“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்***
***காணிய சென்ற மடநடை நாரை***
***நொந்ததன் றலையு நோய்மிகுந் துறைவ***
***பண்டையின் மிகப்பெரி தினைஇ***
***முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே”*** *(ஐங்.160)*

என்று அம்மூவனார் பாடுகிறார். குருகின் பிள்ளை இறந்ததாக அதன் தாயினைக் கண்டு ஆறுதல் கூறச் சென்றது நாரை என்பதால் காம மயக்கமுற்ற பரத்தையின் ஊடலைத் தீர்த்து அவளொடு முயங்கி வருத்தம் தீர்க்குமாறு தலைவனுடன் ஊடினாள் தலைவி என்கிறார் அம்மூவனார். இப்பாடலுக்கு, ***“நாரை....துறைவ’ என்றது நின் ஆற்றாமைக்குப் பரிந்து வாயிலாய்ச் சென்றவர்கள் அவள் வருத்தம் கண்டு மிகவும் வருந்துகின்றார்கள்”*** [90] எனப் பழைய உரை உள்ளுறை காண்கின்றது.

***"நாரையின் வருத்தத்தைக் காட்டிலும் தலைவனின் வருத்தமும், தலைவனின் வருத்தத்தைக் காட்டிலும் பரத்தையின் வருத்தமும், மிகுதியாக இருப்பதால் "என் வருத்தத்தை நீக்க இங்கே வரவேண்டாம், அவள் வருத்தத்தை நீக்க அங்கே செல்க"*** [91] என்று தலைவி வாயில் மறுத்ததாக அர.சிங்காரவடிவேலன் விளக்குகிறார்.

பரத்தையின் ஆற்றாமை கூறித் தலைமகற்கு வாயில் மறுக்கிறாள் தலைவி. இப்பாடல்வழிப் பரத்தையின் புலவியைத் தீர்க்குமாறு தலைவி வற்புறுத்துவது அறிய முடிகிறது. அதாவது தலைவி வருத்தமுற்று மீண்டும் தலைவனைப் பரத்தையிடம் போகுமாறு வற்புறுத்துவது புலனாகிறது. பரத்தையின் ஆற்றாமையை உணர்ந்தவளாகத் தலைவி இப்பாடலில் காட்டப்படுகின்றாள்.

### *3.3.1.24 தலைவனின் பரத்தமையும் ஊரார் அலரும்:*

நீர்க்காகம் பெரிய நீர்த்துறையில் வாழும் அயிரை மீனையும் விரும்பி உண்ணும் இயல்புடையதைப் போலத் தலைவன் தன் தகுதிக்கும் குறைவான இழிவான பரத்தையருடன் ஒழுகுகின்றான் எனத் தலைவி வருந்திக் கூறினாள். இதனைப்

***"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***இருங்கழி மருங்கி னயிரை யாரும்***
***தண்ணந் துறைவன் றகுதி***
***நம்மோ டமையா தலர்பயந் தன்றே"*** *(ஐங்.164)*

என்ற பாடலால் அறியமுடிகிறது. இப்பாடலுக்குச் ***"சிறுவெண் காக்கை இருங்கழி மருங்கின் அயிரை ஆரும் என்றது, பரத்தையருள்ளும் புலவியாரை விரும்புவான் என்றவாறு. 'துறைவன் தகுதி நம்மோடு அமையாது அலர் பயந்தன்றே' என்றது அவன் தகுதியுடைமை நமக்குத் தீங்கு செய்தலேயன்றித் தனக்கும் அலர் பயந்தது என்பதாம்"*** [92] எனப் பழைய உரை உள்ளுறையாக எடுத்துரைக்கின்றது.

***"தன் புறத்தொழுக்கத்தால் தன்னை இன்றியமையேனாகிய எனக்கு வருத்தம் செய்வது, அவற்குத் தகுதியாய்த் தோன்றினும், பிறர்க்கும் அது***

***நிகழ ஒழுகுகின்றான் என்றற்கு நம்மோடு அமையாது என்றும், அவ்வொழுக்கத்தால் ஊரெங்கும் அலராயிற் றென்பால் அலர் பயந்தன்றே என்றும் கூறினாள். பரத்தையர் பாலும் ஒன்றி யமையாது ஒழுகுதலை உள்ளுறையாற் கூறுகின்றாள்"*** என்றும், ***"பெரிய கழியிடத்து உறையும் வெண்காக்கை சிறியவாகிய அயிரைமீனை உண்ணும் பெருமனைக்கண் இருந்து நல்லறம் புரியும் தகவுடைய தலைமகன் என்றதனால், சிற்றினமாகிய பரத்தையரைக் கூடி யொழுகுதல் கூடாதென"*** [93] உள்ளுறை கூறுகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

"***பிறர் பழியுந் தம்பழிபோல் நாணும் நல்லியல்புடைய தலைவி தலைவன் பழிக்கு நாணுதல் இயல்பேயன்றோ? இது தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காக்க முயலும் முயற்சியென்க. பரத்தையருள்ளும் நல்லாரை நாடாது புல்லியோரை நாடுகின்றான்"*** [94] என்று உள்ளுறை காண்கிறார் பொ.வே.சோமசுந்தரம்.

அ.தட்சணாமூர்த்தி இதற்குச் ***"சிறுவெண்காக்கை அயிரையைத் தேர்ந்து உண்ணும் என்றது தலைவன் பரத்தையருள்ளும் இழிந்தாரை நுகர்வான்"*** [95] என்று உள்ளுறை காண்கிறார்.

தலைவி வருந்தத் தலைவன், பரத்தையர் சேரிக்குச் செல்லும் இழிசெயலை மேற்கொள்கிறான். தலைவனின் தகுதியற்ற இவ் இழிவான செயலை ஊரார் பலரும் கூறக் கேட்டுத் தலைவி துன்பம் அடைந்தமை அறிய முடிகின்றது. மேலும் தலைவனின் 'தகுதி' எனத் தலைவி ***'குலமகளிரையும் பொதுமகளிரையும் ஒப்பிட்டுப் பார்த்துக் குலமகளிரே பிள்ளைப் பெறும் மாண்புடையவர்'*** என்பதை உணர்ந்தும் தலைவன் இத்தகுதியற்ற இழிசெயலைச் செய்கிறான் என்று குறிப்பிடுவதைக் குறிப்பால் உணர முடிகின்றது.

### *3.3.1.25 தலைவனின் சிறுமை ஒழுக்கமும் சூளுரையும்:*

***'நின்னிற் பிரியேன், பிரியின் உயிர் தரியேன்'*** எனத் தெய்வத்தின் முன் சூளுரைத்த தலைவன் தற்போது பரத்தமை மேற்கொண்டு ஒழுகுதலைத் தலைவி,

***"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***அறுகழிச் சிறுமீ னார மாந்தும்***
***துறைவன் சொல்லிய சொல்லென்***
***இறையே ரெல்வளை கொண்டுநின் றதுவே"*** *(ஐங்.165)*

என்ற பாடலில் சுட்டி உரைக்கிறாள். இப்பாடலிலும் தலைவன் இழிந்த பரத்தையரையே விரும்புகின்றான் என்பதைக் கடற்காக்கை சிறு மீனான அயிரைமீனை விரும்புதலையும், தலைவனின் சூளுறையும் பொய்த்தது என்றும் தலைவி கூறுகின்றாள். ***"தலைவன் பொய்க்சூள் புரிந்தொழுகுதலைப் புறத்தொழுக்கத்துப் பரத்தையர்மாட்டும் செய்கின்றான் என்பது தோன்ற உள்ளுறையும் கூறுகின்றாள்"*** [96] என ஔவை சு.துரைசாமிபிள்ளை எடுத்துரைக்கின்றார்.

***"சிறுவெண் காக்கை, பெரிய மீனைத் தேர்ந்துண்ணாது சிறுமீனை உண்ணுவது போலத் தலைவனும் பரத்தையருள்ளும் இழிந்தோரைத் தேர்ந்து நுகர்வான்"*** [97] என்பர் அ.தட்சணாமூர்த்தி. இது தலைவனின் சிறுமை-யொழுக்கத்தை எடுத்துரைப்பதை அறிய முடிகின்றது.

களவுக் காலத்தில் தன்னை விட்டுப் பிரியேன் என்று தலைவன் தலைவியிடம் சூள் உரைத்தான். ஆனால் அது பொய்யாகும்படி பரத்தமை மேற்கொண்டான். அதனினும் இழிந்த பரத்தையரையும் நாடினான். ***'சூள்'*** தப்பினோரைத் தெய்வம் தண்டிக்கும் ஆதலால் ***'சூள் தப்பிய தலைவனைத்'*** தெய்வம் தண்டிக்கும் என அஞ்சினாள். அவ்வச்சத்தால் உடல் மெலிந்தது. அதனால் வளையல் கழன்று விழுந்தது. இவ்வச்சம் தலைவனின் பரத்தமைக்கானது அன்று என்பதும் அறிய முடிகின்றது. சங்கச் சமூகத்தில் தலைவனின் பரத்தமையைத் தலைவியால் புறக்கணிக்கமுடியவில்லை என்பது இப்பாடல்வழி உணர முடிகிறது.

***3.3.1.26 தலைவனின் கொடுமையொழுக்கமும் தலைவியின் வருத்தமும்:***

காதற் பரத்தையை விட்டு வேறு பரத்தையுடன் ஒழுகி வந்த தலைவன் தனதில்லத்திற்கு வந்தான். தலைவியிடம் வாயில் வேண்டினான். வாயில்

தர விரும்பிய தோழி தலைவியிடம், ***நின் கண்கள் பசந்தன காண்!'*** எனக் கூறினாள். அதற்குத் தலைவி கூறுவதனைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

***“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***பொன்னிணர் ஞாழன் முனையிற் பொதியவிழ்***
***புன்னியம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்***
***நெஞ்சத் துண்மை யறிந்தும்***
***என்செயப் பசங்குந் தோழியென் கண்ணே”*** *(ஐங்.169)*

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் குறித்துச் ***“சிறுவெண் காக்கை ஞாழலை வெறுப்பின் புன்னைச் சினையிற்சேக்கும் என்றது, பரத்தையர் மனையில் ஒன்று வெறுப்பின் ஒன்றின் கண் தங்குதலை யுடையான்”*** [98] எனப் பழைய உரை கூறும் உள்ளுறையை ஔவை சு.துரைசாமிபிள்ளையும் ஏற்றுக் கூறுவது அறிய முடிகின்றது.

***“ஒருவன் தனக்கே உரிமை பூண்ட காமக் கிழத்தியும் ஓரோவழித் தன்னை ஒப்பவளாகலின் அவளைப் பொன்னிணர் ஞாழலோடு உவமித்தான். புதிதாகப் பேதைப் பருவம் கடந்து பெதும்பைப் பருவம் எய்தும் பரத்தையர் மகளிர் இருக்கும் இடமெல்லாம் தேடிச் செல்வான் என்பாள் ‘பொதியவிழ் புன்னையம் பூஞ்சினை' என்றாள்”*** [99] என்று பொ.வே.சோமசுந்தரம் நுட்பமாக விளக்குவர்.

பொ.வே.சோமசுந்தரத்தின் இவ்விளக்கத்தால், தலைவன் அளவற்ற காம உணர்வு கொண்டவன் என்றும் தலைவி காமக்கிழத்தியின்மேல் இரக்கம் கொள்ளும் பண்பினள் என்றும் உணர முடிகின்றது. மேலும் தலைவன் பெதும்பைப் பருவப்பரத்தையரை நாடுகின்றவன் என்பதால் இளம் பரத்தையர் பலர் இருந்தமை அறிய முடிகின்றது. தலைவனின் இத்தகு இழிவான செயலைத் தலைவி அறிந்திருந்தும் ஏதும் கூறாதவளாய் இருப்பது தலைவனின் பரத்தமையை ஏற்றுக் கொண்டமை என்பதும் உணர முடிகின்றது. இது அக்காலச் சமுதாய ஏற்பாகவும் காண முடிகின்றது.

தலைவனின் பரத்தமையால் வருந்தி மெலிந்த தலைவிக்குத் தோழி, தலைவன் அன்பும் காதலும் மிக்கவன் இத்தகு தீயொழுக்கம் இல்லாதவன் என்று கூறுகிறாள். அதற்குத் தலைவி, தலைவன் நல்லன் எனில் தன் கண்கள் பசந்தது எதனால்? என வினவுவதோடு நெய்தல் மலரில் உள்ள தேனின் சிறப்பை உணராது நீர்க்காகம் சிதைப்பது போல தலைவன் பரத்தையர் நலனையும் அழிப்பவன் என்று கூறுகின்றாள். இக்கூற்றினை,

***"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***இருங்கழி நெய்தல் சிதைக்கும் துறைவன்"*** *(ஐங்.170:1-2)*

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதற்குப், ***"பரத்தையருடைய நலன் சிதைப்பான்"*** [100] எனப் பழைய உரையும், ***"காக்கை பெரிய கழிக்கண் மலர்ந்த நெய்தலைச் சிதைக்கும் என்றதனால், புறத்தே தான் பற்றி ஒழுகும் பரத்தையரிடத்தும் இப்பெற்றியே ஒழுகி அவர்தம் நலத்தைச் சிதைப்பான்"*** [101] என உள்ளுறை கூறுகின்றார் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை.

***"நெய்தலை நாரை மிதித்துச் சிதைக்கும் துறைவன் என்றது, பரத்தையர் பலரது நலன்களையும் நுகர்ந்து அவர்கள் நலனைச் சிதைப்பவன்"*** [102] என்னும் உள்ளுறை கொண்டது என்பர் அ.தட்சணாமூர்த்தி.

தலைவன் ***'தீயதில்லான் நன்றுடையான்'*** என்று பாராட்டிய தோழியிடம் தலைவி, தனது நலத்தையும் கெடுத்துச் சேரியில் உள்ள பல பரத்தையரின் நலனை நயந்து அந்நலம் கெடும்படி செய்தவன் தலைவன். அவன் நல்லவன் எனில் என் கண்கள் பசந்தன எதற்கு? என்று தலைவி வினவினாள். தலைவனின் தீய ஒழுக்கமே தலைவியின் வருத்தத்திற்குக் காரணம் என்றும் அதனாலே தன் கண்களும் வருந்தின என்றும் தலைவி கூறுகின்றாள். இதனின்று, தலைவனின் பரத்தமையொழுக்கத்தைக் ***'கொடுமையொழுக்கம்'*** என்று கூறுவதால் தலைவி இதனை ஏற்கவில்லை என்பதை உணர முடிகின்றது. ஆயினும் அவளால் எதிர்த்துப்பேசத் துணிவில்லை என்பதும் சங்கச் சமூகத்தில் பெண்களுக்குக் கணவரை எதிர்த்துக் குரல்தர உரிமையில்லை என்பதும் அறிய முடிகின்றது.

### *3.3.1.27 கடலைவிடப் பெரியது தலைவனின் அன்பு:*

பரத்தையரின் நீங்கித் தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான் தலைவன். அதற்குத் தலைவி,

***"நெய்த லிருங்கழி நெய்தல் நீக்கி***
***மீனுண் குருகினங் கான லல்கும்***
***கடலணிந் தன் றவ ரூரே***
***கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே"*** *(ஐங்.184)*

என்ற பாடல் வழியாகத் தலைவனின் பரத்தமையைக் கூறி வாயில் மறுக்கிறாள். இப்பாடலுக்கு, ***"நெய்தல் நீக்கி மீனுண் குருகினம் கானலில் அல்கும் என்றது பொதுமகளிரிடத்து ஊடல் நீக்கி இன்பம் நுகர்ந்து ஆண்டுத் தங்குவான்"*** [103] எனப் பழைய உரை எடுத்துரைத்த உள்ளுறையையே அ.தட்சிணாமூர்த்தியும், அ.மாணிக்கமும் உரைப்பதை அறிய முடிகின்றது.

தலைவனின் அன்பு கடல் போன்றது என்றுரைத்த பாணனிடம் தலைவி கடல் பெரியதுதான் ஆனால், அக்கடல் அழகுக்கு மட்டுமே ஊருக்கு பயன்படாது. அது போன்றே தலைவனின் அன்பும் நட்பும் தனக்குப் பயன்படாமல் தன் மேனியை வேறுபடச் செய்தன எனக் கூறிப் பாணனின் பொய்யை ஏற்க மறுத்தாள். தலைவன் பொதுமகளிரின் ஊடலைத் தணித்து அவ்விடமே தங்கும் இயல்பினன் என்பதும் அறிய முடிகின்றது. இதனின் அக்காலச் சமூகத்தில் தலைவனின் இழிவான பரத்தமையைத் தலைவி ஏற்கவில்லை என்றும் அதற்காக வருந்தினாள் என்றும் அறிய முடிகின்றது.

இவ்வாறு, ஐங்குறுநூறு தலைவியின் கூற்றாக அமைந்த பாடலில் பரத்தையை வேழமாகவும், ஆம்பல் தண்டாகவும், வாளை மீனாகவும், அயிரை மீனாகவும், சிறு மீனாகவும், கோழியாகவும் வெள்ளாங்குருகு ஆகவும் சித்திரித்துத் தலைவனை, நண்டாகவும், காளையாகவும் நாரையாகவும், சம்பங்கோழியாகவும் உவமித்துள்ளமை அறிய முடிகிறது.

தலைவன் பல பரத்தையுடன் தொடர்பு கொள்பவனாகவும், வரைந்து கொள்பவனாகவும், தலைவியிடம் இனிப் பரத்தை மனைக்குச் செல்ல மாட்டேன் எனப் பொய்யுரைப்பவனாகவும், பரத்தையுடன் புணர பாணனைத் துணையாகக் கொள்பவனாகவும், இந்திர விழாவில் விரும்பிய பரத்தையுடன்

.முயங்குபவனாகவும், பகல் இரவு எனப் பாராமல் பரத்தையுடனே தங்குபவனாகவும் உலா வருகின்றான். தலைவி துன்பமடைந்தாலும் அத்துன்பத்தைத் தலைவன் பெரிதாகக் கொள்ளவில்லை. தனது காம உணர்விற்கே மிக முக்கியத்துவம் தருபவனாகத் தலைவன் காணப்படுதலை இப்பகுதியில் காண முடிகிறது.

### *3.3.2 கலித்தொகைத் தலைவி கூற்றும் பரத்தமையும்:*

#### *3.3.2.1 மருதக்கலி காட்டும் உள்ளுறை:*

***"சிறந்த உளவியல் நூல் எனத் தகுந்தது மருதக் கலி"*** [104] ***"மருதிலக் கருப்பொருள்களைத் தாமரை செங்கழுநீர் முதலான மலர்களையும், நெல் கரும்பு முதலான பயிர்களையும் அன்னம் வண்டு முதலான உயிரினங்களையும் உள்ளுறையுவமமாகவும் ஏனையுவமமாகவும் அமைத்துக் கலியோசை கெழுமிய தரவுகளில் புலவர் பாடுந்திறம் கலை விருந்தாயுள்ளது. மருதக்கலியுள் பதினொரு செய்யுட்களில் உள்ளுறையுவமம் அமைந்துள்ளது."*** [105] என்றார் மு.வரதராசனார்.

ஓரம்போகியாரைப் போன்று மதுரை மருதனிளநாகனாரும் உள்ளுறை பாடுவதில் வல்லவர் என்பதனை அவர் இயற்றிய மருதக்கலி வழியாக அறிய முடிகின்றது. இறையனார் அகப்பொருளுக்குச் சிறப்பாக உரை எழுதிய மதுரை மருதனிளநாகனார் மருதக்கலியில் அணிகளும், நகைச்சுவையும் பொருத்திப் பாடுவதில் வல்லவர். ***'கற்பார் வழி உவகை கொள்ளப் பாடிய'*** இவரது மருதக்கலியில் ஊடலுக்கு உள்ளுறையே உதவும் என்பதும், அதற்குக் கருப்பொருளே சிறப்புத் தருகின்றது என்பதும் காணமுடிகின்றது. இத்தகு நயம் வாய்ந்த பாடல்களைக் குறித்துப் பின்வரும் பகுதி விளக்குகின்றது.

#### *3.3.2.2 வண்டும் தலைவனும்:*

தலைவன் பரத்தையை மணந்து இன்பம் நுகர்ந்தான். பின் தலைவியுடன் இன்பம் துய்ப்பதற்கு எண்ணி இல்லத்திற்கு வந்தான். அப்போது பரத்தையுடன் தலைவன் நீராடியதையும், பின்பு துணங்கை-யாடியதையும் கூறித் தலைவி ஊடுகிறாள். மருதநிலத்தில் பூவிற்போர் அந்நிலத்தில் பூத்த பூக்களையெல்லாம் சேர்த்துக் கட்டிக் கொண்டு

ஊருக்குள் வருவர். அந்நிலத்தில் யானைகளின் மதநீரை உண்டு மகிழ்ந்து பொழுதைக் கழித்தன வண்டு இரவில் விரும்பிய ஆடவரை விரும்பிய வண்ணம் இணைந்து மகிழும் பெண்களின் கூந்தலில் உள்ள முல்லைப்பூக்களின் தேனை உண்டு பசியாறின. அவ்வண்டு முன்பு தான் வாழ்ந்த பொய்கையை மறந்தது போல் தலைவனும் பரத்தையை மணந்து தன்னை மறந்ததாகக் கூறினாள். இதனை,

> ***"வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட***
> ***ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்***
> ***டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்றம்***
> ***ஆங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்***
> ***வீங்கிறை வடுக்கொள விழுநர்ப் புணர்ந்தவர்***
> ***தேங்கமழ் கதுப்பினுள் அரும்பவிழ் நறுமுல்லைப்***
> ***பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதாம் மரீஇய***
> ***பூம்பொய்கை மறந்துள்ளாப் புணலணி நல்லூர"*** *(கலித்.66:1-8)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளில், ***"வீங்குநீர் பரத்தையர் சேரியாகவும், அதன்க ணவிழ்ந்த நீலங் காமச்செவ்வி நிகழ்ந்த பரத்தையராகவும், பகர்வர் பரத்தையரைத் தேரேற்றிக் கொண்டுவரும் பாணர் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானையின் கடாத்தை ஆண்டுறைந்த வண்டுகள், வந்த வண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப் பரத்தையர் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலில் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையுடன் இரவு துயிலுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும் பொருள் தந்து ஆண்டுப் புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத் திணைப்பொருட்கு உள்ளுறை உவமமாயவாறு காண்க. இது, "கிழவோட் குவம மீரிடத்துத்தே" (தொல்.பொருள்:304) என்பதனாள் மருதத்துக்கண் உவமப்போலி கூறியது."*** [106] என்று கூறுகிறார் நச்சினார்க்கினியர்.

இதற்கு தமிழண்ணல் ***"புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத்திணைப் பொருட்கு உவமமாய்க் கேட்போனுள்ளத்தே விளக்கி***

***நின்றவாறு காண்க எனச் சுட்டிக்காட்டுவது சிறப்புடையதாகும் "*** [107] என்று எடுத்துரைக்கிறார்.

***"வீங்கு நீர் என்பது பரத்தையர் ஊர். அதில் உள்ள நீலமலர் பரத்தையர், பூக்களை விற்பவர் பரத்தையரைத் தேரில் ஏற்றி வரும் பாணர் முதலியவர். மலரைச் சூழ்ந்த வண்டு தலைவன். யானையின் மதநீரில் உள்ள வண்டு வந்த வண்டிற்கு விருந்து செய்தல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பரத்தையர் தலைவனை இன்பம் நுகர்வித்தல். இரவில் முல்லையை வண்டு மொய்த்தல் இற்பரத்தையருடன் கூடி இரவு துயிலல் முன்பு தான் நுகர்ந்த பொய்கையை வண்டு மறத்தல் தலைவியை மறத்தல், இங்ஙனம் உள்ளுறை அமைந்துள்ளது"*** [108] என அ.மாணிக்கம் கூறுவர்.

நச்சினார்க்கினியரின் உள்ளுறையைச் சார்ந்தே அ.விசுவநாதன் கூற்றும் அமைவதைக் காண முடிகிறது.

இதன் வழி பரத்தையை மலர் என்றும், தேன் என்றும், முல்லை என்றும் தலைவனை வண்டு என்றும் கூறுவதைக் காண முடிகின்றது.

பல்வேறு பரத்தையிடம் சென்று கூடி மகிழ்ந்த தலைவனை ஏற்றுக் கொள்ள மறுக்கும் தலைவி பின்னர் அவனோடு ஊடல் தீர்ந்து கூடுவது இப்பாடல்வழி அறிய முடிகின்றது. பல்வேறு பரத்தையுடன் புனலாடியும் துணங்கையாடியும் இன்புறும் தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்வது அக்காலச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு பழக்கம் எனக் கூறமுடிகின்றது. மேலும் அக்காலச் சமுதாயத்தில் பெண்கள் பெற்றிருந்த இழிநிலையையும் புலப்படுத்துகின்றது.

### *3.3.2.3 பரத்தயரைத் தங்கையாகக் கருதும் தலைவி:*

தலைவன் பரத்தையைப் பிரிந்து தலைவியிடம் வந்தான். தன்னில்லத்திற்கு வந்த தலைவனின் கோலத்தைக் கண்ட தலைவி, தலைவனின் பொய்யுரையைத் தனது தங்கையரான பரத்தையர்க்கே கூறுக என்று கூறுகிறாள். அகன்ற சேரியில் வாழும் அன்பில்லாப் பரத்தையிடம் தாமரை போன்ற தலைவன் சென்றான். தீதென அறிந்தும் கள் உண்டு மகிழ்வது போல் தலைவனின் செயலுள்ளது எனக் கூறுகிறாள். இதனை

நச்சினார்க்கினியர், ***"அகன்ற துறை பரத்தையர் சேரியாகவும், அழகு பெறும்படி புதலொடு வந்து தாழ்ந்த மணமில்லாத பகன்றைப்பூப் பாணர் முதலிய வாயில்களோடே வந்து தங்கின அன்பில்லாத பரத்தையராகவும் அதனை உறநீண்ட தாமரை அப்பரத்தையரிடத்தே சேர்ந்த தலைவனாகவும், அத்தாமரைக் கள்ளைத் தீதென்று உணர்ந்து வைத்தும் அதனை உண்டு களிக்கின்றவன் முகம்போலத் தளைவிடுதல். அன்பில்லாத மகளிரிடத்துப் பெறுகின்ற இன்பநுகர்ச்சி தீதென்று உணர்ந்து வைத்தும் அதனை நுகர்ந்து மகிழ்கின்ற தலைவனாகவும் உள்ளுறை கொள்க"*** [109] எனக் கூறுகின்றார் இதனை

***"அகன்றுறை அணிபெறப் புதலொடு தாழ்ந்த***
***பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை***
***கண்பொர ஒளிவிட்ட வெள்ளிய வள்ளத்தால்***
***தண்கமழ் நறுந்தேறல் உண்பவள் முகம்போல்***
***வண்பிணி தளைவிடுஉம் வயலணி நல்லூர"*** *(கலித்:73:1-5)*

என்ற அடிகளால் உணர முடிகின்றது. நச்சினார்க்கினியர் உள்ளுறையை முன்வைத்தே அ.விசுவநாதனும், அ.மாணிக்கமும் தங்களது உரையில் எடுத்தியம்புகின்றனர். இதனின், பரத்தையொழுக்கம் தீதென கடிந்து உரைக்கிறார் மதுரை மருதனிளநாகனார்.

பரத்தையிடம் சென்று திரும்பிவந்த தலைவனின் தோற்றத்தைக் கண்ட தலைவி அவன் கூறிய பணிவான சொற்களை ஏற்றுக் கொள்ளாமல் மீண்டும் பரத்தையிடமே செல்க என்று கூறுகிறாள். மேலும் அப்பரத்தையைத் தன் தங்கையர் எனக் கூறுகிறாள். இது தலைவியின் ஆற்றாமையைப் புலப்படுத்தினாலும் பரத்தையரைத் தங்கையராகக் கருதும் நிலைக்கு அக்காலப் பெண்கள் ஆளானமை அறிய முடிகின்றது. அக்காலச் சமூகம் தலைவிக்குத் தந்த உரிமையையும் அவள் அதற்கு மீறிச் செயல்பட முடியாமையையும் இப்பாடல் காட்டுகிறது. தலைவியின் இச்செயல் தொல்காப்பியரின்

***"கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி***
***அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்***

***காதல் எங்கையர் காணின் நன்றென***

***மாதர் சான்ற வகையின் கண்ணும்"*** *(தொல்.பொருள்.150:28-31)*

என்ற அடிகளால் அறியமுடிகின்றது.

தலைவன் நாள்தோறும் பரத்தையை வதுவை அயர்ந்து வந்தான். அதனால் வருந்திய தலைவிக்குத் தோழி, தலைவன் வரும்பொழுதில் ஊடல் கொள்ளாதே! அவனை எதிர்கொள்க! எனக் கூறினாள். அதற்குத் தலைவி, தலைவனின் இச்செயலால் கோபம் கொள்கிறாள். ***'வாடிப்போன மாலையுடன் இல்லத்திற்கு வாராதே'*** எனக் கூறித் தலைவி ஊடினாள். அதற்கு அவன் பொய்ச்சத்தியம் செய்து தலைவியின் ஊடலைத் தணிக்க எண்ணுகின்றான். மேலும், தனது மகனைத் தழுவித் தலைவன் உறங்குகின்றான். தலைவன் இவ்வாறு செய்வதனால் தலைவி ஊடல் தணிந்து போகிறாள். இது தனக்குத் துன்பமே ஆகும் எனத் தலைவி எண்ணுகின்றாள். தலைவி கூற்றாக அமையும் இப்பாடலில், தலைவனின் ஊரானது நீர்நிலைகள் நிறைந்த வயலில் நெய்தல் மலருடன் ஆம்பல் மலரும் சேர்ந்து பூத்திருந்தன. அம்மலர்களைக் கொய்யச் சிலம்பு முதலான அணிகள் அணிந்த மகளிர் மிக்க ஆரவாரத்துடன் செல்கின்றனர். இவ்ஆரவாரத்தால் அங்கிருந்த ஆரல் மீனை உண்ணும் பறவைகள் அஞ்சி அருகே இருந்த மரக் கிளையில் ஏறின. அதனால், மீன் உண்ண முடியாத அம்மீன்கொத்திப் பறவை தனது குரலால் ஆரவாரம் செய்தது. அ∴து, ***'போரைச் செய்யுங் கண்ணினையுடைய மகளிர் தம்மை வருத்திய துன்பத்தை சுற்றத்தாருக்கு உரைப்பது போல் இருந்தது. இத்தகைய ஊரின் தலைவன் எக்காலமும் புதிய பரத்தையரை மணக்க விரும்புபவன். அதற்கேற்பவே திருமண நாளுக்குரிய நாட்களாகவே அமைகின்றது. தலைவனின் இவ்வொழுக்கம் தன்னை வருத்தமுறச் செய்கின்றது'*** எனத் தலைவி கூறுகின்றாள். இதனை

***"நீரார் செறுவில் நெய்தலொடு நீடிய***
***நேரித ழாம்பல் நிரையிதழ் கொண்மார்***
***சீரார் சேயிழை யொலிப்ப ஓடும்***
***ஓரை மகளி ரோதை வெரீஇயெழுந்***
***தார லார்கை யஞ்சிறைத் தொழுதி***

***உயர்ந்த பொங்கர் உயர்மரம் ஏறி***
***அமர்க்கண் மகளிர் அலப்பிய அந்நோய்***
***தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்றும்***
***உயர்ந்த போரின் ஒலிநல் லூரன்***
***புதுவோர்ப் புணர்தல் வெய்யனாயின்***
***வதுவை நாளால் வைகலும் அஃதியான்***
***நோமவன் தோழி நோவாய் நீயென***
***எற்பார்த் துறுவோய் கேள்இனித் தெற்றென"*** *(கலித்.75:1-13)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளில், ***"உயர்ந்தாரோடு இழிந்தாரையும் தத்தம் மனைகளினின்றுங் கொண்டு போந்து வருந்த விடுதற்கு விறலி முதலிய வாயிலோர் செல்கின்ற ஆரவாரத்தைக் கேட்டு வெருவி அவனை அரிதிற் பெற்றுழி நுகர்ந்து வருந்தியிருக்கின்ற சேரிப் பரத்தையர் பின்பு அவன் செலுத்துகின்ற வாயில்கட்கு எய்தாத இடங்களிலே புலந்திருந்து அவன் வாயில்கள் தம்மை வருத்தின் நோவை அவர் சுற்றத்தார்க்குப் பலகாலும் முறைப்பட்டுக் கூறும் ஊர்"*** [110] என உள்ளுறை உவமம் காட்டுகிறார் நச்சினார்க்கினியர்.

தலைவன் பரத்தமையை விடுத்துத் தலைவியைக் காண வரும் தலைவனை ஊடலின்றித் எதிர் கொள்க! எனத் தோழி கூறினாள். அதற்குத் தலைவி ***'குதிரைகள் பூட்டப்பட்ட தலைவனின் தேரில் வரும் விருந்தினரை வரவேற்று எதிர்கொள்வதால் தலைவனுடனான ஊடலை மறந்தேன் பரத்தையுடனான முயக்கத்தால் வாடிய மலருடன் வந்த தலைவன் உரைத்த பொய்யான சூளுக்கும் ஊடாமல் இருந்தேன். பரத்தமையை விட்டுத் தனது இல்லத்திற்கு வந்த தலைவன் தன் மகனைத் தழுவி உறங்குதலைக் கண்டும் ஊடுவதை மறந்தேன். பரத்தையரால் ஏற்பட்ட வடுக்களுடன் தனது இல்லத்திற்கு வந்த தலைவனின் புலவி கெடாதவாறு தான் ஊடாமல் துன்பம் அடைந்துள்ளேன்' எனப் புலம்புகிறாள். இதனின் தலைவி தலைவனின் இன்பத்திற்கும் மகிழ்ச்சிக்கும் மட்டுமே முக்கியத்துவம் தரும் குணம் கொண்ட இயல்பினள்'*** என்பது அறிய முடிகின்றது.

### *3.3.2.4 நெஞ்சே பகைவன்:*

பரத்தையர்ச் சேரியினின்று வந்த தலைவனிடம் தலைவி ஊடினாள். பின் ஊடல் தீர்ந்த பின், 'பொய்கையில் பூத்த ஒத்த இரு மொட்டுகளுக்கு நடுவே பூத்து மலர்திருந்தது தாமரை மலர். அவ்வழகிய தாமரை மலரை வயலில் மேய்ந்த பறவைகள் மோதின. அதனால் அம்மலர் சாய்ந்தது. சாய்ந்த தாமரை அம்மொட்டுகளின்மேல் தன் இதழ்களின் மேலிருந்த நீர்த்துளி விழுந்தது. இவை தலைவனுக்காகத் தலைவி அழுவது போல் அமைந்திருந்தன. இதனை,

***"இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பன் பிறிதியாதுந்***
***துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்***
***திருமுகம் இறைஞ்சினள் வீழ்பவற் கினைபவள்***
***அரிமதர் மழைக்கண்ணீர் அலர்முலைமேல் தெறிப்பபோல்***
***தகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற ஒசிந்தொல்கி***
***மிகநனி சேர்ந்தஅம் முகைமிசை அம்மலர்***
***அகவிதழ்த் தண்பனி உறைத்தரும் ஊரகேள்"****(கலித்.77:1-7)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளில், ***"அம்மலர் புள்ளொற்ற ஒல்கி அம்முகைகளின் மேலே 'தண்பனியுறைத்தரும் ஊர' என்றதனாற் சேரிப் பரத்தையர் நின் மனைவியரை இகழ்ந்து வந்து அவர் மனைதோறும் நின்னைத் தேடுகையினாலே அவர் வருந்தி அழுகின்ற ஊரனெனத் தலைவி புலந்து கூறினாள்"*** [111] என நச்சினார்க்கினியர் உரை கூறுகிறார்.இதனை உள்ளுறை உவமமாகக் காட்டுகிறார்.

அ.தட்சணாமூர்த்தி தமது உரையில் இவ்உள்ளுறைக்குப், ***"பிரிவான் முகம் கவிழ்ந்து அழுகின்றவளுடைய கண்ணீர் முகைமேல் வீழ்ந்தன. இதனை உவமையாக்கிக் கூறப்படும் பொருள் சிறப்பாக உள்ளது. இணைமுகை முலைகளுக்கும், தனிமலர் முகத்திற்கும், குளிர்ந்த நீர் கண்ணீருக்கும் பொருந்தி நின்றன. தலைவனுக்கு வேண்டிய பரத்தை பாணன் முதலியோர் வந்து கூறும் கொடுமைகள் தலைவியால் தாங்கரியவாயின. நெஞ்சு இவளிடத்து நில்லாமல் அவனிடத்தன்றோ உளது? அதனால் நெஞ்சை உடன் வாழ் பகை"*** [112] என்று தலைவி கூறுவதாக விளக்கம் தருகிறார்.

இவ்வுவமையால் தாமரை தலைவிக்கும் பறவைகள் பரத்தையருக்கும் பொருத்திக் கூறியமை அறிய முடிகின்றது. தலைவியின் கண்ணீருக்குத் தாமரை இதழின் குளிர்ந்த நீரும், அந்நீர் விழும் முலைகள் தாமரை மொட்டுகளுக்கும் உவமையாக்கப்பட்டமையும் அறிய முடிகின்றது. தலைவன் சேரிப்பரத்தையினின்று தன் இல்லத்திற்கு வந்தான். தலைவனுடனான ஊடல் தீர்ந்த தலைவி, தலைவனைக் காணாது வருந்தி அழுதமையும், அவ்வருத்தத்தால் தனதுயிரே போகும் நிலை உண்டாயிற்று; ஆயினும் தலைவனை ஊரார் பழித்துவிடக்கூடாது என்பதனால் தனது உயிரைத் தாங்கியிருந்தமையைக் கூறி ஊடல் தணிந்த வழி கூறினாள். மேலும், தலைவன் தன்னைப் பிரிந்திருந்த காலத்தில் அவளுடைய அழகும், எழிலும் குன்றி மேனியில் மாமையும் சுணங்கும் படர்ந்தன. அத்துன்பம் நீங்கும்படியாகத் தலைவன் தனது இல்லத்திற்கு வந்து தான் உயிர் பெறும்படி ***'நின் மனைவி'*** என்ற பெயர் தந்ததால் ஊடல் தணிந்தது. தலைவனின் வரவால் உறக்கமின்றிப் பசலை படர்ந்த தலைவியின் கண்களுக்கும் நோய் தீர்ந்தது. ஆதலால் ஊடல் தணிந்தது. தலைவனின் தேர் தனதில்லத்திற்கு வந்ததால் ஊடல் தணிந்தது. தலைவனைக் கண்ட பொழுதில் தனது நெஞ்சம் தனக்கே பகையாக மாறியமை உணர்ந்தவளாய் முன்பு பிரிந்த காலத்தில் தலைவனைக் கூடமாட்டேன் என்று கூறிய சொல் மறையும்படியாக ஊடல் தணிந்து நின்றாள் தலைவி. தலைவனை ஊரார் தூற்றக் கூடாது என்றே தலைவி எண்ணினாள். ஆதலால் தனது துன்பத்தை மறந்து தலைவி தலைவனுடன் கூடும் நிகழ்வைச் சங்கப்பாடலால் அறிய முடிகிறது.

### *3.3.2.5 பரத்தையிடமே வழியனுப்பும் தலைவியின் நிலை:*

தலைவன் இடமும் காலமும் அறிந்து இனிப் பரத்தையிடம் செல்லான் எனவும் தனதுடனே இருப்பான் எனவும் எண்ணினாள் தலைவி. ஆனால் தலைவனோ பரத்தையரிடம் செல்லப் புறப்பட்டான். அதனால், ஊடல் கொண்ட தலைவி தலைவனைப் ***'பரத்தையிடமே செல்க'*** எனக் கூறினாள். அப்பொழுது, பறவைகள் மிகுந்துள்ள வயலில் செந்நெல் விளைந்து முற்றின. அவை அவ்வயலில் வளர்ந்திருக்கும் தாமரையில் விழுந்திருந்தன. இவை, புகழ்பெற்ற அரங்கில் ஆடும் ஆடல்மகளிரின் தலையில் இருந்து நெற்றியில் விழும் அழகு வாய்ந்த ***'வயந்தகம்'*** (நெத்திச்சூடி) என்னும் அணிகலனைப்

போன்று உள்ளது எனத் தலைவனின் ஊரைக் கூறுகிறாள் தலைவி. இதன் வழியாகப் ***"பரத்தையர் சேரியிற் பரத்தையரிடத்தே பொலிவு பெற்ற நின்னை அவர்கள் தம் வசமாகக் கொள்கையினாலே அவர்களில் ஒருத்தி நின்னிடத்தே விடாமற் தங்கி நினக்கு அணியாய்த் தோன்றுகின்றாளென உள்ளுறை உவமம் கொள்க"*** [113] என்கிறார் நச்சினார்க்கினியர் கீழ்வரும் பாடலுக்கு

***"புள்ளிமிழ் அகல்வயல் ஒலிசெந்நெ லிடைபூத்த***
***முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்ததன்***
***வள்ளித ழுறநீடி வயங்கிய வொருகதிர்***
***அவைபுகழ் அரங்கின்மேல் ஆடுவாள் அணிநுதல்***
***வகைபெறச் செரீஇய வயந்தகம் போல்தோன்றுந்***
***தகைபெறு கழனியந் தண்டுறை ஊரகேள்"*** *(கலித்.79:1-6)*

மேலும் தலைவன் புதல்வனை விட்டு நீங்க மனமின்மை, பரத்தையர் நினைவை விடுவதற்கு முடியாமை என இருநிலை மனம் கொண்டவன். பரத்தையோ தன்னைத் தவிர்த்துத் தலைவனை யாரும் முயங்கக் கூடாது என எண்ணினாள். அதனால் சாந்தினால், பூணினால், கண்ணியால் எனப் பல அடையாளம் செய்து அனுப்பினாள். அதனைக் கண்ட தலைவி ஊடல் கொண்டு பரத்தையிடமே செல்க! எனக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

இவ்உள்ளுறை செந்நெல் தலைவனுக்கும் தாமரை பரத்தைக்கும் உவமையாதலை உணர்த்துகின்றது. தலைவனை வரைந்து கொண்ட சேரிப்பரத்தையருள் ஒருத்தி, அவன் தலைவியிடம் செல்லாதவாறு தம் வசமாக்கிக் கொண்டாள். தலைவனோ, தன் புதல்வனைக் காணும் பொருட்டுச் சேரியினின்று தனதில்லத்திற்கு வந்தான். பூப்போன்ற புதல்வனை அணைத்த தலைவனிடம், 'புதல்வனின் உமிழ்நீர் (எச்சில்) நின்னுடைய மார்பில் படுவதால் அந்நனைந்த மார்பைப் பரத்தை தழுவ விரும்பமாட்டாள். அவனது மார்பில் உள்ள பலவடமுத்து ஆரத்தைப் புதல்வன் பிடித்து இழுத்து அறுத்துவிட்டால் அம்மாலை இல்லாத மார்பைக் கண்ட பரத்தை அவனை தழுவாது கோபம் கொள்வாள். அவனது மார்பில் தழுவியதின் அடையாளமாய் பரத்தை சூட்டிய மாலையைப் புதல்வன் தன் கையால்

பிடித்து அறுப்பதால் சினம் கொண்ட பரத்தை தலைவனை வெறுத்துத் தழுவமாட்டாள். இவ்வாறு பொய்பலக் கூறித் தனது மகனைத் தழுவவேண்டா என்றும் தன்னிடமே தந்துவிட்டுச் சேரியிலுள்ள அப்பரத்தையிடமே செல்க என்று தலைவனிடம் சினம் கொண்டு தலைவி உரைத்தாள். இதனால் தலைவனின் பரத்தமையைத் தலைவி ஏற்கவில்லை என்பதோடு புதல்வனையும் தலைவன் அணைப்பதை விரும்பாதவளாயும் சங்க இலக்கியத் தலைவி காணப்படுதலை உணரமுடிகிறது.

கலித்தொகையின் மருதக்கலியில் வரும் உள்ளுறையால் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் வெளிப்படுகின்றது. இப்பாடல்களில் பரத்தையர் மலராகவும், பூவாகவும், பறவையாகவும் உவமிக்கப்படுவதைக் காணமுடிகின்றது. தலைவனைச் செந்நெல்லிற்கும், வண்டிற்கும் உவமையாக்கியமையும் தலைவியைத் தாமரைக்கு உவமித்தமையையும் காணமுடிகின்றது.

### *3.4 தோழி கூற்றில் பரத்தையர் இயல்பு:*

தலைவியின் களவு வாழ்க்கையைக் கற்பு வாழ்க்கைக்கு எடுத்துச் செல்லவும், கற்பில் தலைவியின் துன்பக் காலத்தில் ஆறுதல் கூறி உடன் நிற்பவளாகவும் சங்க இலக்கியத்தில் உலா வருபவள் தோழியே ஆவாள். ***“தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும், ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் ‘தோழி’ என்னும் ஆள் (பாத்திரம்) இன்றியமையாதவள்”*** [114] என்று சங்க அகப்பாடல்களில் தோழியின் இன்றியமையாமையைக் குறித்து வ.சுப.மாணிக்கம் குறிப்பிடுகிறார். ஆதலால், சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி என்னும் தலைமைப் பாத்திரங்களுக்கு இணையாகவும் படைக்கப்பட்டவளே இத்தோழி ஆவாள்.

ஐங்குறுநூற்றில் வேட்கைப்பத்து, கள்வன் பத்து, புலவிப்பத்து, தோழிக்கூற்றுப்பத்து என வரும் பாடல்களிலும், கலித்தொகைப் பாடலிலும் வரும் தோழியின் கூற்றில் அமைந்துள்ள பரத்தையர் பற்றிய செய்திகளில் காணப்படும் உள்ளுறை பற்றி இப்பகுதி எடுத்துரைக்கின்றது.

### *3.4.1 தலைவனின் நலன் விரும்பும் தோழி:*

பரத்தையிடம் இருந்த தலைவன் நீண்ட நாளுக்குப்பின் அவளை விடுத்துத் தன் இல்லத்திற்கு வந்தான். ஊடல் தணித்துத் தலைவியுடன் கூடினான் தலைவன். பின் தோழியிடம் தான் தலைவியை விட்டுப் பிரிந்திருந்த காலத்தில் தலைவி எண்ணியது யாது? என வினாவினான். அதற்குத் தோழி, '***தாய்***' போன்ற தன் தலைவியானவள் ***'சேர அரசும் நாடும் சிறக்க!'*** எனக் கூறினாள். தலைவனும் பாணனும் சிறந்து வாழ வேண்டும் என வேண்டித் தான் நின்றதாகக் கூறினாள். அப்பொழுது, தலைவன் தலைவியைப் '***பிரிவு***' என்ற தீங்கைச் செய்தாலும் அத்தலைவனின் நலனை மட்டுமே தான் விரும்பியதாகத் தோழி கூறினாள். இதனை,

***"நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்***
***யாண ரூரன் வாழ்க!"*** *(ஐங்.1:4-5)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவற்றிற்கு, "***நீ ஒழுகிய ஒழுக்கத்தால் நினக்கும், நின்னொழுக்கத்திற்குத் துணையான பாணனுக்கும் தீங்குவருமென்று அஞ்சி, 'யாணரூரன் வாழ்க பாணனும் வாழ்க' என விரும்பினோம் யாங்கள்"*** [115] என்று பழைய உரை உரைக்கின்றது ஓளவை. சு.துரைசாமிப்பிள்ளை தமது உரையில், ***"காஞ்சியின் பூவும், மீனின் சினையும் ஒப்ப விளையும் ஊரன் என்றதனால் குலமகளிரையும் பொது மகளிரையும் ஒப்பக் கருதுகின்றான்"*** [116] என உள்ளுறை உவமமாகக் கூறுகின்றார்.

தலைவனின் ஊர் காஞ்சி மலரின் நறுமணமும் சிறுமீனின் புலால் நாற்றமும் உடையது. அதுபோன்று மாண்புடைய தலைவியையும் இழிந்த பரத்தையையும் ஒன்றாக மதித்துத் தலைவன் ஒழுகுகின்றான் என்பதைத் தோழி வாயிலாகப் புலப்படுத்துகின்றார் ஓரம்போகியார். தலைவி, தலைவனின் தீயொழுக்கத்தால் அவனுக்கு எத்தீங்கும் நேரக் கூடாது என அஞ்சியது கண்ட தோழி தலைவியின் துயர் நீங்க வேண்டித் தலைவனும் பாணனும் குறைவின்றி வாழ வேண்டும் என வேண்டினாள். மேலும் அச்சங்கச் சமூகத்தில் தவறு செய்பவரை இறைவன் தண்டிப்பான் என்ற நம்பிக்கை இருந்தமை பெறப்படுகிறது. இதன் காரணமாகத் தலைவியும் தலைவனின் தீய

பரத்தையொழுக்கத்திற்குத் தண்டனை கிடைக்குமோ என அஞ்சியது புலப்படுகிறது. மேலும், இறைவன் தண்டிப்பான் என்று தலைவி வருந்தினாலும், தலைவன் பரத்தையொழுக்கம் மேற்கொண்டு இன்பம் அடையவே எண்ணினான் என்பதும் அறிய முடிகின்றது. இப்பாடல் தலைவனின் கொடுமையையும் தலைவியின் உயர் பண்பினையும் காட்டுகின்றது. தலைவனை ஊரலர் தூற்றும் என அஞ்சித் தலைவி அவன் கொடுமையை மறைத்து ஒழுகினமையும் அறிய முடிகிறது. ஒட்டுமொத்தமாக இது தலைவியின் சகிப்புத் தன்மையை எடுத்துக் காட்டுகின்றது.

### *3.4.2 பிறவிதோறும் சேர்ந்திருத்தலையே விரும்பும் தோழி:*

தலைவன் பரத்தையை விடுத்துத் தலைவிபால் சென்றான். தலைவியோ இல்லறமே நினைத்து ஒழுகினாள். தலைவன் பரத்தையுடன் தங்கியதால், தலைவிமேல் அவன் கொண்டிருந்த அன்பு குறைவது கண்டாள் தோழி. தலைவி அவினி அரசரும் நாடும் செழிக்க வேண்டினாள். தோழி, தலைவன் தலைவிபால் கொண்ட அன்பு மேலோங்கவும், அவ்அன்பு வரும் பிறவிகளிலும் கிடைக்க வேண்டும் என்றும் வேண்டினாள் என்பதனை,

***"பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்குந்***
***தண்டுறை யூரன் கேண்மை***
***வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே"*** *(ஐங்.2:4-6)*

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளுக்குப் பழைய உரை, ***"சிறப்புடைய கருங்குவளையுடனே சிறப்பில்லாத நெய்தல் நிகர்க்கும் ஊரன் என்றது குலமகளிருடனே பொதுமகளிர் இகழும் ஊரன்"***[116] என்று எடுத்துரைக்கின்றது.

***"பலவாகிய இதழ்களாற் சிறப்புடைய நீலத்தோடு நெய்தல் நிகர்க்கு மூரன் என்றதனால் குலமகளிரோடு பொதுமகளிர் நிகர்க்கு முகத்தால் இகலி யொழுகுவர்"*** [118] என உள்ளுறை கொள்கவென ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கூறுகின்றார்.

இவ்உள்ளுறையை அ.தட்சிணாமூர்த்தி தமது உரையில், ***"நற்பண்பு மிக்க தலைவியின் மாண்புணராது வறிய காம இன்பம் ஒன்றனையே கருதி***

***இழிந்த பரத்தையைத் தலைவன் சமமாக மதித்தொழுகுதலைச் சுட்டியதாம்"***[119] என்று கூறுகின்றார்.

தலைவன் பரத்தையுடனே பலகாலம் தங்கியிருந்தான். இதனால் தலைவன் தலைவிபால் காட்டுகின்ற அன்பு குறைந்ததாகத் தோழி எண்ணினாள். பரத்தையை விட்டுத் தலைவிபால் திரும்பி வந்த தலைவன், தான் பிரிந்திருந்த காலத்தில் எண்ணியது யாது? எனத் தலைவியிடம் வினாவினான். அதற்குத் தோழி, 'தலைவி அரசன் அவினி மற்றும் வயலும் அறமும் சிறக்க!, வளம் பெருக! என வேண்டி ஒழுகினாள். தலைவி நாட்டின் நல்லறத்தை விரும்பினாள். தலைவனின் அன்பு வரும் பிறவிகளிலும் தம் தலைவிக்குக் கிடைக்க தான் வேண்டியதாகத் தோழி கூறினாள். மேலும், குவளை மலருடன் நெய்தலும் சேர்ந்து பூத்திருக்கும் ஊரன் என்று தலைவனைக் கூறுவதன் மூலம் தலைவன் தலைவியைப் போன்றே பரத்தையுடனும் ஒழுகுகின்றான் என்று தோழி இடித்துரைப்பதை அறியமுடிகின்றது.

### *3.4.3 தலைவனை மனைவாழ்க்கைகுத் திரும்புமாறு அறிவுறுத்தும் தோழி:*

பரத்தையிடம் இருந்து மீண்டும் தலைவியிடம் வந்தான் தலைவன். அவன் தலைவியிடம், தாம் பிரிந்திருந்த காலத்தில் எண்ணிய எண்ணத்தைக் கூறுக! என்று கேட்டான். அதற்குத் தோழி, தலைவி நாட்டின் நல்லறத்தையும், இல்லறத்தையும் நினைத்து ஒழுகினாள். தாம், ***'தலைவன் புறத்தொழுக்கம் தவிர்த்து, மனையிலே தங்கித் தலைவியிடம் அன்பு பொழிய வேண்டும்'*** என வேண்டி நின்றதாகக் கூறினாள். இதனை,

***"வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்***
***பூக்கஞ லூரன் தன்மனை***
***வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே"*** *(ஐங்.3:4-6)*

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. இவ்வடிகளில், ***"மேல் விளைதற்கு வித்திய வுழவர் முன்பு விளைந்த செறுவின் நெல்லொடு பெயருமென்றது பின்வரும் பரத்தையர்க்கு வருவாய் பண்ணி அக்காலத்து ஊராகிய பரத்தையரோடு இன்பம் நுகர்வான்"***[120] ***என்ற*** பழைய உரை

உள்ளுறைவைத்துக் கூறுகின்றது. ***“ஊரன் தன்மனை பொலிக! என்னும் அடியால் தலைவனின் பரத்தமை யொழுக்கத்தைத் தலைவி விரும்பவில்லை”***[121] என்பதும் புலனாகின்றது.

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தமது உரையில், ***“விளைவு கருதி வித்திய உழவர் விளைந்து முதிர்ந்துள்ள நெல்லைக் கொண்டு பெயரும் ஊரன் என்றதனால் தலைமகன் பின்வரும் பரத்தையர்க்கு வேண்டுவன புரிந்து, அக்காலத்து நுகர்ச்சிக்கு அமைந்துள்ள பரத்தையரைக் கூடி ஒழுகுகின்றான்”*** [122] என உள்ளுறையாகக் கூறுகிறார்.

***“தமிழ்ச் சமுதாயம் பெண்குலத்தைப் பொறுமைக் குலமாகப் பயிற்றுகின்றது. ஆதலின் கணவனது பரத்தமைக்காக மனைவி அவனை வெறுத்து ஒதுக்காள். பிற எண்ணம் தன்னெஞ்சிற் புகவிடாள் அவன் திருந்துமளவு நன்னயஞ் செய்வாள்”***[123] என்று வ.சுப.மாணிக்கம் இப்பாடலில் வரும் தலைவியின் மாண்பைத் தோழி வாயிலாக எடுத்துரைக்கிறார்.

தலைவன் பரத்தையொழுக்கம் மேற்கொண்டு ஒழுகினான். பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த தலைவன் தலைவியுடன் கூடி மகிழ்ந்தான். இது போன்றே தலைவியின் இல்லத்தில் தலைவன் தங்கி அன்பு தர வேண்டும் என்று தோழி வேண்டினாள். தலைவனின் ஊரில் புதிய நெல்விதைகளைத் தூவினர். முன்னம் விளைந்த நெல்லை அறுவடை செய்து மனைக்குக் கொண்டு சென்றனர். இது தலைவன் முன்பு நுகர்ந்த பரத்தையை விடுத்துப் புதுப் பரத்தையை நாடினான் என்பதைக் குறிக்கின்றது. தலைவன் இவ்வாறு பல இளம் பரத்தையையே நாடுவதை விடுத்து இல்லற வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்று தோழி விரும்புவது புலப்படுகிறது.

தலைவனின் புறத்தொழுக்கத்தை விரும்பாத தோழி, ‘தலைவனின் மார்பு பொது நிலம்’ போல் ஆகிவிடக் கூடாது என வேண்டினாள். பொது நிலத்தில் விளையும் நெல் காய்த்துப் பயன்தரும். விளையும் கரும்பு பூப்பூத்தாலும் பயன்தராதது போன்றது தலைவன் தலைவியையும் பரத்தையையும் ஒப்பக் கருதி ஒழுகும் ஒழுக்கம் என்பதைப்

*“பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்*
*கழனி யூரன் மார்பு*
*பழன மாகற்க வெனவேட் டேமே”* (ஐங்.4:3-6)

என்ற பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன. ***“பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையும் உடைய ஊரன் என்றது ஈன்று பண்படாப் பொதுமகளிரையும், மகப்பயந்து பயன்படும் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான்.”*** [124] என்று உரைக்கின்றது பழைய உரை. ***“தலைமகள் தான் கூடி இன்புறும் தலைவன் மார்பினைப் பரத்தையர் நோக்கினும், பொறாது புலக்கும் பான்மையளாகலினாலும், உள்ளுறையால் தலைமகனது புறத்தொழுக்கத்தைக் கூறுகின்றாளா கலினாலும், ‘ஊரன் மார்பு பழனம் ஆகற்க என வேட்டேம்”*** என்றாள்.

***“பெண்இயலார் எல்லாரும் கண்ணின் பொதுவுண்பர்***
***நண்ணேன் பரத்தநின் மார்பு”*** (குறள்.1311)

***என்ற குறள்வழி வள்ளுவர் தலைமகளின் புலவிப் பான்மை உணர்த்துவர். “உள்ளுறையால் பரத்தையின் பாடின்மை கூறலின், இதுவும் முன்னையது போல, ‘நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக், காத்த தன்மையிற் கண்ணின்று’ (தொல்.பொருள்:156) பெயர்த்துக் கூறியது”*** [125] என ஔவை துரைச்சாமி பிள்ளை விளக்கம் தருகின்றார். மேலும்,

“***பூத்துப் பயன்படாக் கரும்பினையும், காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரன்’*** **என்றது மகப்பய்ந்து பயன்படும் குலமகளிரையும், அ்.தில்லாத பொது மகளிரையும் ஒப்பக் கருதி ஒழுகுவான் என்றாளாம். பொதுமகளிர் ஈன்று பயன்படா இயல்பினர்”**[126] எனத் தலைவிக்கே மகப்பேறு சிறப்பு உள்ளது என்று எடுத்துரைப்பதனை அறிய முடிகின்றது.

“***பூத்துப் பயன்படாத கரும்பும் காய்த்துப் பயன்படும் நெல்லும் ஒருங்கேயுடைய கழனி என்றது மகப்பெற்றுச் சிறவாத வறிய காமவின்பமே நல்கும் பரத்தையரையும், மகப்பேறும் இம்மை மறுமை வீடு என்னும் முப்பெரும் பயனும் நல்கும் குலமகளாகிய தலைவியையும் சமமாகக் கருதி ஒழுகாநின்றனை என்பது உள்ளுறை பொருளாம்”***[127]

"***பூத்தும் காய்க்காத கரும்பும் ஒன்றை ஊன்றினால் பலவாகக் காய்க்கும் நெல்லும் விளையும், ஊர்ப்பொது நிலம் போல, வயல்கள் நிறைந்த ஊரனுடைய மார்பு ஆதல் கூடாது என்று தோழி விரும்புகிறாள். கரும்பும் பூக்கும் நெல்லும் பூக்கும் ஆனால் கரும்பு காய்த்துத், தன் பரம்பரையை வளர்க்காது நெல் பூத்தும் காய்த்தும் தன் வழிமுறையை வளர்க்கும். அதுபோலப் பூத்தாலும் பரத்தை மகப் பெற்றுக் குடியை வளர்க்க மாட்டாள். தலைவி பிள்ளைபெற்று வளர்த்துக் குடியை வளரச் செய்வாள். இவ்வுள்ளுறை ஓரம்போகியாரின் உலகியல் அறிவையும் உளவியல் அறிவையும் ஒருசேரக் காட்டுகிறது"*** [128]

***"குடிக்கு விளக்காகும் குதலைச் செவ்வாயுடைய மக்களையீன்றுதரும் கற்புடைய மாதரையும் அச்சிறப்பில்லாத விலைப் பெண்டிரையும் ஒப்பக் கருதி வாழ்கிறான் தலைவன் என்ற பொருளிலாம். பரத்தையர் குலமகளிர்க்கு ஒப்பாகார் என்பது, 'அலரும், பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து, நன்றி சான்ற கற்பொடு எம்பாடாதல் அதனினும் அரிதே' (நற்.330) என்பதால் அறியப்படும்"*** [129] என்று அ.தட்சணாமூர்த்தி உள்ளுறையைச் சான்றுடன் கூறுகிறார்.

இல்லக்கிழத்தியின் கடமைகளை, ***"மகப் பேற்றுக்குக் குடும்பவழியை அடையாது காக்கின்றாள் தலைவி என்பது, 'காய்த்த நெல்' என்னும் கருப் பொருளாற் பெறப்படும். விருந்தினர்களை ஏற்று இல்லறம் செய்வான் என்பது ஆம்பல் வண்டின் பசியைப் போக்கும் என்ற புனைவாற் பெறலாம். கடமைகள் என்பன பரத்தையர்க்கு இல என்பதனைச் சுட்டித் தலைவனை இடித்துரைப்பது இவ்வுள்ளுறையின் நோக்கம்"*** [130] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

தலைவன் பரத்தமையொழுக்கம் ஒழுகினான். இவ்வொழுக்கம் நல்லரசு புரியும் ஆதன் அவினி ஆளும் நாட்டில் வாழும் தலைவனுக்கு அழகல்ல என்று கூறுகிறாள் தோழி. மேலும், தலைவன் பரத்தமை விடுத்து இல்லறம் ஒழுகி மக்கள் செல்வம் பெற்று இன்புற வேண்டும் என்று அவள் இறைவனிடம் வேண்டினாள். தலைவன் நல்லறம் ஒழுகும் குலமகளிருக்கே உரியவனாவான். பார்ப்பார் வேள்வி வளர்த்து வேதம் ஓதுவதால் நாட்டில்

மழையும் வளமும் பெருகும் என்பது பண்டையோர் நம்பிக்கையாகும். எனவே தலைவி நாட்டின் நலனுக்காக வேண்டியது புலப்படுகின்றது. மேலும், மன்னன் நல்லறம் புரியாது செங்கோல் தவறினால் நாடு அழியும். அது போன்றே தலைவன் புறமகளிரோடு ஒழுகுவதால் இல்லறம் கெடும் என்று தோழி கூறுவதை எடுத்துரைக்கின்றது இப்பாடல்

பரத்தமை விடுத்து வந்த தலைவன் தலைவியுடன் கூடி மகிழ்ந்தான். ***'பசிப்பிணி'*** ஒழிக! என வேண்டிய தலைவியையும், ***'தலைவன் பிற பெண்டிர் (பரத்தை) மனை சேராது தனது இல்லிலே இருத்தல் வேண்டும்'*** என விரும்பிய தோழியையும் கீழ்வரும் பாடல் புலப்படுத்துகின்றது.

***"முதலைப் போத்து முழுமீ னாருந்***
***தண்டுறை யூரன் றேரெம்***
***முன்கடை நிற்க வெனவேட் டேமே"*** *(ஐங்.5:3-6)*

இதனுள், ***"முதலைப் போத்து.....ஊரன்" என்றது ஒருங்கு வாழ்வாரைப் பழைமை நோக்காது உயிர் கவர்வான் என்று உள்ளுறைக் காட்டுகின்றது. பழைய உரை. இவ் உரைக்குத், "துறைக்கண் வாழும் முதலைப்போத்து உடனுறையும் முழுமீன்களின் முதுமை கருதாது உண்டொழுகும் ஊரன் என்றதனால், தலைமகன் தன்மனைக்கண் தன்னோடு உடனுறையும் தலைமகளின் தலைமை கருதாது அவள் நலம் கெடுக்கின்றான்"*** [131] எனத் துனியுறு கிளவி தோன்ற உள்ளுறுத்துக் கூறுகிறார்.

பசியும் பிணியும் நல்வாழ்வைச் சீர்குலைக்கும் ஆதலால் அப்பசிப் பிணி இல்லாது மக்கள் வாழ வேண்டும் என்று இல்லறம் வேண்டி வணங்குபவள் தலைவி. முதலைகள் வாழும் நீரில் மிகப் பெரிய முதிர்ந்த மீனும் வாழ்கின்றது. அவற்றை அம்முதலை உண்டு வாழ்கின்றது என்று தோழி கூறுவதால் தலைவனின் இயல்பை அறிய முடிகின்றது.

***"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்***
***சேராது இயல்வது நாடு"*** *(குறள்.734)*

என்று வள்ளுவரும்,

***"பசியும் பிணியும் பகையும் நீங்கி***
***வசியும் வளனும் சுரக்க"*** *(மணி.1:10-11)*

என்று மணிமேகலையும் ***'பசியும் நோயும் இன்றி வாழும் சிறப்பை'*** எடுத்துரைப்பதை அறியமுடிகின்றது.

***"தலைவன் புறத்தொழுக்கத்தில் திரிந்தபோது தலைவி மிகப் பொறுமையோடு இல்லறச் சிந்தனை உடையவளாக இருந்தாள் எனவும், தலைவன் அறிவுவந்து மனைவாழ்க்கைக்குத் திரும்ப வேண்டும் எனத் தோழியர் தொழுதனர் எனவும் ஐங்குறுநூற்றின் முதலைந்து பாடல்கள் இயம்புகின்றன"*** [132]

தலைவன் நீண்ட காலம் பரத்தையின் இல்லத்திலே தங்கினான். அதனால் தலைவி வருத்தமும் நோயும் கொண்டவளானாள். அவளின் வருத்தம் நீங்கத் தோழி இறைவனிடம் வேண்டி நின்றாள். பெரிய ஆழமான நீர் நிலையில் வாழும் முதலை அந்நீர் நிலையிலே உள்ள முதிர்ந்த பெரிய மீனை உண்ணும் இயல்புடையது. அதுபோலத் தலைவன் முதிர்ந்த பரத்தை எனினும் அவளுடனும் இன்பம் நுகர்கின்றான். இவ்வாறு பரத்தமை ஒழுகுதல் தகாது என்றும் தலைவிக்கு இது நோயாக மாறும் என்றும் கூறுகிறாள் தோழி. தலைவன் தன்னோடு வாழும் தலைவியின்மீது அன்பும் இரக்கமும் இன்றிப் பரத்தையரோடு ஒழுகுவது அவளுக்குத் துன்பந்தருகின்றது. இது தலைவன் செய்யும் கொடுமையைப் புலப்படுத்துகின்றது. தலைவனின் இயல்பாகவே ஓரம்போகியார் இதனைக் காட்டுவதைக் காண முடிகின்றது.

### *3.4.4 பரத்தையிற் பிரிந்த தலைவனின் அன்பு:*

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் இனிப் பரத்தையோடு இணையேன் என்று தலைவியிடம் தெளிவுப்படக் கூறினான். ஆயினும், தலைவியின் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது. அதனைக் கண்ட தோழி

***"முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்***
***புள்ளிக் கள்வ னாம்ப லறுக்கும்***
***தண்டுறை யூரன் றெளிப்பவும்***
***உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்"*** *(ஐங்.21)*

என்று தலைவியிடம் வினா எழுப்புகிறாள். இப்பாடலுக்குத் ***"தனக்கு உரித்தாகிய இல்லின்கண் ஒழுகிப் பரத்தையரோடு தொடர்ச்சி அறுப்பான்"*** [133] என்று பழைய உரை எடுத்துரைக்கின்றது.

***"அடைகரை கண் வாழும் அலவன் ஆம்பற்றாளை அறுக்கும் ஊரன் என்றதனால், தலைவன் தனக்குரித்தாகிய இல்லின்கண் ஒழுகிப் பரத்தையர் தொடர்ச்சி அறுப்பான்"*** [134] என உள்ளுறை கொள்கவென ஔவை சு.துரைசாமிப்பிள்ளை விளக்குகிறார்.

"***பழைய உரை கூறும் உள்ளுறையையே உரைக்கும் பொ.வே.சோமசுந்தரனார் தலைவன் தலைவி மேல் கொண்ட அன்புடைமையை எடுத்துக் காட்டுகிறார்"*** [135]

***"நண்டு ஆம்பலின் தண்டைத் தன் கூரிய உகிரால் அறுத்துத் தனக்குரியதான அடைகரையின்கண் வாழுமாறு போன்றே தலைவனும் பரத்தையர் தொடர்பினை விட்டொழித்துத் தன் இல்லின்கண் என்றும் பிரியாது வாழ்வான்"*** [136] என்பதனை இவ்வுள்ளுறை எடுத்துரைப்பதாக அ.தட்சணாமூர்த்தி விளக்குகிறார்.

தலைவன் பரத்தையிடமிருந்து பிரிந்து தன்இல் வந்தான். தலைவியுடன் கூடி மகிழ்தான். இனிப் பரத்தையருடனான தொடர்பை அறுப்பேன் என உறுதியளித்தான். தனது இருப்பிடத்தைத் தனக்குரியதாக்கிக் கொள்ள அங்கிருந்த ஆம்பல் தண்டினை அறுக்கும் நண்டைப் போலவே தலைவனும் பரத்தையர் தொடர்பை அறுப்பதாகக் கூறுகின்றான். இங்கு நண்டு தலைவனுக்கும், நீர்நிலை தனதில்லமாகவும், ஆம்பல் பரத்தையராகவும் உவமிக்கப்படுவதை அறிய முடிகின்றது. தலைவன் தலைவி மேல் எக்காலத்தும் அன்பும் காதலும் கொண்ட நற்குணத்தான் என்று கூறுவதை இப்பாடல் வழியாக அறிய முடிகின்றது.

தலைவன் பரத்தையருள்ளும் ஒருத்தியை விட்டு ஒருத்தி என ஒழுகி வந்தான். அப்பரத்தையையும் விட்டுத் தனது இல்லத்திற்குத் திரும்பி வந்தான். தலைவனுக்காக வாயில் வேண்டிய பாணனிடம் ***'தற்போது தலைவியின் நலத்தை நுகர்ந்து பின் அத்தலைவியையும் துறந்து நம்மை வாடச்செய்யும்***

***பண்புடையவன் தலைவன்'*** என்று தோழி கூறித் தலைவனுக்கு வாயில் மறுத்தாள் இதனைத்

***"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு***
***பிள்ளை தின்னு முதலைத் தவனூர்***
***எய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்"*** *(ஐங்.24:1-3)*

என உள்ளுறைவழி ஓரம்போகியார் எடுத்துரைக்கிறார்.

***"தாய் சாவப் பிறக்கும் புள்ளிக் கள்வனையும், பிள்ளை தின்னும் முதலையினையும் உடைய ஊர் என்றதனால், முயங்கிய மகளிர் தொன்னலம் கெடுக்கும் அன்பின்மையும், இனி முயங்கும் மகளிர் நலம் நுகர்ந்து பிரியும் அருளின்மையும் உடையவன் என்றாளாம். இது தலைமகன் கொடுமை உணர்த்திய துனியுறு கிளவி"*** [137] என்று பழைய உரைக்காரரும் ஔவை. சு.துரைசாமிப்பிள்ளையும் உள்ளுறையாக எடுத்துரைக்கின்றனர்.

***"நண்டு, முதலை போன்ற விலங்குப் பண்புகளை நம் தலைவன் கொண்டானோ?"*** [138] என்று கேட்பது போல் அமைகிறது இப்பாடல் என விளக்குகிறார் ச.வே.சுப்பிரமணியன்

***"நம்முடைய பழைய பெண்மை நலம் முற்றும் அழியும்படி கூறும் பொய்யையும், தனக்குப் பிறர் செய்த நன்மை சிதையும்படி தோன்றும் அன்பின்மையையும் உடையவன் தலைவன்"*** [139] என்ற உள்ளுறைப் பொருள் தோன்றுவதாக அ.தட்சணாமூர்த்தி எடுத்துரைக்கிறார்.

தலைவன் ஒரு பரத்தையை விடுத்து மற்றொரு பரத்தையையும் நுகர்கின்றான். இது தலைவிக்குத் துன்பத்தை ஏற்படுத்துகின்றது. தலைவன் பரத்தையை விடுத்துத் தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான். தன் குழந்தைகளை ஈன்றவுடன் இறக்கும் நண்டைப் போலவும் தான் ஈன்ற பிள்ளைகளைத் தானே உண்ணும் முதலையைப் போலவும் இருப்பதாகத் தோழி வாயிலாகத் தலைவனிடம் கூறுகின்றாள். அதாவது, தான் ஈன்ற பிள்ளை உயிரைக் காக்கும் நண்டு போன்ற அத்தலைவனின் வரவால் தலைவிக்கு இன்பமும் பரத்தைக்குத் துன்பமும் ஏற்படுத்தும் என்பது புலனாகின்றது. முதலையின் செயலானது தலைவன் நுகர்ந்துபின் பிரிதலால் தலைவிக்கு ஏற்படும் துன்பத்தையும் சுட்டிக் காட்டுவதாக அமைகின்றது.

இதனின் தலைவன் காமம் மிக்கவன் என்பதும் உணர முடிகின்றது. தலைவிக்குத் துன்பமே தருபவன் என்பதும் அவன் தலைவிக்குச் செய்யும் கொடுமையையும் இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

***3.4.5 தலைவனின் கடமையுணர்வு:***

தலைவனின் புறத்தொழுக்கத்தை எண்ணி வருந்தும் தலைவிக்குத் தலைவன் புறத்தொழுக்கம் என்னும் தவறைச் செய்யவில்லை. பொருளீட்டுதலுக்காக உழைத்த உழைப்பின் நேரம் காரணமாகவே இல்லம் வரத் தாமதமாயிற்று. ஆதலால் வருத்தம் விடுக! என்று தோழி உரைத்தாள். இதனைச்

***“செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு கள்வன்***
***தண்ணக மண்ணளைச் செய்து மூரற்***
***கெல்வளை நெகிழச் சாஅய்***
***அல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்”*** *(ஐங்.27)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளால் தலைவன் உழைப்பின் காரணமாகவே காலம் தாழ்த்தி வருகின்றான் என்பதை அறிய முடிகின்றது. ***“அலவன் நெற்கதிரைக் கொண்டு மண்ணளைக்குட் செல்லும் என்றதனால் தலைமகன் செய்வினைப் பயன் கொண்டு விரைய மீளுவன்”***[140] என உள்ளுறைப் பொருளாக ஔவை துரைச்சாமி எடுத்துரைக்கிறார். இதனை நச்சினார்க்கினியர், ***“அடங்க ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை, அடங்கக் காட்டுதற் பொருளின்கண் நிகழும் தோழி”***[141] என்கிறார்.

***“நண்டு செந்நெற்கதிரைக் கொண்டு தன் மண்ணாலான குளிர்ந்த வளையத்திற்குச் செல்லும் ஊரன் என்றது தலைவன் தன் முயற்சியாற் பொருளீட்டி அது கொண்டு தன் மனை புகுவான்”***[142] என் நச்சினார்க்கினியர் கூறுவதாக அ.தட்சிணாமூர்த்தி எடுத்துரைக்கிறார்.

தலைவன் பரத்தமையொழுக்கம் இன்றி வாழ்கின்றவன். அவன் வினை முடிந்து இல்லத்திற்கு வர காலதாமதமாயிற்று. அதனால் தலைவன் புற ஒழுக்கம் கொண்டவனோ? என அஞ்சினாள் தலைவி. அவ்வச்சத்தைத் தோழி போக்குகின்றாள். இதனின்று தலைவன் நல் ஒழுக்கம் கொண்டவனாகவும், வினையே ஆடவர்க்கு உயிரே என்று கூற்றின்படி

வாழ்வதையும் அறிய முடிகின்றது. தலைவன் வரவு தாமதமானதால் தலைவனின் ஒழுக்கம் பற்றி தலைவியிடம் அச்சம் பற்றிக் கொள்வதை அறிய முடிகிறது. அக்காலத்தில் பரத்தமை ஒழுக்கம் மிக்கிருந்தமையை இதனால் அறியமுடிகின்றது.

### *3.4.6 மனையாளின் துயரம் நீக்கும் தலைவன்:*

தலைவன் பலநாள் பரத்தையின் மனையிலேயே தங்கினான். பின் தன் மனைக்கு வந்த தலைவனிடம் தோழி, ***'பெரிய பொய்கையில் வாழும் இளம் பார்ப்புகளும், ஆமையும் தன் தாயின் முகம் பார்த்தும் வாழ்வது போல் தலைவியும் நின் முகம் காணின் உயிர் பெற்று வாழ்வாள்'*** எனக் கூறுவதை

***"தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்புத்***
***தாய் முக நோக்கி வளர்ந்திசி னாஅங்***
***கதுவே யையநின் மார்பே"*** *(ஐங்.44:1-3)*

என்னும் அடிகளால் எடுத்துரைக்கப்படுகின்றன. இவ்வடிகளுக்கு, ***"நின் மார்பாற் கொள்ளும் பயனின்றிக் காட்சி எய்தவும் பெறுகின்றிலள்"*** [143] எனப் புலந்து தோழிகூறியதாகப் பழைய உரை காட்டுகின்றது.

***"தீம்பெரும் பொய்கை என்றது தலைவன் இருந்து இல்லறம் நிகழ்த்துதற்கு உரிய இல்லத்திற்கு உவமை"***[144] என்கிறார் பொ.வே.சோமசுந்தரம்.

***"ஆமையின் இளம்பார்ப்பு தலைமகள், தாய்முகம் தலைமகன் மார்பு. நின் மார்பாற் பெறும் பயனும் இன்றிக் காட்சியும் பெறுகின்றிலள் என்பது"*** [145] என ஈழத்து உரையாசிரியரின் கூற்றை அ.தட்சிணாமூர்த்தி எடுத்துரை துரைக்கிறார்.

***"தலைவன் தன் மார்பைத் தராவிட்டாலும் தலைவனின் மார்பை எண்ணியே உயிர்வாழும் தலைவியின் நிலைக்கு உவமையாகக் கூறுகிறார். இந்த உவமை ஓரம்போகியாரின் இயற்கையை ஆழ்ந்து நோக்கிய உலகியல் அறிவையும், காதலர்களின் உளவியல் அறிவையும் காட்டும்"***[146].

மனைக்கண் வந்த தலைவனுக்குச் ***“சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும்”*** *(தொல்.பொருள்:147:5)* என்ற அடிவழித்தோழி கூறியது.

தலைவன் பரத்தை மனையில் இருந்து திரும்பி வந்தான். அப்பரத்தையொழுக்கத்தைத் தலைவி விரும்பவில்லை. தலைவியின் விருப்பத்தைத் தோழி ***‘இல்லறத்தில் வாழ்தலே சிறப்பு’*** என எடுத்துரைக்கிறாள். இப்பாடலால் தலைவன் தன் மனையிலே தங்குதல் வேண்டும் எனத் தலைவி விரும்புகின்றாள். மேலும் தன் மனையாளின் துயரைப் போக்குதல் தலைவனின் கடமை என்பதையும் உணர்த்துகின்றாள். தலைவன் தாயன்பு கொண்டவனாகவும் இருத்தல் வேண்டும் என்று கருதுவது அறிய முடிகின்றது.

***3.4.7 பசந்த நுதல்:***

புறத்தொழுக்கம் மேற்கொண்டிருந்த தலைவன் தற்போது தலைவியிடம் வாயில் வேண்டி நின்றான். திருமணம் ஆன சில நாள்களிலேயே தலைவியை விடுத்துப் பரத்தையரோடு உறவு கொண்டமையால் ஏற்பட்ட வருத்தத்தைக் கூறித் தோழி வாயில் மறுத்தாள். இதனைக்

***“கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றும்***
***தேர்வண் கோமான் தேனூ ரன்னவிவள்”*** *(ஐங்.55:1-2)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளில் கரும்பின் எந்திர ஒலியானது பாண்டிய மன்னரின் யானை பிளிறும் ஒலிக்கு ஒத்துடையது எனக் கூறப்படுகின்றது. இதனை, ***“நீ கூறுகின்ற மெலிவுக்கு மேலே மெலிவு கூறுகின்றது இவள் நுதல்”***[147] என்று ***‘களிற்றெதிர் பிளிற்றும்’*** என்னும் அடிக்குப் பழைய உரை விளக்கம் தருகின்றது.

பொ.வே.சோமசுந்தரம் இவ் அடிகளுக்கு, ***“உயிருடைய யானைக்கு மாறாக உயிரற்ற பொறி ஆரவாரித்தல் போன்று, கற்புடைய தலைவிக்கு மாறாகக் கயமகளிர் நின்னைக் கைக்கொண்டுவிட்டனர்.”***[148] என உள்ளுறை பொருள் காண்கிறார்.

***3.4.8 தலைவனின் பரத்தமையும் தலைவியின் ஆற்றாமையும்:***

தலைவியின் பிரிவு இயல்பை, ***"கரும்பாலை களிற்றினை எதிரொலிக்கும் என்றதால் தலைவன் கூறும் தன்மெலிவுக்கும், தலைவியின் மெலிவு அதிகமானது என்பது குறிப்பு"***[149] என்று விளக்குகிறார் அர.சிங்காரவடிவேலன். தலைவனின் பரத்தமைக்கும் ஊரலருக்கும் வாயில் மறுத்ததுக்கும்

***"பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி***
***இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்"****(தொல்.பொருள்.148:8-9)*

என்று தொல்காப்பியம் சூத்திரம் வகுத்துள்ளது.

திருமணமான சில நாள்களிலே தலைவன் தலைவியை விட்டுவிட்டுப் பரத்தை மனைக்குச் செல்கின்றான். இப்பிரிவு தலைவிக்குத் துன்பத்தை ஏற்படுத்துகின்றது. தலைவியின் அழகு நலம் குறைந்து பசத்தல் நோய் ஏற்படுகின்றது. ஆதலால் தலைவி மெலிகின்றாள். தலைவனை எண்ணியே வாடும் தலைவிக்கு நோய் ஏற்படுவதற்குத் தலைவனின் பரத்தையொழுக்கமே காரணம் ஆகும். இதனின்று தலைவனின் பரத்தமையைத் தலைவி ஏற்றுக் கொள்ளவில்லை என்பதும் புலனாகின்றது.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம், தோழி, '***பரத்தை ஒருத்தியை விடுத்து வேறோர் பரத்தையுடன் உறவு ஏற்பட்டது. களவொழுக்கத்தால் மற்றொரு பரத்தை தலைவனை மறைத்துக் கொண்டதால் முந்தைய பரத்தை தலைவனைக் காணாது தேடினாள். வேறு ஒரு தலைவனையும் திருமணம் செய்து கொண்டாள். அதனைத் தன் தலைவன் தான் தன்னை மணம் செய்து கொள்கின்றான் என எண்ணினாள். அதனால் விருப்பத்துடன் தன் தலைவனே என எண்ணிப் புதுத்தலைவனைக் கூடும் தருவாயில் அப் பழைய தலைவன் வருவதைக் கண்டு நாணி வெட்கித் தலை குனிந்தாள். தன்னையே நாடி வரும் இத்தலைவனை விட்டு வீணாகத் தேடி அலைகின்றோமே!'*** எனத் தன் செயலை எண்ணி வருந்துகின்றாள் பரத்தை. அத்தகு தலைவன் தலைவியை விட்டுவிட்டுப் பரத்தமை மேற்கொண்டதால் தமக்கு வருத்தம் மிகுந்து உள்ளது எனப் புலந்து கூறினாள் தோழி. இதனை,

***“மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடும் அன்னந்தன்***
***அணிமிகு சேவலை அகலடை மறைத்தெனக்***
***கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை***
***மதிநிழல் நீருட்கண் டதுவென உவந்தோடித்***
***துன்னத்தன் எதிர்வருஉந் துணைகண்டு மிகநாணிப்***
***பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சேர் ஊரகேள்”*** *(கலித்.70:1-6)*

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இவ்வடிகளில் தலைவனின் பரத்தமையொழுக்கம் அன்னத்தின் செயலுக்கு உவமிக்கப்படுகின்றது.

***“பரத்தையர் சேரியிலே இருந்து நின்னோடே புணர்ந்து விளையாடுகின்ற பரத்தை வேறொரு பரத்தை களவொழுக்கத்தாலே மறைத்துக் கொண்டு போனாளாக நின்னைக் காணாது கதுமெனக் கலங்கி அந்தப் பரத்தையை வேறோர் தலைவன் வதுவை யயர்கின்றதனை நீ வதுவையயர்கின்றாயென்று கருதி உவந்து சென்று தன்னைக் கூடுதற்கு எதிரே வருகின்ற நின்னைக் கண்டு இவன் தானே வருகின்றனை அறியாது நாந்தேடி வந்தோமே யென்று அதற்கு நாணித் தன் சுற்றத்திடத்தேயிருந்து நின்னை வருத்துகின்றாளென்று உள்ளுறையுவமங் கூறித் தலைவனைத் தோழி நெருங்கினாள்”***[150] என்கிறார் நச்சினார்க்கினியர். இவ்வுள்ளுறையை *அ.விசுவாதன்* தமது உரையில் கையாளுவதைக் காண முடிகின்றது. இவ் உள்ளுறையை அ.மாணிக்கம் எளிமைப்படுத்தி எடுத்துரைப்பதையும் அறிய முடிகின்றது.

பரத்தை தலைவனுடன் சேரியிலே கூடி மகிழ்கின்றாள். அத்தலைவனை மற்றொரு பரத்தை வரைந்து கொள்கின்றாள். மணமுடித்த தலைவனைக் கூடும் சமயத்தில் பழைய தலைவனை வரக் காண்கிறாள். இதனின், தலைவனைப் போன்றே பரத்தையும் காமஉணர்வு மிக்கவளாக இருப்பதைக் காண முடிகின்றது. பரத்தை, தான் விரும்பும் தலைவனைத் திருமணம் செய்து கொண்டமை காட்டுகிறது. தன்னை வதுவை செய்த தலைவனை விடுத்து வேறொரு தலைவனை வதுவை செய்த தன் தவறை எண்ணி வருந்தி, வெட்கித் தலைகுனியும் பண்பினள் என்றும் கூறப்பட்டுள்ளமை அறியமுடிகின்றது. இப்பரத்தை காதற்பரத்தையாகவே உலா வருகின்றாள் என்பது தெளிவாகிறது.

தோழி கூற்றில் தலைவி உயர்பண்பினமான ‘காஞ்சிப்பூ, கருங்குவளை, செந்நெல் இளம் பார்ப்பினம்’ ஆகவும் உருத்தருகிறாள். பரத்தையைப் புலால் நாற்றம் வீசும் மீனாக, நெய்தல் மலராக, பூத்த கரும்பாக, முதுமையான மீனாக, ஆம்பலாகவும் உவமைப் படுத்துவதை அறிய முடிகின்றது. ஒருசில பரத்தையர் தலைவனை வதுவை செய்து கொண்டனர் என்பதையும் அறிய முடிகின்றது.

தலைவி மற்றும் தோழி வாயிலாக அவர்களின் கூற்றாய் அமைந்த பாடலில் பரத்தையை இழிந்தவளாகவே உவமிப்பதை அறிய முடிகிறது.

### *3.5 தொகுப்புரை:*

சங்க அகப்பாடலுக்கு உயிர்தருவது உள்ளுறையே ஆகும். தலைவனின் பரத்தமையொழுக்கத்தை வெறுக்கும் தலைவியும், தோழியும் உள்ளுறை வழி சுட்டிக்காட்டி இல்லறத்தின் மேம்பாட்டையும் எடுத்துரைப்பதை எட்டுத்தொகை அகநூல்களில் காணமுடிகிறது. இவ்உள்ளுறை உவமத்திற்கு அந்நில கருப்பொருள்களைக் கொண்டே உவமித்தமை சிறப்பிற்குரியது.

தலைவன் பரத்தையிடம் சென்றதால் தலைவிக்கு ஏற்படும் துன்பத்தை, ***“தாக்கணங்கு ஆவது எவன் கொல்”*** என்றுரைக்கும் ஓரம்போகியார், பரத்தையை வேழமாகவும், ஆம்பல் தண்டாகவும், வாளை மீனாகவும், அயிரை மீனாகவும், வெள்ளாங் குருகாவும் மலராகவும், பறவையாகவும் உவமித்தார்.

தலைவனின் பரத்தமையை, வேழம் சுற்றும் ஊரன் என்றும் தலைவியின் துயரைத் தன் பார்புத் தின்னும் முதலை என்றும், தன் குழந்தை ஏறித் துயில வேண்டிய மார்பைப் பரத்தை ஆட்கொண்டாளே என வருந்தும் தலைவியின் துயரை, ஆமையின்மீது பார்ப்பு ஏறித் துஞ்சும் என்றும், மீனுக்குப் பதிலாக, வெண்நெல் தந்து தமது காம இச்சையைத் தீர்த்துக் கொண்ட தலைவனின் இழிநடத்தையும், தலைவிக்கு இன்பம் தராது பரத்தைக்கே இன்பம் நல்கும் தலைவனைக் கனிந்த மாம்பழம் பொய்கையில் உள்ள மீனுக்குப் பயன்தருகிறது என்ற உவமையால் தூற்றுவதையும் காணமுடிகிறது.

இந்திர விழாவில் புதுப்புதுப்பரத்தையரை அழைத்து வந்து இன்பம் துய்த்து மகிழும் தலைவனின் இழிவான பண்பாலும் காமவேட்கையாலும் வருந்தி அழும் தலைவியும் ஐங்குறுநூற்றில் காணப்படுகிறாள்.

தலைவி தழுவி மகிழவேண்டிய தலைவனின் மார்பைப் பரத்தை ஆட்கொண்டதால் வேதனை அடையும் தலைவியும், தலைவனின் பரத்தமையை, கரும்புப் பாத்தியில் பூத்த ஆம்பலின் தேனை உண்ணும் வண்டைப் போலவும், பழனத்தில் பலமீன்களை உண்ட நாரை தங்குவதற்காக நன்செய் நிலத்தில் உள்ள மருத மரத்திற்கு வருவது போலவும், சம்பங்கோழி பிற பறவைகளுடன் தங்குவதைப் போலவும் எருமை தன் கயிற்றை அறுத்துக் கொண்டு ஆம்பலையும் பழன நெல்லையும் உண்பதைப் போலவும் இருப்பதாக உவமித்துக் கூறுவது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

வெள்ளாங்குருகின் பிள்ளையை நாரை தன் பிள்ளையென காணச் சென்றதைப் போல் தலைவனும், மகப்பேறு காலத்தில் தலைவியுடன் புலவியில் ஈடுபடமுடியாமலும், தன் காமத்தை அடக்க முடியாதத் தலைவன் பரத்தையை அடைய வழிசெய்யும் இரக்கமிகுத் தலைவியையும் ஐங்குறுறூறு காட்டுகிறது.

கலித்தொகையில் மருதத்தலைவன் பகலில் சேரிப் பரத்தையுடன் நீராடியும் துணங்கையாடியும் மகிழ்ந்து, இரவில் இற்பரத்தையைக் கூடியும், பின் தன்னிடம் வரும் அவனை ஏற்கும் தலைவியையும் காணமுடிகிறது.

பரத்தையைப் பிரிந்து வந்த தலைவனின் கோலம் கண்ட தலைவி தலைவனைத் தன் தங்கையான பரத்தையிடமே செல்க! என்று ஊடினாலும் பரத்தையைத் ***'தங்கையாகவே'*** அவள் காண்கிறாள். தலைவனின் பரத்தமையொழுக்கத்தை விரும்பாத மருதக்கலி தலைவி, 'இனி தலைவனைக் கூடமாட்டேன்' என்று சூளுரைத்தாலும் தலைவனைக் கண்ட பொழுதில், தன் நெஞ்சே தனக்குப் பகையாகும்படி உரைத்த சூளை மறந்து ஊடிப்பின் கூடினாள் என்ற இரக்ககுணம் படைத்த தலைவியும் காணப்படுகிறாள்.

தலைவன் தலைவியைவிட்டுப் பரத்தையிடம் சென்றபோது தலைவனின் தவறை தலைவனுக்கே எடுத்துக் கூறியும் இடித்துரைத்தும் தலைவியுடன் கூட வழி செய்கிறாள் தோழி. ***‘ஆதனவினியின்’*** நாடு மேன்மேலும் சிறக்க தலைவி ***‘நெல் பல பொலிக! வளம் பல பெருக!’*** என இறைவனை வேண்டிக் கொள்வதைக் கூறி இல்லறம் பேணுமாறு தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவதை ஐங்குறுநூறு, கலித்தொகைப் பாடல்களில் காணமுடிகிறது.

இவ்வியலில் பரத்தையர்கள் சங்ககாலத்தில் பேச்சுரிமை பெற்றவர்களாயும், சுதந்திரமாகத் திரிபவர்களாகவும், பொருளுக்காக வாழ்பவர்களாகவும், தலைவிக்கே சவால் விடுபவர்களாகவும், தலைவனை உரிமை கொண்டாடுபவர்களாகவும், தலைவியைத் தங்கையாக எண்ணுபவர்களாகவும், தலைவியை எதிர்த்துப் பேசும் துணிவுடையவர்களாகவும் இருக்கக் காரணம் சங்கக் காலச் சமுதாயத்தில் பரத்தமை பெற்றிருந்த பெரும் செல்வாக்கே ஆகும். பொருள் காரணமாகவோ, காமம் காரணமாகவே இப்பரத்தையர் சமூகத்தில் வேரூன்றி வளர ஆண்களும் காரணம் ஆகும். காமத்தைக் கட்டுப்படுத்த இயலாத ஆண்களும், மனைவியிடம் கிடைக்கப் பெறாத பேரின்பத்திற்காகப் பரத்தையை நாடிய ஆண்களும், செல்வமிகுதியால் பரத்தையை நாடிய ஆண்களும் எனப் பல வகையில் இப்பரத்தமை வளர காரணமாயின. தலைவனின் பரத்தமையொழுக்கத்தைத் தலைவி விரும்பவில்லை எனினும் எதிர்த்துப் பேசும் உரிமையும் பரத்தையின் செல்வாக்கைத் தடுக்கும் உரிமையும், தலைவனை விட்டுத் தனித்து வாழும் துணிவும் இல்லாததால் அக்காலச் சமூகத்தில் வேறுவழியின்றித் தலைவனை ஏற்றுக்கொள்ள வேண்டிய சூழலில் தலைவி வாழ்ந்தாள் என்பது வெளிப்படை. இதுவும் சங்கச் சமூகத்தில் பரத்தமை வளரக் காரணம் என்பதே உண்மை.

## அடிக்குறிப்புகள்

1. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பக்.284
2. சந்தியா நடராஜன், (பதிப்பாளர்) மதுரை தமிழ்ப்பேரகராதி, பக்.370
3. வாழ்வியல் களஞ்சியம் - தொகுதி-5, பக்.399
4. இளம்பூரணனார் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், பக்.353
5. மேலது, பக்.352
6. அழகர்சாமி, அ.கா., பத்தினிப் பெண்டிர் அல்லோம், பக்.17
7. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.284
8. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ), ஐங்குறுநூறு, மூலமும் விளக்க உரையும், முதல் தொகுதி, பக்.3
9. சிங்காரவடிவேலன், அர., (உ.ஆ), சங்க இலக்கியம், ஐங்குறுநூறு, பக்.25
10. மாணிக்கம், அ.,(உ.ஆ) சங்க இலக்கியங்கள், மூலமும் உரையும், (தொகுதி-3), ஐங்குறுநூறு, முதல் பகுதி, பக்.48
11. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ), மேலது, பக்.47
12. மேலது, பக்.55
13. மேலது, பக்.52
14. மேலது, பக்.55
15. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.27
16. தட்சிணாமூர்த்தி, அ.,(உ.ஆ), சங்க இலக்கியம், ஐங்குறுநூறு, புத்தகம்-1, பக்.6
17. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.57
18. மேலது, பக்.58
19. சோமசுந்தரம், பொ.வே.,(உ.ஆ),ஐங்குறுநூறு, மூலமும் உரையும்,பக்.7
20. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.58
21. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), மேலது, பக்.40
22. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.32
23. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.66
24. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.40
25. அழகர்சாமி, அ.கா., மேலது, பக்.12
26. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.61

27. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.53
28. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.85-86
29. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.49
30. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.128
31. மேலது, பக்.132
32. மேலது, பக்.133
33. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.68,69
34. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.62
35. மேலது, பக்.105
36. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.139-
37. மேலது, பக்.139
38. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.65
39. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.148
40. மேலது, பக்.151
41. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.77
42. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ), மேலது, பக்.153
43. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.78
44. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.72
45. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.107
46. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.79
47. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ),சங்க இலக்கியத்தில் மருதப்பாடல்கள், பக்.123
48. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.107
49. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.120
50. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.188
51. மேலது, பக்.189
52. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ),மேலது, பக்.129
53. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.97
54. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.146
55. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.191,192
56. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.98
57. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.140

58. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.147
59. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.195
60. மேலது, பக்.195
61. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.99
62. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.199
63. மேலது, பக்.199,200
64. மேலது, பக்.200
65. தமிழண்ணல், சங்கஇலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள், பக்.71
66. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.134
67. துரைசாமிப்பிள்ளை, ஔவை. (உ.ஆ),சு., மேலது, பக்.215
68. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.153,154
69. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.106
70. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.215
71. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.108
72. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.158
73. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.252
74. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.127
75. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.252
76. மேலது, பக்.282
77. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.211,212
78. மாதையன், பெ., மேலது, பக்.126-127
79. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.376
80. மேலது, பக்.381
81. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.214
82. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.186
83. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.387
84. மேலது, பக்.388
85. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.221
86. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.327
87. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.395
88. மேலது, பக்.391
89. மேலது, பக்.391

90. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.395
91. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.160
92. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.405
93. மேலது, பக்.405
94. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.235
95. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.344
96. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.406
97. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.346
98. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.412
99. மேலது, பக்.413
100. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.414
101. மேலது, பக்.415
102. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.355
103. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.453
104. கழக வெளியீடு, கலித்தொகைச் சொற்பொழிவுகள், பக்.102
105. மேலது, பக்.103
106. நச்சினார்க்கினியர், (உ.ஆ),கலித்தொகை மூலமும் உரையும், பக்.194
107. தமிழண்ணல், மேலது, பக்.75
108. மாணிக்கம், அ., (உ.ஆ),மேலது, பக்.397
109. நச்சினார்க்கினியர், (உ.ஆ),கலித்தொகை மூலமும் உரையும், பக்.213,214
110. மேலது, பக்.219
111. மேலது, பக்.224
112. மேலது, பக்.230
113. மேலது, பக்.230
114. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.41
115. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.14
116. மேலது, பக்.14
117. மேலது, பக்.19
118. மேலது, பக்.20
119. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.10
120. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.21

121. மேலது, பக்.21
122. மேலது, பக்.22
123. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.207
124. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.23
125. மேலது, பக்.24
126. மேலது, பக்.24
127. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.17
128. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.16
129. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.14
130. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.284
131. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.26
132. மாணிக்கம், வ.சுப., மேலது, பக்.207
133. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.76
134. மேலது, பக்.81
135. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.46
136. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.52
137. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.88
138. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ),மேலது, பக்.129 பக்.111
139. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.58
140. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது,பக்.96
141. மேலது, பக்.96
142. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.63
143. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.139
144. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.72
145. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.96
146. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.66-67
147. துரைசாமிப்பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ),மேலது, பக்.172
148. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.87
149. சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ), மேலது, பக்.83
150. நச்சினார்க்கினியர், (உ.ஆ),கலித்தொகை மூலமும் உரையும், பக்.205

# இயல் - நான்கு

# பரிபாடலில் பரத்தமை

### *4.0 முன்னுரை:*

சங்க இலக்கியங்கள் கற்பனையும் கனவும் பொய்யும் புனைவும் அற்றவை. தமிழ்ச் சமுதாயத்தை உள்ளது உள்ளபடியே காட்டுவன என்று போற்றப்படுகின்றன. உலக இலக்கியங்களுள் சங்க இலக்கியங்கள் சமயம் சாரா இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இத்தகு பெருமை மிக்க சங்க இலக்கிய எட்டுத் தொகை நூல்களுள் ஐந்தாவதாக வைத்துப் போற்றப்படும் இலக்கியமே ***'பரிபாடல்'*** ஆகும்.

அகம், புறம் கொண்ட எட்டுத்தொகை நூலான பரிபாடலில் ஆன்மீகமும் பரத்தமை ஒழுக்கமும் ஒருசேரக் காணமுடிகிறது. திருமாலும் முருகனும் இணைந்து காக்கும் மதுரையம்பதியிலுள்ள வையையில் வெள்ளம் வந்தபோது நடந்த நீரணிவிழாவில் பரத்தை இடம்பெறுகிறாள். நீர் விளையாட்டில் தலைவனுக்கும் பரத்தைக்கும் இடையே நடந்த நிகழ்வையும், தலைவிக்கும் பரத்தைக்கும் இடையே உண்டான கருத்து மோதல்களையும் அழகான பாடல் வரிகளால் வடித்துத் தந்த நிகழ்ச்சியை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### *4.1 பரிபாடலின் சிறப்பு:*

இப்பரிபாடல் ***'ஓங்கு'*** என்ற அடைமொழி சிறப்புப் பெற்று விளங்குகிறது. ***"திருந்து மொழிப் புலவர் அருந்தமிழ் ஆய்ந்த சங்கம் என்னும் துங்கமலி கடலுள் அரிதின் எழுந்த 'பரிபாட்டமுதம்' எனச் சான்றோராற் புகழப்பெற்ற இப்பரிபாடல், பாட்டும் தொகையும் கீழ்க்கணக்கும் ஆகிய முத்திறத்த பழந்தமிழ்ப் பனுவல்களுள் நடுநின்ற தொகைநூல் எட்டனுள் ஐந்தாவதாக நின்று திகழுமொரு தொகைநூல் ஆகும்."*** [1] என்பர் பொ.வே. சோமசுந்தரம்.

ஓங்கு பரிபாடலின் சிறப்பைத் தொல்காப்பியம்

***"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்***

***பாடல் சான்ற புலனெறி வழக்கம்***
***கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்***
***உரிய தாகும் என்மனார் புலவர்”*** *(தொல்.பொருள்:56)*

என்று இலக்கணம் வகுத்துள்ளமை காணமுடிகிறது.

***“தமிழுக்கே உரிய தனி இலக்கணம் அகப்பொருள் இலக்கணம் அதனைக் கலிப்பாவினாலும், பரிபாடலாலும் பாடுவது வழக்கம் என்பது தொல்காப்பியர் கருத்து”*** [2]

தொல்காப்பியர் (பொருள்) பரிபாட்டிற்கு உரிய இலக்கணத்தை,

***“பரிபா டல்லே தொகைநிலை வகையின்***
***இதுபா என்னும் இயனெறி இன்றிப்***
***பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப”*** *(தொல்.பொருள்:425)*

என்று விளக்குகிறார் ***“அது நான்கு வகைப்பட்ட வெண்பா இலக்கணத்தை உடையது. ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா, மருட்பா என்று கூறப்படும் எல்லாப் பாவினுடைய உறுப்புக்களைப் பெற்று வரும். கொச்சகம் அராதகம் சுரிதகம் எத்து சொற்சீரடி முடுகியலடி என்ற கலிப்பா உறுப்புகளையும் அதில் அமைந்திலங்கும். அது காமப் பொருள் பற்றிப் பாடப்படும்”*** [3] என்று தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது என அ.மாணிக்கம் எடுத்துரைக்கிறார்.

### *4.2 பரிபாடல் அமைப்பு:*

***‘அறம், பொருள், இன்பம், வீடு’*** என்னும் ***“உறுதிப் பொருள் நான்கினுள், இன்பத்தையே பொருளாகக் கொண்டு மலைவிளையாட்டு, புனல் விளையாட்டு முதலியன பற்றி இப்பாடல் வரும் என்னும் பேராசிரியர் (தொல்.பொருள்.121) விளக்கத்திற்கேற்பத் திருப்பரங்குன்றத்து மலைமேல் தலைவன் தலைவி மகிழ்ந்திருத்தல், வையைக் கரையில் புனலாடல் ஆகியவை பாடப்படுகின்றன.”*** [4]

பொ.வே.சோமசுந்தரம், ***“தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னரே பரிபாடல் இசைப்பாடல்களாகவும், கடவுள் வாழ்த்துப் பாடல்களாகவும்***

***கையாளப்பட்டன"*** [5] என்பர். முருகன், திருமால் மற்றும் வையை பற்றியும் இறையுணர்வுடன் பாடப்பெறும் நூலாகும். வையை பற்றி வரும் பாடல்களில்மட்டும் காமம் கண்ணிய பாடல்கள் விளங்குகின்றன. பரிபாடல் தொகுக்கப்பெற்ற காலத்தில் எழுபது பாடல்களைக் கொண்டிருந்தது என்பதை:

***"திருமாற்கு இருநான்கு; செவ்வேட்கு முப்பத்***
***தொரு பாட்டுக் காடுகிழாட் கொன்று – மருவினிய***
***வையை இருபத்தாறு மாமதுரை நான்கென்ப***
***செய்ய பரிபாடல் திறம்."***

என்னும் பழஞ் செய்யுளால் அறிய முடிகிறது. அதாவது, திருமாலுக்கு எட்டு; முருகனுக்கு முப்பத்தொன்று; கொற்றவைக்கு ஒன்று; வையையாற்றுக்கு இருபத்தி ஆறு; மற்றும் மதுரைக்கு நான்கு என எழுபது பாடல்கள் பரிபாடலுக்கு உரியவை ஆகும்.

பரிபாடலின் எழுபது பாடல்களில் தற்போது கிடைக்கப் பெற்றவை இருபத்திரண்டு மட்டுமே ஆகும். தொல்காப்பிய உரை முதலியவற்றால் கிடைப்பன பதினொன்று. இப்பதினொன்றும் சிதைந்த நிலையிலேயே கிடைக்கப்பெற்றவை. இப்பாடல்கள் அனைத்தும் மதுரையையும் பாண்டிய நாட்டையும் அந்நாட்டுச் செவ்வேள் (முருகன்), திருமால் ஆகியோரையும், வையையாற்றையும் திருமாலிருஞ் சோலையின் சிறப்பையும் பாடியவையாகும். இப்பாடல்கள் இருபத்தைந்து அடிகள் முதல் நானூறு அடிகள் வரை உள்ளன. ***"பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வர்ணிக்கப்படும்"*** [6] என்பர் இளம்பூரணர். மேலும் இதனை ***"எண் வகை வனப்பினுள் இழை"*** [7] (தொல்.செய்யுளியல்:-121) என்பர் பேராசிரியர்.

***'பரிந்து செல்லும் பாட்டு பரிபாட்டென வரும்'*** அ∴தாவது பரிபாடல் என்பது பரிந்து வருவதாகும். பரிந்து செல்லும் பாடல் எனப்பட்டதால் இசையுடன் பாடப் பெற்ற நூலாகும். "***இந்நூலின் பன்னிரு பாடல்கள் பாலைப்பண்; அடுத்து வரும் ஐந்து பாடல்கள் நோதிறம். இறுதியாக பாடலின் பண்ணை அறிய இயலவில்லை"*** [8]

ஓங்கு பரிபாடலுக்குப் பலர் உரை கூறினாலும் பரிமேலழகரின் உரையே முதன்மையானதும் சிறப்பானதும் ஆகும்.

### *4.3 நீர் விளையாட்டுப் பொருள்கள்:*

திருமால், முருகப்பெருமானின் அருள் சிறப்பைப் பாடும் பரிபாடலில் வையைக் குறித்து வரும் பாடல் வையையின் சிறப்பையும், தலைவனுடன் பரத்தையரும் கூடி வையையில் புனலாடலையும் விளக்குகிறது. பெருமழை பொழிதலால் வையையாற்றில் வெள்ளம் வருகிறது. அப்புது வெள்ளத்தைக் காண மக்கள் திரண்டு வையைக்கரைக்குச் சென்றனர். வையையின் வெள்ளத்தையும், மலைகளில் இருந்து அடித்து வரப்பட்ட பூக்களையும் கண்ட மக்கள் ஆசையுடன் வையையில் நீராடுகின்றனர். இதனால் மனம் குளிர்ந்த மக்கள் இறுதியில் வையையைப் புகழ்ந்து போற்றி வாழ்த்துவதாக அமைகிறது. மேலும், இவ்வையை வெள்ளத்தில் தலைவன் இற்பரத்தை, காதற்பரத்தை எனப் பரத்தையர்களுடன் கூடி நீராடுதலைக் காண முடிகிறது. அவ்வையை நீராடலின் சமயத்தில் பெண்கள் ஆண்களைக் கவர்வதற்காகவே, ***“கத்தூரிக் குழம்பு, கபோலத்திலும் நகத்திலும் செம்பஞ்சு எழுதுதல், கலவைக்குழம்பு, கள்ளின் களிப்பை மறைத்தல், குங்குமக்குழம்பு, குவளைத் தண்டால் கையை அணைதல், குவளையை மகளிர் காதிற் சொருகுதல், கேள்வன் உருட்டும் துடிக்கிசைய ஆடல், சாதம்மி, சாந்தாற்றி, சுண்ணம், செம்பஞ்சுக் குழம்பைக் கன்னத்தில் எழுதுதல், தகரச்சாந்து, திலகம், பஞ்சவாசம், பனிஆவி”*** [9] போன்ற போகப் பொருளை பயன்படுத்தியமை அறிய முடிகின்றது.

### *4.4 பரிபாடலில் வையை:*

“***நீரின்று அமையாது உலகு”….(குறள்.20)***

எனும் குறளுக்கேற்ப, மதுரைமக்களின் மனம்குளிர மழை பெய்தது. மழை வெள்ளத்தால் சிறப்புற்ற வையை ***‘தமிழ் வையை’*** என்று புகழப்பட்டது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரை வையை ஆறு பற்றிச்

***“சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந்***
***தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையை”*** *(கலித்.: 67:2-3)*

***"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி***
***வையை யென்ற பொய்யாக் குலக்கொடி"*** (சிலம்பு:13:169-170)

என்றெல்லாம் பிற நூல்கள்வழி புகழப்பட்டமை அறிய முடிகிறது. புலவர்களின் இப்பொய்யாமொழியால் வையையில் வந்த மழை வெள்ளத்தால் மதுரை மக்கள் இன்புற்று இருந்தமையை,

***"வரும்புனல் விருந்தயர் கூடல்"*** *(பரி.:10:129)*

என்கிறது பரிபாடல் ***"வானத்திலிருந்து பகீரதன் தவத்தாற் பெயர்ந்து வரும் கங்கை ஆற்றை இவ்வையை ஆறு ஒத்ததென்றார். வண்டுகள் ஒலிப்பது வையையாற்றின் புகழ்பாடுவது ஒத்தது"*** [10] என்று நல்லழிசியார் பாடலுக்குப் பெ.சுப்பிரமணியன் உரை நவில்கிறார். பரிபாடல் வையை பற்றிய பாடல்களில் நீர் விளையாட்டும் அதற்குரிய கருவிகளும் பொருட்களும், தெப்ப வகைகளும், கையுறைப் பொருள்களும் மக்கள் கொண்டு செல்வர் எனக் கூறப்பட்டுள்ளது. ***"பரிபாடலைப் பெற்ற பெருமை வாய்ந்ததென பதினோராம் பாடலில் ஆசிரியர் நல்லந்துவனார் சிறப்பித்திருந்தாலும் அது கடலோடு கலத்தலை 20-ஆம் பாடலில் உவமை முகத்தால் தெரிவித்திருந்தலும் அறிதற்பாலன. அதனைத் தமிழ் வையையென்றும் தென்னவன் வைகையென்றும் கூறுகிறார்"*** [11] நல்லந்துவனார்.

"***புனல் விளையாட்டு என்பது பண்டைக் காலத்துச் சிறந்த பொழுதுபோக்கு. ஆற்றிலும் குளத்திலும் புதுவெள்ளம் தலைப்பெய்தபோது, காதலர்கள் புணைதழுவி நீர்விளையாடுவர். மனைவியொடு தலைவன் நீர் விளையாடினான் என்று வரும் இடங்கள் சிலவே, இவ்விளையாட்டிற்குப் பரத்தையர் துணை பெரிதாக மதிக்கப்பட்டது. பரத்தையொடு நீராடல் ஊரறிந்த காட்சியாக இருந்தது."*** [12] என்ற வ.சுப.மாணிக்கத்தின் கூற்றுப் பின்வரும் பாடல்களுக்குப் பொருத்தமாக அமைவதை அறியமுடிகிறது.

### *4.5 வையையில் வெள்ளம்:*

மதுரையைக் குளிர்விக்க ஆவணித் திங்கள் அவிட்ட நாளில் கோள்கள் அனைத்தும் தமக்குரிய இராசிகளில் பொருந்தி நிற்கவும்,

சோமனை அரசு தீண்டி நிற்கவும் கூடிய நிறைநாளைக் கணக்கிட்ட சோதிட வல்லுநர்கள் உறுதியுடன் கூறியதுபோல் வையை கரைபுரண்டோடும் படியாக மழைபொழிந்தது என்பது

*"விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப*
*எரிசடை எழில்வேழந் தலையெனக் கீழிருந்து*
*தெருவிடைப் படுத்தமூன் றெண்பதிற் றிருக்கையுள்*
*உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர*
*வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி*
*புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்*
*அங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவின்*
*இல்லத் துணைக்குப்பால் எய்த இறையமன்*
*வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை*
*மதிய மறைய வருநாளில் வாய்ந்த*
*பொதியின் முனிவன் புரைவரைக் கீறி*
*மிதுன மடைய விரிகதிர் வேனில்*
*எதிர்வரவு மாரி இயைகெனஇவ் வாற்றால்*
*புரைகெழு சையம் பொழிமழை தாழ*
*நெரிதரூஉம் வையைப் புனல்"* *(பரி.:11:1-15)*

என்ற வரிகளால் புலனாகிறது. இத்தகைய சிறப்புப் பெற்ற வையைப் பற்றிய பாடல்கள் பரிபாடலில் (எண்கள் ஆறு, ஏழு, பத்து, பதினொன்று, பன்னிரண்டு, பதினாறு, இருபது, இருபத்திரண்டு) காணப்படுகின்றன.

### *4.6 நீர்விழவணியும் பரத்தமையும்:*

வையையில் நீர் விழவணியில் இற்பரத்தை மற்றும் காதற் பரத்தையுடன் நீராடினான் தலைவன். இதனை அறிந்த தலைவி ஊடினாள். அவளது (தலைவியின்) ஊடலைத் தீர்க்க வாயில் கேட்டு நின்றான் தலைவன். வாயில் மறுத்துக் கூறிய தலைவியின் கூற்றாக அமைகிறது இப்பாடல்.

### *4.6.1 காதற்பரத்தையும் முதுபெண்டிரும்:*

தலைவியின் கூற்றாக அமையும் இப்பாடல் காதற்பரத்தைக்கும் தலைவனுக்கும் இடையே நடக்கும் உரையாடலை விளக்குகிறது.

காதற்பரத்தையின் ஊடலைத் தணிப்பவர் காதற் பரத்தையின் இல்லத்திலே இருக்கும் முதுபெண்டீர் ஆவார் என்பது இப்பாடல்வழிப் புலனாகிறது.

வையைத் துறையில் ஏற்பட்ட புதுவெள்ளத்தில் புனல் விளையாடலில் தலைவனின் செயலால் ஊடல் கொண்ட காதற்பரத்தைக்கு முதுப்பெண்டிர் அறிவுரை கூறும் நிகழ்வாய் நல்லந்துவனாரின் பாடல் அமைகிறது. மதுரை மாநகரில் உழவு முதலிய தொழில் பெருக, வையையாற்றின்கண் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அவ்வெள்ளத்தில் நீராடி மகிழ நீர்விழாவிற்குத் தேவையான வாசனைப் பொருட்கள், ஆடை அணிகலன்களை எடுத்துக்கொண்டு மகளிரும், ஆடவரும் யானைகள்மீதும், குதிரைகள்மீதும் ஏறி வையை ஆற்றிற்கு அணிவகுத்துச் சென்றனர். படைபோல் திரண்ட மக்கள் கூட்டத்தால் வையை நீர் கலங்கியும் கரை உடையும் நிலையும் ஏற்பட்டது. இவ்வாறு பரந்த சிறப்பான வையையில், இரவுக்குறியில் தலைவியுடன் கூடி மகிழ்ந்த தலைவன் புதுப்பரத்தையிடம் சென்று, ***"பணிபொசி பண்ப"*** (பரி.6:63) என்று பணிந்து நின்றான். அப்புதியவள் ஏற்க மறுத்ததால் காதற்பரத்தையிடம் சென்றான் தலைவன். தன் கையில் உள்ள வாடிய பூந்தளிர்களைத் கையுறையாகத் தந்தான். தலைவன் இற்பரத்தையுடன் நீராடியதையும், புதிய பரத்தை ஏற்க மறுத்ததையும் அறிந்த காதற்பரத்தை, தலைவன் தந்த வாடிய தளிர்களைக் காட்டி இத்தளிர்கள் தனக்காகக் கொய்யப்படவில்லை என்று கூறி ஊடினாள். புதிய பரத்தைக்காகக் கொய்த தளிர்களைக் காதற் பரத்தைக்காகவே கொய்ததாகத் தலைவன் கூறினான். அதைக்கேட்ட காதற்பரத்தை தலைவனிடம், தனக்காகக் கொய்திருப்பின் புதிதாகவே இருந்திருக்கும் இவை வேறு ஒரு பரத்தைக்காகவே கொய்துள்ளாய் இனி பொய்க் கூற வேண்டாம் என்று கூறி மேலும் ஊடினாள். அதற்குத் தலைவன் வையையின் வெள்ளத்தைக் கடந்து வர காலதாமதமானதால் தான் இத்தளிர்கள் வாடின என்று ஆணையிட்டுக் கூறினான். மேலும், ***"காமர்ப் பெருக்கன்றோ வையை வரவு"*** (பரி.6:79-80) என்று வையையின் வெள்ளப்பெருக்கைக் கூறினான். இவ்வடிக்கு ***"இற்பரத்தையது காமப் பெருக்கம் வையைப் பெருக்கை யொக்குமென்று"***[13] காதற்பரத்தை குறிப்பாக உட்கொண்டாள் என்கிறார் பரிமேலழகர். ***"வையைவரவு காமர்ப் பெருக்கன்றோ" என்ற தலைவன் கூற்றினை வையைப் பெருக்கம் காமப் பெருக்கை ஒத்தது என்றானாகக் கருதிக்***

***காதற்பரத்தை கூறுகின்றாள்"*** [14] எனப் பொ.வே.சோமசுந்தரம் விளக்குகின்றார். தலைவனின் இக்கூற்று பரத்தையின் காமப்பெருக்கம் வையைப் பெருக்கை ஒக்கும் எனக் குறிப்பாகக் கொண்ட காதற்பரத்தை, காமமானது சிலரிடத்து மிக்கும், சிலரிடத்து சுருங்கியும் காணப்படும் என்று அழுத்தமாகக் கூறி இனி பொய், சூள் உரைப்பதைத் தவிர்ப்பாயாக என்று கூறினாள். மேலும், தலைவனை நோக்கி அவன் தன்னைத் தேடி வந்ததை இற்பரத்தை அறிந்தால் கனலுவாள் ஆதலால் ***'இற்பரத்தையிடமே செல்க! தன்னிடம் வருவதைத் தவிர்க்க!'*** என்று கூறி அவள் ஊடினாள். தலைவன் இற்பரத்தையைத் தனக்குத் தெரியாது என்று பலவாறு கூறியும் கேட்காத காதற்பரத்தை மேலும் மேலும் ஊடினாள். காதற்பரத்தையின் இல்லில் இருந்த முதுப்பெண்டிர் இதைக்கண்டு காதற்பரத்தையிடம், ***'இவ்வாறே நீ ஊடிக்கொண்டே இருந்தால் தலைவன் சினமுற்று, காமம் கெட்டுவிடும். மேலும், உன்னை விட்டுச் சென்றுவிடுவான், இரவில் தலைவனைத் தேடி அலைய வேண்டி வரும் ஆதலால் ஊடலை விடுத்துத் தலைவனை ஏற்றுக்கொள்!'*** என்று அறிவுறுத்துகிறாள். "***காதற்பரத்தமையை அவள் இல்லின் முதுபெண்டிர் கழறியவாறும், வாயில்கள் ஊடல் உணர்த்தியவாறும் அவளைத் தலைமகன் புணர்ந்தவாறும் விரலிக்குத் தலைமகள் கூறுகின்றாள்"***[15] எனப் பரிமேலழகரும் "***தலைவனால் ஊடல் தீர்க்கும்படி விடுக்கப்பட்ட விரலிக்குத் தலைமகனுக்கும் காதற்பரத்தைக்கும் நிகழ்ந்த உரையாடலை எல்லாம் அறிந்த தலைமகள் அவர் கூற்றாகவே கூறி மேலும் விரலிக்குக் கூறுகின்றாள் என்பது கருத்து"*** [16] எனப் பொ.வே.சோமசுந்தரமும் வேறு உரையாசிரியர்களும் எடுத்துரைப்பதை அறியமுடிகிறது. அம்முதுப் பெண்டிரின் அறிவுரையை ஏற்ற காதற் பரத்தை தலைவனுடனான ஊடல் தீர்ந்து கூடி மகிழ்ந்தாள். இதனை,

***"நிறைகடன் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்***
***பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்***
........................................................
........................................................
***ஆடுவார் நெஞ்சத் தலர்ந்தமைந்த காமம்***
***வாடற்க வையை நினக்கு.*** (பரி.6)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இப்பாடலில் தலைவன் தன்னை விடுத்து வேறொரு பரத்தையுடன் செல்வது பொறுத்துக்கொள்ள இயலாதவளாயும், தலைவனைக் கடிந்து கொள்பவளாகவும் தலைவன்மீது உரிமைக் கொண்டவளாகவும் இருக்கும் காதற்பரத்தையானவள் முதியவள் கூறும் அறிவுரையைக் கேட்டு அதன்படி நடப்பவளாகவும் உள்ளதைக் காண முடிகின்றது. தலைவனின் காமமிகுதியை அறிந்து நடப்பவளாகவும் பரத்தை விளங்குவதை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

ஊடல் அளவுடன் அமைய வேண்டும்; ***“உப்பமைந்தற்றால் புலவி”*** (குறள்.1302) என்பதன்வழி வள்ளுவர், ஊடல் அதிகமாயின் துன்பம் நேரிடும், என்கிறார்.

இப்பாடல் தோழி கூற்றாக அமைந்திருப்பினும் தலைவன், தலைவி, காதற்பரத்தை முதுபெண்டிர் என நால்வரும் இடம்பெறுகின்றனர். மேலும், அவர்களின் உரையாடலால் தோழி கூற்று நிகழ்வதாகவும் நாடகப் பாங்குடனும் பாடப்பெற்றமை அறிய முடிகிறது. தலைவனின் பரத்தமையொழுக்கத்தால் தலைவி வாயில் மறுத்தது தோழிவழியே நிகழ்ச்சி நடத்துவதாக ஆசிரியர் நல்லந்துவனார் பாடியமை அறிய முடிகிறது.

### *4.6.2 யானை மீதும் குதிரை மீதும் செல்லும் பரத்தையர்:*

ஆசிரியர் கரும்பிள்ளை பூதனார் எழுதிய பாடலில் வையை வெள்ளத்தில் நீராடச் சென்ற மகளிரில் முதுமைப் பெண்டிரும் கற்புடைப் பெண்ணும் பரத்தையரும் அடங்குவர். இவர்களில் யானை மீதேறிச் செல்லும் பெண்களைப் பரத்தையர் என அவர் சுட்டுகிறார். ***“நீரினது அழகு காண்டல் (27) முதலாக அமளி சேர்தல்*** (34) ***ஈறாகச் சொல்லிய விளையாட்டுக்கள் அலர் வாய் அவிழ்ந்தன்ன பருவத்துக் கற்புடை மகளிர் பரத்தையரன; அவற்றில் மாவின் திரளை ஊர்தலும் பிடியை உந்துதலும் பரத்தையர்க்கே உரிய; குதிரையில் செல்லலும், பெண் யானையில் செல்லலும் பரத்தையர்க்கு உரியன என்றும், ஏனையவை கற்புடை மகளிர்க்கும் பரத்தையர்க்கும் பொது”*** [17] என்றும் பரிமேலழகர் கீழ்வரும் அடிகளுக்கு விளக்கம் தருகின்றார்:

*"நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்*
*பேரணி நிற்போர் பெரும்பூசல் தாக்குவோர்*
*மாமலி யூர்வோர் வயப்பிடி யுந்துவோர்*
*வீமலி கான்யாற்றின் துருத்தி குறுகித்*
*தாம்வீழ்வா ராகந் தழுவுவோர் தழுவெதிரா*
*தியாமக் குறையூட லின்னசைத் தேனுகர்வோர்*
*காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்*
*சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்"* *(பரி.10:27-34)*

அக்காலத்தில் வையையில் நீராடப் பரத்தையர் குதிரை, மற்றும் பெண்யானை மீதேறிச் சென்றனர் என்பது அறிய முடிகிறது.

### *4.6.3 பிடிமீது தலைவி:*

புலவர் நல்வழுதியார் பாடிய பாடல் ஒன்று வையையில் நீர்பெருகுங் காலத்தே, ஊரார் (கண்டோர்) கூற்றாக அமைந்துள்ளது. அக்கூற்று தலைமகன் பரத்தமையொழுக்கம் மேற்கொண்டமையைக் காட்டுகிறது. தோழியைக் கண்ட ஒருத்தி, சிறிதும் குறையில்லாத குலமகளாகத் தலைவி இருந்தால். தலைவன் நன்மையில்லாத இற்பரத்தையர் வீட்டிற்குச் சென்று, அவளது இளமைத் தோளின் அழகில் இன்பம் நுகர்ந்ததை அறிந்தும் தலைவி தனது ஊடலை மறந்து தலைவனோடு பிடிமேல் (யானை) ஏறினாள். இப்பாட்டில் ஊரார் வாயிலாகப் பரத்தமை பேசப்படுவதையும் தலைவியின் ஊடலானது வையையால் மாறிப் போனதும் அறிய முடிகின்றன. ஊரரின் கூற்றினை,

*"நாணாள்கொ றோழி நயனில் பரத்தையிற்*
*றோணல முண்டு துறந்தா னெனவொருத்தி*
*யாணர் மலிபுன னீத்தத் திரும்பிடி"* *(பரி.:12:45-47)*

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன. இதன்வழி பரத்தை ஏறவேண்டிய பிடியில் தலைவியும் ஏறினாள் என்பது உணர முடிகிறது.

### *4.6.4 அசதியாடலில் பரத்தை:*

நல்லழிசியார் என்ற புலவர் பாடிய வையைப் பாடல் வாயில் வேண்டிய தலைவனுக்கு வாயில் மறுத்துத் தோழி கூறிய கூற்றாக அமைகிறது. இப்பாடலில் தோழி வாயில் மறுக்கக் காரணமே, ***'தலைவனின் பரத்தமையொழுக்கமே'*** ஆகும்.

வையையின் புதுவெள்ளத்தில் நீராடும் மகளிருள் காதற்பரத்தையும் ஒருத்தி. அக்காதற்பரத்தை தன் தோழியரோடு நீராடியதைக் கண்டான் தலைவன். அப்போது, தோழியர்கள் தங்கள் மூங்கிற் குழாயினால் செந்நிற (அரக்கு) நீரை அவள்மீது வீச அச்செந்நிற நீர் அக்காதற்பரத்தையின் மார்பில் பட்டது. அதனை, அவள் துடைக்காது ஒற்றி எடுத்தாள். இதனைக் கண்ட தலைவன் காதற்பரத்தையை நெருங்கினான். காதற்பரத்தையின் தோழியர்கள் தலைவனிடம், ***'இவள் பூப்பெய்தினாள். ஆதலால் இவளை நெருங்காதே'*** என்று பொய் உரைத்தனர். அத்தோழியர்களின் உரையில் பொய் உள்ளது என அறிந்த தலைவன், காதற்பரத்தையின் செஞ்சாந்தின் நாற்றத்தால், காதற்பரத்தைக்குப் பூப்பு இல்லை என்ற உண்மையை உணர்ந்தான். பின்பு, சிறிதும் காலம் தாழ்த்தாது, ***'கடலில் புகுந்த வையையாற்றைப் போல்'*** விரைந்து அவளது இல்லத்திற்கே சென்று அவளை அடைந்து இன்பம் துய்த்தான். இதனைக் கண்ட தோழியர் முதிய பரத்தையரிடம், காதற்பரத்தை பூப்பு எய்தினாள். அவள் பொலிவுடையவளாக ஆகுக! என வாழ்த்தினர். இதனால் காதற்பரத்தை நாணம் கொண்டவளாயினாள். இந்நிகழ்ச்சியைக்

***"சுருங்கையின் ஆயத்தார் சுற்று மெறிந்து***
***குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்***
***பெருந்தகை மீளி வருவானைக் கண்டே***
***இருந்துகிற் றானையி னொற்றிப் பொருந்தலை***
***பூத்தன ணீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்***
***தோற்றமோர் ஒத்த மலர்கமழ் தண்சாந்தின்***
***நாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்***
***திருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்***
***மகிழக் களிப்பட்ட தேன்றேறன் மாற்றிக்***

***குருதி துடையாக் குறுகி மருவினியர்***
***பூத்தன ணங்கை பொலிகென நாணுதல்***
***வாய்த்தன்றால் வையை வரவு"*** *(பரி.:16:20-31)*

எனும் அடிகள் உணர்த்துகின்றன. இவ்வரிகளால் பரத்தையர்க்காயின் இழிந்தன கூறி ***அசதியாடல்*** உண்டு என்பது புலப்படுகிறது. தலைவிக்கு அவ்வாறு கூறுவதில்லை என்னும் அக்கால நெறிமுறை வெளிப்படுகிறது.

வானத்தினின்று பெரிய கங்கையாறுபோல் ஒழுகிய வையையாற்றில் நீராடிய பரத்தையரின் கெண்டைமீன் போன்ற கண்கள், நீராடுவதாலும், கள் உண்ணுவதலாலும், காதலரோடு (தலைவனோடு) ஊடுவதாலும் சிவந்தன. மேலும் அவள் கூந்தலில் இருந்த மலரின் தேன் சிந்த நீராடினர். அப்பரத்தையரைத் தலைவன் மீண்டும் மீண்டும் தழுவினான். அதனால், ஏற்பட்ட வடுவுடைய தலைவனின் மார்பின் தோற்றம் மலையின் தோற்றம் போல் இருந்ததென ஊரார்வழி தோழி அறிந்து வாயில் மறுத்தாள். இவ்வியல்பை

***"கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்,***
***ஓள்ளொளி சேய்தா ஒளிகிளருண் கட்கெண்டை,***
***பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்***
***சென்னீர் வீவயிற் றேன்சோரப் பன்னீர்***
***அடுத்தடுத் தாடுவார் புல்லக் குழைந்து***
***வடுப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்***
***எடுத்தவேய் எக்கி நூக்குயர்பு தாக்கத்***
***தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றம்***
***கொடித்தேரான் வையைக் கியல்பு."*** *(பரி.:16:39-47)*

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன. வையையில் நீராடிய இத்தலைவன் தனதில்லத்திற்குச் சென்று வாயில் வேண்டி நிற்கத் தோழி, ***'தலைவனே! பெருகி வரும் வையையில் பரத்தையுடனே சென்று எப்பொழுதும் நீராடுக! தலைவியைத் தேடி வாராதே!'*** என மறுத்தாள்.

தலைமகளின் பூப்புக்காலம் போல் பரத்தையரும் பூப்புக் காலத்தில் தலைவனுடன் சேருதலைத் தவிர்த்தனர். தலைவன் தன் காம இச்சையைத்

தீர்த்துக்கொள்ள காதற்பரத்தையுடன் புணர்ந்து பின் தலைவியுடன் கூடினான். இதனால் தலைவன் காம உணர்வு மிக்கவனாகக் காணப்பட்டான் என்பதை அறிந்த தலைவி அவனை பரத்தையிடமே செல்க என்று கூறுவதும் உணர முடிகிறது.

### *4.6.5 பரத்தையின் துணிவும் தலைவியின் வருத்தமும்:*

மற்றொரு வையை பற்றிய பாடலில் நல்லந்துவனார், தலைவியின் தோழிக்கும் பரத்தைக்கும் இடையே நடக்கும் ஏசுதலை விவரிக்கிறார். தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் குறித்த காலத்தில் வராததால் பாணன் தூதாய்ச் சென்றான். தலைவனின் கார்ப்பருவ வரவையும், வையையின் நீர் விழாவும் பற்றிக் கூறினான்.

நல்லந்துவனாரின் இப்பாடலுக்குத், ***“தலைவியின் வளையயலையும் ஆரத்தையும் அணிந்த ஒரு பரத்தையை வையைநீராட்டில் கண்ட தலைவியும் தோழியும் அப்பரத்தையைப் பார்த்து வினவுவதாகவும் அவளை இழித்துரைப்பதாகவும் அமைந்து பரத்தமை சங்கப் பிற்காலத்தில் பெற்றிருந்த செல்வாக்கையும் இழிநிலையையும் பரத்தையர்தம் பரவலாக்கத்தையும் வெளிப்படுத்துகின்றது.”*** [18] என்று பெ.மாதையன் விளக்கம் தருகிறார்.

மதுரை மாநகர் மக்கள் விரும்பும் தன்மையாய் வந்த வையை நீரில் நீராட வைகறையில் பெண்கள், மக்கள் என அனைவரும் நீராடச் சென்றனர். அப்போது, தலைவியின் காணாமற் போன வளையல்களையும், முத்து ஆரத்தையும் காதற்பரத்தை அணிந்திருப்பதைத் தலைவியும் தோழியரும் கண்டு மனம் நொந்தனர். ***‘இப்பரத்தை இவ்அணிகலன்களை அணிந்தவள் எனில் இவளே நம் தலைவியின் மாற்றாள்’*** என ஐயுற்றுக் கூறினார் தோழியர். மேலும், தலைவன் தலைவிக்கே தெரியாதவண்ணம் இவ்வாரத்தையும், வளையல்களையும் எடுத்திருப்பதால் அவன் கள்வனாகிறான். அக்கள்வன் அவ்வணிகலன்களை அக்காதற்பரத்தையிடம் அன்பளிப்பாகத் தந்துள்ளான்! எனக் கூறினர். அத்தோழியர்கள், தலைவனைக் கள்வன் என்றதும், அவனின் முகம் மாறி வெளுத்துப் போனதையும் கண்டனர். தலைவியின் தோழிகள் தன்னைக் கண்டும், தன் முத்தாரம் மற்றும்

வளையல்களைக் கண்டும் அவர்களுக்குள் பேசியதைக் கண்ட காதற்பரத்தை ஓடி மக்கள் கூட்டத்திற்கிடையே சென்று மறைந்தாள்.

காதற்பரத்தை ஒளிந்து கொள்வதைப்போல் வெளிறிய முகத்துடன் தலைவனும் அவ்விடம் விட்டுச் சென்றான். இந்நிகழ்ச்சியைப்,

***"புகைவகை தைஇயினார் பூங்கோதை நல்லார்***
***தகைவகை தைஇயினார் தார்;***
***வகைவகை தைஇயினார் மாலை மிகமிகச்***
***சூட்டுங் கண்ணியு மோட்டு வலையமும்***
***இயலணி அணிநிற்ப வேறி யமர்பரப்பின்***
***அயலய லணிநோக்கி ஆங்காங்கு வருபவர்***
***இடுவளை ஆரமோ டீத்தா னுடனாகக்***
***கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு***
***நொந்தவள் மாற்றாள் இவளென நோக்கத்***
***தந்த கள்வன் சமழ்ப்புமுகங் காண்மின்***
***செருச்செய்த வாளி சீற்றத் தலையன்ன***
***நேரிதழ் உண்கணார் நிறைகா டாக***
***ஓடி யொளித்தொய்யப் போவா னிலைகாண்மின்"*** *(பரி.:20:27-39)*

என்னும் அடிகள் எடுத்துரைப்பதைக் காணமுடிகிறது.

காதற்பரத்தை மக்கள் கூட்டத்திற்குள் சென்று மறைந்ததனைக் கண்ட தலைவியின் தோழியர் ***'இவளே! நம் தலைவியின் மாற்றாள்'*** என உறுதியுடன் முடிவு செய்தனர். பின் அவளை அக்கூட்டத்தில் தேடினர். இவர்களின் இச்செயல் வையை பேராறு கடலோடுக் கலந்தது போல் ஆயிற்று. தலைவியின் தோழியர் தன்னைத் தேடுவதை அறிந்த காதற்பரத்தை துணிவு கொண்டவளாய், '***நீவிர், என்னைத் தொடர்ந்து வரக் காரணம் என்ன?'*** என எதிர்த்து நின்று வினா எழுப்பினாள். காதற்பரத்தையின் துணிவை,

***"என வாங்கு,***
***ஓய்யப்போ வாளை, யுறழ்ந்தோளிவ் வாணுதல்***
***வையை மடுத்தாற் கடலெனத் தெய்ய***
***நெறிமண னேடினர் செல்லச்சொல் லேற்று***

*செறிநிறைப்பெண் வல்லுறழ் பியாது தொடர்பென்ன*
*மறலினாள் மாற்றாண்மகள்"* (பரி.:20:40-45)

என்ற அடிகள் விளக்குகின்றன. ***"வையைக் கரையில் திரண்ட மக்களைக் கடலாகவும், அதனை ஊடுருவிச் சென்ற தோழியர் கூட்டத்தை வையையாகவும் கற்பனை செய்துள்ள புலவர் பாராட்டுக்குரியவரன்றோ! காவிரி கடலோடு கலத்தலைப் பாராட்டும் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,***

*"மாமலை அணிந்த கொண்மூப் போலவும்*
*தாய்முலை தழுவிய குழவிப் போலவும்*
*தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்."* (பட்டினப்.:95-97)

***என்று கூறியதனை இதனோடு ஒப்பு நோக்கலாம். இவ்வுமையால், வையையாறு கடலில் சென்று கலந்த காலம் ஒன்றிருந்தமை புலப்படுகிறது."[19] "ஸ்ரீ ஸேது ஸம்ஸ்தானத்திற்கீழ் கடலோரத்தில் ஆற்றங்கரையென்னும் ஊரிலுள்ள சத்திரம், வையை நதி கடலோடு கலக்கும் துறையில் ஸ்நானஞ் செய்ய வருவோர்க்குப் பண்டைக் காலத்தில் அமைக்கப்பெற்றதென்று கேள்வியுண்டு; மதுரை ஜில்லா சரித்திரத்தாலும் இது தெரிகின்றது. திருவாதவூரர் புராணமுடையாரும் பரஞ்சோதி முனிவரும் வையை கடலோடு கலவாமைக்கும் காரணம் கற்பித்தது. கால அடைவில் பாய்ச்சல் மிகுதியால் அது கடலோடு கலத்தல் தவிர்த்ததை நோக்கிப் போலும்!; ' நாரி இடப பாகருக்கு நஞ்சளித்த பாவியென்று வாரியிடம் புகுதா வையையே!' என விளித்தார் பிற்காலப் புலவர் ஒருவர்"*** [20]

***"வையை கடல் மடுத்தால் என வையை ஆறு பரத்தைக்கும் கடல் மகளிர் கூட்டத்துக்கும் உவமை"*** [21] என்கிறார் அ.மாணிக்கம்.

மேலும் காதற்பரத்தை, குலமகளாம் தலைவியிடம் எதிர்த்துப் பேசினாள். அதனைக் கேட்ட தலைவி மருண்டு திகைத்துப் போனாள். தலைவியின் இத்திகைப்பை,

*"வாய் வாளா நின்றாள்,*
*செறிநகை சித்தம் திகைத்து"* (பரி.:20:46-47)

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறாக, சித்தம் கலங்கித் தலைவி நிற்க, அவளின் தோழியருள் ஒருத்தி அக்காதற்பரத்தையை (கணிகை) நோக்கித் தனது காம இன்பத்தைப் பலரும் விரும்பும்படி பேசும் தன்மையள்! பொய்மொழியால் தம்மை நாடி வரும் காமுகரை மயக்கும் விலைமகளாம் கணிகையவள்! தனது பெண்மையைப் பல ஆடவர்களுக்கும் பொதுமையாக்குபவள் இவள்! ஓர் ஆடவரால் பேணப்படாதவள் இவள்! கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று நுகரும் ஐம்புல இன்பங்களை மட்டும் நுகரும் இயல்புடைய காமப்பன்றிகள் நுகர்வதற்குரிய இரண்டு உதடுகளை உடைய தொட்டி போன்றவள் இவள். மேலும் இவள் அழகிய வனப்பான வயலில் முதிராத நறுமணம் மிக்க கள்ளாகிய வலிமைமிக்க நீரைப் பாய்ச்சிக் காமவெறியாகிய கலப்பையை நாட்டித் தங்களுடைய எருது சோம்பலின்றி உழுகின்ற பழைய படைச்சலான முதுசாடி ஆவாள் என ஏசினாள். மேலும், ***‘மடப்பமும் மதர்ப்பமும் (களிப்பு)’*** கொண்ட இவள், தனது மையூட்டிய கண்களையே கயிறாகக் கொண்டு தமது பருத்தத் தோளாகிய தறியிலே கட்டி, வேறு எங்கும் போகவிடாமல் தடுத்துத் தனக்கு மிகுதியான பொருள் தரும் காமுகர்களுக்கே காம இன்பம் தருபவள். காமுகர்களின் இன்பம் மிகையாக்க இக் கணிகையர், யாழிசைப்பர். இவள் யாழிசைப் பொழுதில் கைவளையலும், ஆரமும் அணிந்து தம்மை அழகுப்படுத்திக் கொள்பவள். இவ்வாறு இவள் காமுகர்களுக்கு இன்பம் அளிப்பது இந்த வையைத் துறையைப் போல் பொதுவானவளே! என ஏசுகிறாள். இவ்வாறு கூறியும் பொறாத தோழி மேலும், அப்பரத்தையை நோக்கி, ***‘முன்பு காணாமற் போன தங்களது எருதினைத் தாங்கள் தேடியலைந்து கண்டுபிடித்ததாகவும் அவ்வெருதினை, விளையாடும் குணமுடைய இளமகளிர் காணும்படியாக அடக்கிக் கொண்டு வந்ததாகவும் கூறுகிறாள். மேலும் அவ்வெருதினை வையையாறு எனும் இத்தொழுவத்தில் புகும்படி செய்தது மட்டுமல்ல, அவ்வெருதை நன்கு அடித்து, அதட்டி தம் மாலையைச் சம்மட்டியாகக் கொண்டு அடித்து நையப்புடைத்து, அறங்கூறும் அவையோர் முன்னிலையில், அவ்வெருது தமக்கு உரிமையுடையது என நிறுவிடவே தாங்கள் அவனைப் (பரத்தையை) பின் தொடர்ந்ததாகக்’*** கூறுகிறாள்.

இவ்வாறாகப் பரத்தையை ஏசிய தோழி தொடர்ந்து ***‘எருது தனக்குரிய தொழிலைச் செய்யாது, பிறர்க்குரிய தொழிலைச் செய்யுமாறு விடுவது வேளாளர்க்கு முறையாகாது.***

***தலைவி தான் அணைத்து இன்புறுவதற்குரிய மார்பைப் பரத்தையரான இவளுக்குத் தண்டமாகத் தந்தாள். முத்துமாலையைக் களவாடி அணிந்த இவளின் மார்பும், தலைவியின் மார்பும் ஒன்றாகி விடுமோ?’*** என்றும் கூறி ஏசினாள். இவ்வாறு காதற்பரத்தையைத் தோழி ஏசியதை,

***“ஆயத் தொருத்தி யவளை யமர்காம***
***மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை***
***பெண்மைப் பொதுமைப் பிணையிலி யைம்புலத்தைத்***
***துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த்தொட்டி***
***முற்றா நறுநறா மொய்புன லட்டிக்***
***காரிகைநீர் ஏர்வயற் காமக் களிநாஞ்சில்***
***மூரி தவிர முடுக்கு முதுசாடி***
***மடமதர் உண்கண் கயிறாக வைத்துத்***
***தடமென்றோள் தொட்டுத் தகைத்து மடவிரலால்***
***இட்டார்க் கியாழார்த்தும் பாணியில் எம்மிழையைத்***
***தொட்டார்த்தும் இன்பத் துறைப்பொதுவி கெட்டதைப்***
***பொய்தன் மகளிர்கண் காண இகுத்தந்திவ்***
***வையைத் தொழுவத்துத் தந்து வடித்திடித்து***
***மத்திகை மாலையா மோதி அவையத்துத்***
***தொடர்ந்தேம் எருது தொழில்செய்யா தோட***
***விடுங்கடன் வேளாளர்க் கின்று படர்ந்தியாம்***
***தன்மார்பந் தண்டந் தருமாரத் தாள்மார்பு***
***நின்மார்பு மோரொத்த நீர்மையகொ லென்னாமுன்*** *(பரி.:20:48-65)*

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

பரத்தையர் காமுகரைத் தம்காமப் பார்வையால் வீழ்த்தி, பிணிக்கும் தன்மை உடையவர்கள் என்பதை ***‘மடமதர் உண்கண்’*** என்றும் ***‘மடவிரல்’*** என்றும் ஆசிரியர் கூறுவதைக் காணமுடிகிறது.

பரத்தையர்க்குப் பொருளே இன்றியமையாதது, அதற்காகவே இவர்கள் யாழிசைக்கின்றனர், ***"பாட்டுக் காமத்தை விளைவிக்கும் என்னும் நச்சினார்க்கினியர் உரையும் (மதுரைக் 559-61). மேலும் 'இசையும் கூத்தும் காமத்திற்கு உத்தீபனமாதலின் (சீவக.2597) என்னும் சீவகசிந்தாமணி அடிக்குத் திருத்தக்க தேவரும் கிளை நரம்பிசையும் கூத்தும் கேழ்தெழுந்து ஈன்ற காம விளை பயன் (சீவக.2598) என்பதை"*** [22] நோக்குகையில் இசை காமத்தை அதிகரிக்கும் என்பது புலனாகிறது.

தலைவியின் ஆயத்தாரால் தேடப்பட்ட அப்பரத்தை, இக்கடுஞ்சொற்களைக் கேட்ட அளவிலே கோபம் கொண்டவளாய் தலைவியை ஏசத் தொடங்கினாள். அச்சமயத்தில், அவ்வையை கரையில் இவர்களின் உரையாடல்கள் அனைத்தும் கேட்டுக் கொண்டிருந்த முதுப்பெண்டிர் ஒருத்தி, அப்பரத்தையை நோக்கி அவளை வெறுத்தவளாய்த் ***'தனது கற்புடைமையால் தாம் எண்ணிய அளவிலே தீவினை போக்கச் செய்யுமளவிற் சிறந்த குணம் படைத்தவள் இத்தலைவி. இவளிடம், தீஞ்சொல்லால் ஏசி அறிவின்மையை வெளிப்படுத்த வேண்டாம் என அறிவுறுத்தினாள். மேலும் இப்பாவம் நீங்குவதற்குத் தலைவியை வணங்கிச் சூள் பெறுவாயாக!'*** என்றும் கூறினாள். இது என்றும் துன்பமாய் முடியும் என எண்ணிய காதற்பரத்தை, முதுமகளிரை நோக்கி, ***'அன்னையே! பகைவரைப் பகைவர் வணங்குவது இழிசெயல் என அறிந்திலையோ? அதுப்போல், மாற்றாளை மாற்றாள் வணங்குவது பெருமைக்குரியதல்ல!'*** எனப் பதிலுரைத்தாள். முதுமகளின் அறிவுரையும் பரத்தையின் பதிலுரையையும்.

***"தேடினாள் ஏசச் சிலமகளிர் மற்றதற்***
***கூடினார் வையை யகத்து;***
***சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க***
***மைந்துற்றாய் வெஞ்சொன் மடமயிற் சாயலை***
***வந்திக்க வாரென மனத்தக்க நோயிது***
***வேற்றாரை வேற்றார் தொழுதல் இளிவரவு***
***போற்றாய்காண் அன்னை புரையோய் புரையின்று***
***மாற்றாளை மாற்றாள வரவு;*** *(பரி.:20:66-73)*

என்ற அடிகள் விளக்குகின்றன.

***'சிந்திக்கத் தீரும் பிணியாள்'*** என்ற தொடர் தலைவியின் கற்புடைமையைக் குறிப்பதாகும். நினைத்த அளவில் பாவம் நீங்கும் தன்மையுடையவள் என்ற பொருளில் குலமகளைப் போற்றுகிறாள் முதுமகளிர். இதை

***"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்***
***பெய்யெனப் பெய்யும் மழை"*** ... *(குறள்.55)*

என்ற குறளுடன் ஒப்பிடப்படுகிறது.

***'மாற்றாளை மாற்றாள்'*** எனப் பரத்தை கூறுவதால், தானும், தலைவனுக்குத் தலைவியைப் போல் உரிமையுடையள் என்ற கருத்துடனே உரைக்கிறாள் என்பது அறிய முடிகிறது. ***'மாற்றாள்'*** என்பது ***'சக்களத்தி'*** [23] என மெய்யப்பன் தமிழ் அகராதியில் கூறப்பட்டுள்ளது.

முதுமகளிருடன் பரத்தை வாதாடியதைக் கேட்ட தலைவி, நல்லனவாகிய இனிய சொற்களை மென்மையாகவும், நாணமில்லாமலும் அவையில் சொல்லி ஆட மத்தளத்துடன் வந்த அப்பரத்தையைத் தன் பெருமை விரிவாகக் கூறவேண்டா என்றும், தனது தந்தை தனக்குத் தந்த அவ்வளையலும் முத்தாரமும் (பரத்தையிடம்) வந்த வழி யாது? எனவும் தலைவி வினவினாள்.

மேலும், இவ்வளையலும் ஆரமும் வஞ்சனையால் (களவால்) பரத்தைக்கு வரவில்லை எனில் இவற்றைத் தந்தவன் யாரென்று தனக்குக் காட்டிப் பின்பே அவளின் பெருமையைச் செருக்குடனே கூறட்டும்! என்று பரத்தையிடம் நேரடியாகவே கூறினாள். இவ்வாறு தலைவி நேரடியாகக் கூறிய கூற்றினை,

***"அ.............சொல் நல்லவை நாணாமற்***
***றந்து முழவின் வருவாய்நீ வாய்வாளா***
***எந்தை எனக்கீத்த இடுவளை ஆரப்பூண்***
***வந்தவழி நின்பான் மாயக் களவன்றேல்***
***தந்தானைத் தந்தே தருக்கு"*** *(பரி.:20:74-78)*

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன.

தனக்குத் தன்தந்தை வளையலும் ஆரமும் தந்ததனால் தலைவனுக்கும் அதில் உரிமை இல்லை என்னும் பொருள்படத் தலைவி பேசுகிறாள். மேலும், தலைவனுக்கே உரிமையில்லாத அவ்வளையலையும் ஆரத்தையும் தலைவனிடமிருந்து வஞ்சனையாகக் கவர்ந்து கொண்டாள் இப்பரத்தை' என்று தலைவி சாடுவதைக் காண முடிகிறது. இவ்வாறு இகழ்ந்த தலைவி மேலும்,

***'தந்தானைத் தந்தே தருக்கு'*** என்றதனால், ***'தனது தலைவனையும், அவன் தந்த பொருள்களையும் தன்னிடமே திருப்பித் தருக…'*** எனக் கேட்பதாக அமைகிறது.

தலைவியின் வினாவிற்குப் பதிலுரைக்கும் பொருட்டுக் காதற்பரத்தை, மோசி மல்லிகைப்பூ சூடிய தலைவியே! என விளித்துத் தலைவன் தலைவியைமட்டுமின்றித் தன்னிடமும் மிக்க அன்பு கொண்டவன். ஆதலால், இவ்வளையல் மற்றும் மாலையைத் தலைவன் புணர்ச்சிக்குரிய விலையாகத் தனக்குத் தந்தான். அவைமட்டுமல்ல, இவற்றைத் தவிர தலைவியின் காற்சிலம்பையும் நாளையே (பரத்தை) தனக்குக் கிடைக்கும்படி செய்யவல்லவள். ஆதலால் தான் ***'கள்வி அல்ல; தலைவனே கள்வனாவான்'*** என்றும் கூறி, தலைவியால் முடிந்தால் தலைவனைக் காப்பாற்றிக் கொள்ளட்டும்! எனச் சவால் விடும் வகையில் பேசுகிறாள்.

"***காம இன்பத்தை நுகர்வதற்கு உன் ஆரத்தைத் தந்தவன் நாளை உனது காற்சிலம்பையும் என்பொருட்டுக் கழற்றுவான் எனக் கூறித் தலைவனே கள்வன் என்கின்றாள் பரத்தை. இவ்வாறு நீளும் இந்த உரையாடல் பரத்தமையின் செல்வாக்கையும் அது மனைவியர்களால் இகழப்பட்டதையும் வெளிப்படுத்திப் பரத்தமை சமுதாய அங்கமாக மாறிப்போய்விட்ட நிலையையும் உணர்த்துகின்றது***" [24] தலைவன் தனது பரத்தமைக்காகக் திருடும் தொழிலைச் செய்யும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டதை பெ.மாதையன் எடுத்துரைக்கிறார்.

இதனால் பரத்தையானவள்; புணர்ச்சிக்குரிய விலை என்றும், தலைவிக்குச் சமமாகத் தானும் இருப்பவள் என்றும், மறுநாளும் தலைவனை அடைவேன்! என்றும் சவால்விடும் மொழியில் செருக்குடன் பேசுவதனை அறிய முடிகிறது. பரத்தையின் இத்தகு ஆணவத்தைப் குறுந்தொகை (80) பாடலும் எடுத்துரைக்கிறது (இயல்-2;பக்…..,பார்க்க)

பரத்தையின் செருக்கான பேச்சால் தலைவி அதிர்ச்சியுற்று நிற்க, அவ்விடத்தில் இந்நிகழ்வுகளை எல்லாம் நொதுமற் (அறம் கூறும் முதியவள்) பெண்டிர் கேட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் அவ்விரு வரையும் சமாதானப்படுத்த முயன்றனர். முதலில் பரத்தையிடம், '***கண்டோரை தம் அழகால் மயக்கும் பெண்மானைப்போன்ற இயல்புடையவளே!'*** நின்னை விரும்பும் காமுகராகிய ஆடவர் தரும் பொருட்கள் அனைத்தும் நினக்கே சொந்தமாகும். எனவே, தலைவியை எதிர்ப்பதைக் கைவிடுக! என்றனர். அறங்கூறும் முதுமகளிரின் அமைதிப்படுத்தும் இச்சொற்களை,

"***வச்சிய மானே! மறலினை மாற்றுமக்கு***
***நச்சினார் ஈபவை நாடறிய நும்மவே"*** *(பரி.:20:84-85)*

என்ற வரிகளால் அறிய முடிகின்றன. ***"இக்கூற்றுக்குரியார் தலைவியின் ஆயத்தோரினும் வேறான 'நொதுமற் பெண்டிர்' என்பர் அறிஞர்"*** [25] என்கிறார் அ.தட்சிணாமூர்த்தி. இப்பெண்டிரின் உரையால்,

***"பண்டைச் சமூகத்தில் பரத்தமை நிலவியது என்றும், அதிலீடுபட்டோரைக் குற்றமுடையோராய்க் கருதித் தண்டிக்க முற்படவில்லையென்பதும் தமிழ்நூல்களால் அறியப்படும். ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைப் பெறும் பண்ட மாற்றுப்போல மிக இயற்கையானது, பரத்தையர் தம்மை விரும்புவாரிடமிருந்து பெறும் பொருளைத் துய்க்க உரிமை கொண்டாடுவது என்பது பட இப்பெண்டிர் பேசுவது காணலாம். கண்டவரைக் கவரும் பேரழகுடையவள் என்றும், மான் என்றும் அப்பெண்டிர் பாராட்டிக் கூறிய சொற்கள், தன் அழகுபற்றிப் பெரிதும் தருக்குக் கொள்ளும் அப்பரத்தைக்கு உவப்பாதலில் வியப்பில்லை. அவள் அமைதியடைவதற்கு ஏற்ப, அவள் உரிமையைத் தாமும் ஏற்றுப் பேசியது உளவியல் சார்ந்த நுட்பமுடையதாகின்றது. 'நாடறிய நும்மவே' என்று கூறியது அந்நாள்***

***தமிழ்ச்சமூகம் பரத்தையர் தம் உடலை விற்று, அதனாற் பெறும் பொருட்கு உரிமையுடையார் என்ற நடைமுறை உண்மையை முழுமையாக ஏற்றுக் கொண்டது என்பதனை உணர்த்துவதாகும்.”*** [26]

***“பரத்தையை விரும்பியவன் அவளுக்குத் தரும் பொருள்கள் அவளுக்கே உரிமை உடையவை என்பதை உணர்த்தும் ‘நச்சினார் ஈபவை நாடறிய நும்மவே’(85) எனும் அடியும் இந்தப் பாடலில் இடம் பெற்றுள்ளது. பொருட்பெண்டிராகிப்போன பரத்தையர் இயல்பை மதுரைக் காஞ்சியைப் போல் இந்தப் பாடலும் வெளிப்படுத்தியுள்ளது. இந்தப் பாடலின் இறுதியில் ஆடவரின் பரத்தமைச் செயற்பாடு இயல்பானதே அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டியது கற்புடைய மனைவியின் கடமை என்பதும் அறிவுறுத்தப்பட்டுள்ளது.”*** [27] என்று பரத்தைக்குத் தந்த சுதந்திரத்தையும் தலைவிக்குத் தந்த வரைமுறையும் பெ.மாதைய்யனின் கருத்தால் உணர முடிகிறது. அம்முதுப்பெண்டிர் பரத்தையை மட்டும் அல்லாமல் தலைவியையும் அமைதிப்படுத்த முயன்றனர். மேலும்

***“சேக்கை இனியார்பாற் செல்வான் மனையாளாற்***
***காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா***
***தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்***
***இகழினுங் கேள்வரை யேத்தி இறைஞ்சுவார்***
***நிகழ்வ தறியாது நில்லுநீ நல்லாய்***
***மகளிரை மைந்துற் றமர்புற்ற மைந்தர்***
***அகலங் கடிகுவே மென்பவை யார்க்கானும்***
***முடிபொரு ளன்று முனியல் முனியல்***
***கடவரை நிற்குமோ காமங் கொடியியலாய்*** *(பரி.:20:86-94)*

என்று உலக இயல்பு அறியாதவளாகத் தலைவி இருக்கின்றாள் என்றும் கூறுகின்றனர். தலைவிக்கு அறிவுரை கூறும் இவ்வடிகளில் முதுமகளிர், நல்ல பண்புக்குரிய தலைவியின் அன்பைக் கொள்ளாது ஓர் ஆடவன் பரத்தையர்பால் செல்வது இயல்பே. அத்தகு இயல்புடையவனை மனைவி பரத்தைபால் செல்வதைத் தடுத்தாலும், அல்லது தலைவன் பரத்தை இல்லத்திற்குச் சென்று வந்ததனால் அவனை விட்டு விலகி தனித்துத்தான் வாழ முடியுமா? என வினவுகிறாள். தனித்து வாழ இயலாத சான்றாண்மை

மிக்க கற்புடை மகளிரை, அவர்தம் கணவன் இகழ்ந்து ஒதுக்க நேர்ந்த போதும், பெண்ணானவள் கணவனையே சார்ந்து வணங்கி வாழ்வதே இயல்பாகும். பரத்தையரிடத்தே மயங்கி, அவளுடன் வாழ்ந்த ஆடவரை இனித் தழுவமாட்டோம் என உறுதி கூறி வாழுதல் குலப்பெண்டிருக்கு முறையன்று. ஆதலால் தலைவனை வெறுப்பதைக் கைவிடுக!' என்று அறிவுறித்தினர். மேலும், காமம் என்பது தக்கவழியில் நிற்கக் கூடியதல்ல எனவும் அறிவுறுத்துகிறாள் அம்முதுபெண்டிர். ***'புணர்ச்சியின்பத்தைப் பெரிதும் இன்பம் உடையதாக்கி அனுபவிக்கச் செய்யும் பரத்தையர். அதாவது பரத்தையர் இயற்கையான இன்பத்தையும் அளிப்பர். அது குலமகளிர் பால் இல்லை'*** எனவும் கருதப்பட்டது. அதாவது "***குலப் பிறப்பாட்டியர் போல் நாணத்தின் காரணமாக வரையறைக்குட்படுவாரன்றி, ஆடவர் விரும்பியவாரெல்லாம் இன்பம் கொடுக்கும் காமக்கலை நுட்பம் மிக்கார். ஆடலும் பாடலும் நிகழ்த்தியும் கள்வெறியூட்டியும் இன்பம் தருதல் அவர்க்கு இயல்பு"***[28] என்று அ.தட்சிணாமூர்த்தி கூறுகின்றார்.

இவ்வடிகள், ***"கட்டுக்கடங்காத காமவேட்கையாளர்களைக் கணவன்மார்களாகப் பெற்ற பெண்டிர், அது காரணமாக வெறுத்து ஒதுக்க இயலாது என்ற அறிவுரை பொருள் பொதிந்ததாகும். இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவர் குலமாதர் என்றது. அவர்கள் அங்ஙனம் வாழ்வது தவிர வேறு வழியில்லை என்பது குறித்ததே. இ:்து ஆணாதிக்கச் சமூகத்தின் இயல்பாகும்."***[29] என்று அ.தட்சிணாமூர்த்தி கூறுகின்றார்.

பண்டைச் சமூகத்தில் தீயொழுக்கம் கொண்ட கணவனை விட்டு, ***'மணவிலக்கு'*** (divorce) கொள்ளவோ, மறுமணம் செய்து கொள்ளவோ அனுமதிக்கவில்லை. ***"அற்றை சமூகத்தில் பெண்டிர்க்கு இருந்த காப்பற்ற நிலமைக்கு"***[30] ***அகப்பாடலும் (316) சான்றாக அமைந்திருப்பதை காணமுடிகிறது.***

***"தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்***
***டன்னா வென்னுங் குழவி போல***
***இன்னா செயினு மினிநுதலை யளிப்பினும்***
***நின்வரைப் பினளென் றோழி"*** *(குறுந்.397)*

என்று குறுந்தொகையும் கூறுகின்றது.

தன் கணவனின் பிழைகளை முற்றும் வெறுத்து ஒதுக்காமலும், பொறுத்துக் கொண்டு வாழும் பெண்மையின் தன்மையை,

***"கடைஇய நின்மார்பு தோயலம் என்னும்***
***இடையு நிறையும் எளிதோநிற் காணின்***
***கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோ***
***டுடன்வாழ் பகையுடை யார்க்கு"*** *(கலித்: 77: 21-24)*

***"புலப்பேன்யா னென்பேன்மன் அந்நிலையே அவற்காணின்***
***கலப்பே னென்னுமிக் கையறு நெஞ்சே"*** *(கலித்.:67:8-9)*

என்ற கலித்தொகை பாடல் அடிகளும் காட்டுகின்றன.

***"மனைவி கணவனையே முழுமையாகச் சார்ந்து நிற்கும் நிலையைக் காட்டுகின்றது. இத்தகு பண்பாட்டையே, 'கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக் குலமகள்போல' எனப் பிற்காலக் குலசேகரப் பெருமானும் காட்டினார்."***[31]

பரத்தையரும் தலைவியரும் அல்லது பரத்தையும் தலைவியின் தோழியும் நேருக்கு நேர் உரையாடுதலையும், இழித்துப் பேசுதலையும் பரிபாடல் ஒன்றில் தவிரப் பிற அகநூல்களுள் காண இயலவில்லை. இது ஒரு புதுமையான போக்காகும்.

மேலும் இப்பாடலில் தலைவியும், தலைவியின் தோழியும் பரத்தையை ஏசுதலும் பதிலுக்குப் பரத்தை தலைவியை ஏசுதலும் காண முடிகின்றன. மேலும், கற்புடை மகளிர் தெய்வத்தன்மை பொருந்தியவர்; முனிவர் சொல்போல் இவர்களின் சொல்லும் தவறாது பலிக்கும் எனவும், இவர்களால் நாட்டில் வளமும் மழையும் பெய்யும்; தலைவன் பரத்தைக்குக் கையூட்டுத் தந்து தனதாசையை நிறைவேற்றிக் கொண்டான் அஃது தலைவியின் பொருளே ஆயினும் தலைவன் தந்தமையால் பரத்தைக்கே சொந்தம்; இதனால் குலமகளிராம் பெண்கள் ஆண்களைச் சார்ந்தே வாழவேண்டிய கட்டாயத்தையும் உணர்த்துகிறது இப்பாடல்.

பரிபாடல் வையைப்பாடல் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தையும் தலைவி பெற்ற இடத்தையும் பரத்தை பெற்ற சுதந்திர பேச்சுரிமையையும் காட்டுகிறது. தலைவி, தலைவனின் பரத்தமையை ஏற்றுக் கொள்ளாமல் சூளுரைப்பதைப் பின்வரும் நல்லந்துவனாரின் செவ்வேள் பாடலிலும் காண முடிகின்றது.

### *4.6.6 தலைவனின் பரத்தமையை விரும்பாத தலைவி:*

செவ்வேள் முருகனின் திருப்பரங்குன்ற விழாவிற்குத் தலைவன் தலைவி உட்பட ஊரார் அனைவரும் திரண்டனர். பரத்தையர் சேரியினின்று அக்குன்றத்து விழாவிற்குப் பரத்தையைப் புணர்ந்ததால் உடலில் ஏற்பட்ட மனம் மாறாமல் தலைவன் வந்தான். அதனை அறிந்த தலைவி ஊடல் கொண்டாள். தலைவியின் ஊடலைத் தணிப்பதற்குத் தலைவன் தலைவியிடம், களவுப் புணர்ச்சியைப் பற்றியும் அதன்வழி பெற்ற இன்பத்தையும் கூறலானான். அதுகேட்ட தலைவி புலந்து, அயல் மகளிருக்காகப் பகலில் தன்னை விட்டுச் சென்று மீண்டும் இரவு வந்து சூளுரைப்பதை விடவேண்டும் எனக் கூறினாள். தலைவனோ தனது உடம்பின் மனமானது திருப்பரங்குன்றத்தின் கனி மற்றும் மலரின் வாசமே என்று பதில் உரைக்கின்றான். இதனைக் கண்ட தோழி தகுதியில்லாத மகனே! எனத் தலைவனைப் பழிக்கிறாள். இந்நிகழ்வினைத்

*“தூதேய வண்டின் றெழுதி முரல்வவர்*
*காதன்மு தூர்மதில் கம்பலைத் தன்று*
*வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி*
*நெடுமென் பணைத்தோட் குறுந்தொடி மகளிர்*
*ஆராக் காம மார்பொழிற் பாயல்*
*வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி*
*முடியா நுகர்ச்சி முற்றாக் காதல்*
*அடியோர் மைந்த ரகலத் தகலா*
*அலர்ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி*
*புலரா மகிழ்மறப் பறியாது நல்கும்*
*சிறப்பிற்றே தண்பரங் குன்று*
*இனிமன்னு மேதிலர் நாறுதி யாண்டுப்*

***பனிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர்***
***மாலைக்கு மாலை வரூஉம் வரைசூணில்***
***காலைப்போய் மாலை வரவு***
***இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்***
***பனிமொழி சாரலும் பார்ப்பாரும்......***
***துனியன் மலருண்கண் சொல்வேறு நாற்றம்***
***கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது***
***துனிய னனிநீநின் சூள்"*** *(பரி.8:36-55)*

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. இப்பாடல்வழித் தலைவனின் பரத்தமை யொழுக்கத்தைத் தலைவி விரும்பவில்லை என்பதையும் தலைவன் தலைவியை ஏமாற்றுபவனாக இருந்தான் என்பதையும் உணரமுடிகின்றது.

மற்றொரு செவ்வேள் பாடலில் தலைவனின் பரத்தமைஒழுக்கத்தை விரும்பாமல் தலைவி வருந்திக் கூறுவதை நப்பண்ணனார் எடுத்துரைக்கிறார். குன்றத்துக் குமரனின் புகழைப்பாடும் பாணன் தலைவனின் ஒழுக்கத்தைக் கூறுகின்றான். பாணனின் எண்ணத்திற்கும் தலைவனின் உடலில் உள்ள வடுவிற்கும் தலைவி பதிலுரைப்பதாய் கூற்று அமைகின்றது. இதனை,

***"ஐவளம் பூத்த அணிதிகழ் குன்றின்மேல்***
***மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்***
***கைவளம் பூத்த வடுவொடு காணாய்நீ***
***மொய்வளம் பூத்த முயக்கம்யாங் கைப்படுத்தேம்***
***மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி***
***கைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம்***
***பூத்தன பாணாநின் பாட்டு"*** *(பரி:18:15-21)*

என்ற வரிகளில் காணமுடிகின்றது. தலைவியின் ஊடலைத் தீர்க்கத் தலைவன் பாணனைத் தூதாக அனுப்பினான். தூதாக வந்த பாணன் தலைவியிடம, ***'தலைவன் தூயவன்; பரத்தமை அற்றவன்'*** என்று கூறினான். பாணனின் உரையைக் கேட்ட தலைவி, தலைவனின் உடலில் ஏற்பட்ட வடு பரத்தையரது தழுவலால் வந்தது என்று உறுதிபடக் கூறுகின்றாள். மேலும் பாணன் பாடிய பாட்டு பொய்ம்மைமிக்கது என்றும் கூறினாள். இவ்வாறு

தலைவனின் பரத்தமையைக் கண்டு வருந்தி ஊடும் தலைவியைக் காணமுடிகின்றது. மேலும், பரத்தையர் தொடியாலும் நகத்தாலும் வடுச் செய்தலைக் கண்டு தலைவி ஊடுவதைத்

> "***தொடியும் உகிரும் படையாக நுந்தை***
> ***கடியுடை மார்பில் சிறுகண்ணும் உட்காள்***
> ***வடுவுங் குறித்தாங்கே செய்யும்"*** *(கலித்:82:28-30)*

என்ற கலித்தொகைப் பாடலிலும் காண முடிகின்றது.

தலைவனின் பரத்தமையைப் பாணன் நன்கு அறிந்திருந்தும் தலைவியின் ஊடலைத் தீர்க்கவும், தலைவியும் தலைவனும் சேர வேண்டும் என்ற நல்லெண்ணம் கொண்டவனாகவும் காணப்படுகின்றான். தலைவி, தலைவனின் பரத்தமை நன்கு அறிந்தவளாகவும், அதனை ஏற்றுக் கொள்ளாதவளாகவும் உள்ளாள் என்பதை இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவியிடம் கூறாமல் மறைப்பதற்கு அக்காலத்தில் தலைவன் பாணனுக்குப் பரிசில் வழங்கியிருக்கிறான் என்ற கருத்தும் பெறப்படுகிறது.

### *4.7 தொகுப்புரை:*

பரிபாடலில் வையை பற்றிய பாடல்களில் பரத்தையர் இடம் பெறுகின்றனர். புனல் விளையாட்டில் தலைவனுடன் கூடி அப்பரத்தையர் இன்பம் பெறுவதாய்க் காட்டப்படுகின்றது. வையையின் சிறப்புகளை '***நல்லந்துவனார், மையோடக் கோவனார், கரும்பிள்ளை பூதனார், நல்வழுதியார், நல்லிழிசியார்'*** ஆகிய புலவர்கள் தங்களது பாடல்களில் மாமதுரை வையையில் ஆழிமழையால் ஏற்படும் புதுவெள்ளமும், அவ்வெள்ளத்தால் மக்கள் பெரும் இன்பத்தையும் எடுத்துரைக்கின்றனர். அத்தகு வையையில் தலைவனுடன் இற்பரத்தை நீராடலும், அதனால் ஊடல் கொண்ட காதற்பரத்தைக்குத் தழைகளையும் மலர்களையும் தலைவன் தந்து ஊடல் தீர்த்தலும் பின் அவளுடன் கூடி மகிழ்ந்து வையை நீராடலும் காட்டுகின்றனர். மேலும் பரத்தையர் புனல்விளையாட்டின்போது ஒருவருக்கொருவர் வண்ணநீர்ப்பாய்ச்சி விளையாடுதலும், அதனால் தலைவன் பரத்தையுடன் கூடுவதற்குவழி ஏற்படுத்துதலும் பரத்தையரிடம் தலைவியின்

வளையல், ஆரத்தை ஈடாகக் கொடுத்துப் புணரின்பத்தைத் தலைவன் பெறுதலும், அவற்றை அறிந்த தலைவி பரத்தையை ஏசுதலும், ஏசிய தலைவியைப் பரத்தைக் கடுஞ் சொற்களால் ஏசுதலும் இப்பாடல்களில் காண முடிகின்றது.

மேலும், தலைவன் பல்வேறு பரத்தையிடத்தே செல்வது இயல்பே என முதுமகளிர் கூற்றுவழி அறிய முடிகின்றது. பரிபாடல் குலமகளிர், ஆடவர்கள் தவறு இழைப்பினும் அவர்களையே சார்ந்து வாழ வேண்டும் என்றும் இஃதே உலக இயல்பு எனவும் பறைசாற்றுதலையும் அறிய முடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), பரிபாடல் மூலமும் உரையும, (அணிந்துரை), பக்.2
2. மாணிக்கம், அ., (உ.ஆ), சங்க இலக்கியங்கள் தொகுதி-6,பரிபாடல் பக்.4
3. மேலது, பக்.4
4. ஜெயராமன் நா., சங்கத் தமிழ் செய்யுட்கோவை, பக்.232
5. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), மேலது, அணிந்துரை, பக்.14
6. இளம்பூரணனார் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், பக்.487
7. சாமிநாதையர் உ.வே., (பதிப்பாசிரியர்), பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும், பக்.9
8. மாணிக்கம், அ., (உ.ஆ), மேலது, பக்.6
9. சாமிநாதையர் உ.வே., (உ.ஆ), பதிப்பாசிரியர், மேலது, பக்.xxvii
10. சுப்பிரமணியன், பெ.,(உ.ஆ), சங்க இலக்கியம் பரிபாடல்,பக்.445
11. சாமிநாதையர் உ.வே., (பதிப்பாசிரியர்), மேலது, பக்.xvi
12. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பக்.221
13. சாமிநாதையர் உ.வே., (பதிப்பாசிரியர்), மேலது, பக்.54
14. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.90
15. சுப்பிரமணியன், பெ., (உ.ஆ), மேலது, பக்.155
16. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ),மேலது, பக்.93
17. சுப்பிரமணியன், பெ., (உ.ஆ), மேலது, பக்.281
18. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.142
19. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.534
20. மேலது, பக்.535
21. மாணிக்கம், அ.,(உ.ஆ), மேலது, பரிபாடல் பக்.485
22. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.543
23. சுப்பிரமணியன், ச.வே.,(பதிப்பாசிரியர்), மெய்யப்பன் தமிழகராதி, பக்.449
24. மாதையன், பெ., மேலது, பக்.143
25. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.553
26. மேலது, பக்.553

27. மாதையன், பெ., மேலது, பக்.143
28. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),மேலது, பக்.555
29. மேலது, பக்.555
30. மேலது, பக்.556
31. மேலது, பக்.556-557

# இயல் - ஐந்து

## பொருளடக்கம்

# இயல் ஐந்து
# புறநானூறும் பரத்தமையும்

**5.0 முன்னுரை:**

சங்கத் தமிழர்களின் பெருமையைப் பறைசாற்றும் எட்டுத் தொகை நூல்களில் புறநானூறும் ஒன்றாகும். பழந்தமிழர்களின் கல்வி, அறம், அரசியல், சமுதாயம், வீரம், கொடை, பண்பு விருந்தோம்பல், பழக்கவழக்கம் புகழ் எனப் புறச்செய்திகள் அனைத்தும் புறநானூறு விளக்குகின்றது. முடியுடை மூவேந்தர்கள், கடையெழு வள்ளல்கள், சிற்றரசர்கள் ஆகியோரின் வீரத்தையும் பெருமையையும், புகழையும், கொடையையும் புறநானூறு எடுத்துரைக்கின்றது. மக்களின் துன்பங்களைப் போக்கி நல்லாட்சி புரிந்தனர் அரசர்கள். கைம்மாறு கருதாது புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பரிசில்களை வாரிவழங்கி அவர்களுடன் நட்புப் பூண்டனர் அரசர்கள். புவியாளும் வேந்தர்களும் கவிபாடும் திறம் கொண்டவர்கள் என்பதைத் ***'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன், ஒல்லையூர் பூதப் பாண்டியன், சோழன் நலங்கிள்ளி, கிள்ளிவளவன், சேரமான் கணைக்கால் இரும்பொறை'*** போன்றோர்களால் அறிய முடிகிறது. குடிமக்களில் குற்றம் புரிந்தோர்களுக்கு அரசர் தண்டனைத் தந்தார். அவ்வரசர்களும் சில நேரங்களில் தவறிழைத்தனர். மண்ணாளும் மன்னர்களின் தவறைப் புலவர்கள் சுட்டிக்காட்டியும் எடுத்துரைத்தும் அவர்களை நல்வழிப்படுத்திப் பாடியமை புறநானூற்றால் அறியமுடிகிறது.

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, பரிபாடல், கலித்தொகை வரிசையில் புறநானூற்றில் பேகனின் பரத்தமையொழுக்கம் பேசப்பட்டுள்ளமை அறிய முடிகின்றது. பேகனின் பரத்தமையொழுக்கம் விரும்பாத புலவர்கள் அவ்வரசரை நல்வழிப்படுத்தியமை இவ்வியல் எடுத்துரைக்கிறது.

***"ஏறத்தாழ கி.மு. 200 முதல் கி.பி. 200 வரையிலான 400 ஆண்டுகால வரலாற்றின் ஆதாரமாக நமக்குக் கிடைத்துள்ள சங்க இலக்கியங்கள்.***

***“எம்போல் ஒருத்தி நலன்நயந்து என்றும்***

***வரூஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்”*** *(புறம்.:144:11-12)*

***என அரசனின் பரத்தமை முதற்கொண்டு கலித்தொகைத் தலைவனின் பரத்தமை வரை பலதரப்பட்ட ஆண்களின் பரத்தமையையும் பேசியுள்ளன”*** [1] என்று பெ.மாதையன் அரசனின் பரத்தமையைச் சுட்டிக் காட்டுகிறார்.

### *5.1 பேகனின் பரத்தமையொழுக்கம்:*

கடையெழு வள்ளல்களுள் ஒருவர் வையாவிக்கோப் பெரும்பேகன். நல்லூர் என்ற மலைநாட்டுச் சிற்றரசன் இப்பேகன் மயிலுக்குப் போர்வை அளித்தவன். ‘ஆவிநன்குடி’ என்னும் குடியைச் சேர்ந்த பேகன் தன் மனைவி கண்ணகியை விடுத்துப் பரத்தையுடன் பொழுது கழித்ததை அறிந்தனர் புலவர்கள். பேகனின் மனைவியின் துயரைப் போக்கவும், பேகனை நல்வழிப் படுத்தவும் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் ஆகிய புலவர்கள் முயற்சி செய்தனர். புலவர்களின் அறிவுரையால் பேகன் மனம் திருந்தித் தன் மனைவியுடன் கூடி நலமடைந்தான் என்பதைப் புறப்பாடல்வழி அறியமுடிகிறது.

### *5.2 குறுங்கலி:*

பேகனின் இப்பரத்தமையொழுக்கத்தைச் சுட்டி அறிவுறுத்துவது ***‘குறுங்கலி’*** என்னும் துறையில் அடங்கும். குறுங்கலி என்பது வேற்று மகளை விரும்பியவனின் காதல்கெடும்படிச் சொன்னது என்பதை

***“நாறிருங் கூந்தன் மகளிரை நயப்ப***

***வேறுபாடு வேட்கை வீயக் கூறின்று”*** *(பு.வெ.இருபாற்பெருந்திணை-18)*

என்ற நூற்பாவால் அறிய முடிகிறது. அதாவது, ***‘ஒருவனால் துறக்கப்பட்ட அவன் மனைவியை அவனொடு கூட்டுவிக்கும் பொருட்டு, நீ இவள்பால் அருள் செய்யவேண்டும் என வேண்டுதல”*** [2] ஆகும். இக்குறுங்கலி என்னும் துறைவழியாகப் பேகனின் புறத்தொழுக்கத்தைக் கபிலர் ஒரு பாடலிலும்

பரணர் மூன்று பாடலிலும், அரிசில்கிழார் ஒரு பாடலிலும், பெருங்குன்றூர்க் கிழார் ஒரு பாடலிலும் பாடியுள்ளனர்.

***5.3 பரணரும் பேகனும்:***

தம்மை நாடிவரும் இரவலர்கள் வல்லவராக இருப்பினும், வல்லவராக இல்லாது போயினும், புதியவராயினும் பழையவராயினும் எல்லாரிடத்திலும் வேறுபாடின்றி வரையாது வாரி வழங்குவதில் வல்லவராவார் பேகன். மறுபிறப்பைக் கருதிக் கொடை செய்யாது பிறரது வறுமையைப் போக்கவே கொடையளித்தவர் பேகன். மயிலுக்குப் போர்வை அளித்த பேகனைப் பரணர்,

***"உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்***
***படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ"*** *(புறம்:141:10-11)*

எனப் புகழ்கின்றார். மேலும் வேறுபாடின்றி வாரி வழங்குதலைக் ***"கொடைமடம் படுதல்"*** (புறம்:142:5) எனவும் பாராட்டுகிறார். கொடையிலும், வீரத்திலும் சிறந்த பேகன் தன் மனைவி கண்ணகியை விடுத்து நல்லூர்ப் பரத்தையிடம் புறவொழுக்கம் கொண்டிருந்தான். அதனால் பரணர் பேகனைத் திருத்தும் நோக்குடன், அவன் தவறைச் சுட்டிக் காண்பித்தார். ***'மனைவியைத் துன்பத்திற்கு ஆளாக்கி, வேறு பெண்ணுடன் வாழ்வது கொடியது. ஆதலால் இப்போதே அவன் தன் தேரில் ஏறித் தன் மலைக்குச் சென்று அவளின் கண்ணீரைத் துடைத்து அருள்க!'*** என்று அறிவுறுத்தினார்.

இதனையே தனது சங்கத் தமிழில் ***"அருளா யாகலோ கொடிதே என்று அவளுக்காக அன்பு காட்டாவிடில் அது மிகக்கொடியது என்றார் பரணர்."*** [3] என்று மு.கருணாநிதி கூறுவது அறியமுடிகிறது.

பரணர் பேகன் தரும் பரிசிலையும் ஏற்காது அவ்வரசன் இல்லறம் ஓம்புவதனையே வேண்டி நின்றனர். அதனையே தங்களுக்குக் கிடைத்த பரிசில் என்றும் கூறுகின்றனர்.

***5.4 கபிலரும் பேகனும்:***

மழை சூழ்ந்து வளம் தந்த பேகனது மலையில் பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனுடன் சேர்க்க எண்ணிய கபிலர்,

***“நின்னும் நின் மலையும் பாட இன்னாது***
***இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்***
***முலையகம் நனைப்ப விம்மி***
***குழல்இனை வதுபோல் அழுதனள் பெரிதே”*** *(புறம்:143:12-15)*

என்ற இவ்வரிகளால் கபிலர் பேகனின் வளம் நிறைந்த மலை மழையில் நனைவதை விட, அவள் மனைவியின் துயரக் கண்ணீரால் அவள் மார்பு அதிகம் நனைகிறது என்றுகூறி அறம் உணர்த்துகின்றார். அக்கண்ணீரைத் துடைப்பதே அறமாகும் என்று அவர் எடுத்துரைக்கிறார்.

இதனையே மு.கருணாநிதி, ***“மாளிகையின் நல்விளக்கு மதிப்பற்றுக் கிடக்கும் நிலை, மன்னவனை நினைத்தழுது ஒளிமங்கிப்போன நிலை, எடுத்துரைத்துக் கபிலர் எனும் தமிழ்க் கிழவர்; தடுத்துரைத்தார் -‘பரத்தையின் தழுவல் விடுத்து; விரைந்திடுக கண்ணகியாள் வீட்டுக்கெ’ன்று, வரைந்தளித்தார் சங்கப்பாடல் ஒன்று.”*** [4] என்று எடுத்துரைப்பதும் அறிய முடிகின்றது.

கபிலரும் பரணரைப் போன்றே ***‘பேகன் இல்லறம் ஓம்புதலே பரிசிலாகும்’*** என்று கூறுவது அறியமுடிகிறது.

### *5.5 அரிசில்கிழாரும் பேகனும்:*

பேகனின் புறத்தொழுக்கத்தை அறிந்த அரிசில்கிழாரும் பரிசில் வேண்டிப் பேகனைப் பாடினார். அப்பரிசிலும், ‘பேகன், அவன்தன் பிரிந்து வாழும் மனைவியிடம் சென்று சேர்ந்து கூந்தலில் பூச்சூடி மகிழ்ந்து அருளலே ஆகும் எனக் கூறுவதனை,

***“நல்கா மையின் நைவரச் சாஅய்***
***அருந் துயர் உழக்கும் நின் திருந்து இழை அரிவை***
***கலி மயில் கலாவம் கால் குவித்தனன்,***
***ஒலி மென் கூந்தற் கமழ் புகை கொளீஇ,***
***தண் கமழ் கோதை புனைய,***
***வண் பரி நெடுந்தேர் பூண்க, நின் மாவே”*** *(புறம்: 146:6-11)*

என்ற வரிகளால் அறிய முடிகின்றது. மு.கருணாநிதி, "***கலாபத்தின் தோகையெனும் கண்ணகியின் கூந்தலிலே, கமழ் மணப் புகையேற்றி களிப்பு துள்ள; அவள், கழுத்தினிலே மாலைசூடிக் கலந்து மகிழ – ஒரு, கணத்தினிலே புரவிகளைத் தேரில் பூட்டிடுக என்றார்!"*** [5] என்று அரிசில்கிழாரின் அறிவுறுத்துதலை குறிப்பிடுகிறார்.

***5.6 பெருங்குன்றூர்க்கிழாரும் பேகனும்:***

பரணர், கபிலர், அரிசில்கிழாரைத் தொடர்ந்து பெருங்குன்றூர்க் கிழாரும் பேகனைத் திருத்த அறிவுரைக் கூறியதை,

***"கார் வான் இன் உறை தமியள் கேளா***
***நெருநல் ஒரு சிறைப் புலம்புகொண்டு உறையும்***
***அரி மதர் மழைக் கண், அம் மா அரிவை***
***நெய்யொடு துறந்த மை இருங் கூந்தல்***
***மண்ணுறு மணியின் மாசு அற மண்ணி***
***புது மலர் கஞல, இன்று பெயரின்***
***அதுமன் எம் பரிசில் - ஆவியர் கோவே"*** *(புறம்:147:3-9)*

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. அரிசில் கிழாரைப் போலவே இவரும் பேகன், நெய்யிடாத பூச்சூடாத அவன்தன் மனைவியின் கூந்தலில் பூச்சூடி நல்லறம் மேற்கொள்ளுமாறு கூறுவதனைக் காண முடிகின்றது. ***"ஆவியர் கோவே! உன் ஆருயிர்க் கண்ணகியின், அல்லல்போக்கி அகமலர முகமலர அவளை அழைத்து; வாழ்க்கை அளித்திட உடன் முன்வருவாயானால் -நீ வழங்கும் பெரிய பரிசில் எமக்கு அதுவேயாகும்;"*** [6] என்று புலவர் கூறுவதாக மு.கருணாநிதி விளக்குகின்றார்.

***"சங்க இலக்கியத்தில் பரத்தையிற் பிரிதலை அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் காண்கிறோம். நேர்மைக்கும் சால்பிற்கும் உறைவிடமாகத் திகழ்ந்த சான்றோர்களுள் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்க்கிழார் ஆகியோர் நல்லூர்ப் பரத்தையை நாடியிருந்த பேகனைப் பற்றிப் பாடிய பாடல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன. இப்புலவர்கள் பரத்தையின் கொடுமையைக் கூறி, மன்னனாகிய நீயே***

*இங்ஙனம் இழுக்கவழி நடப்பாயாயின், மக்கள் விழுப்பவழி நடத்தலை எதிர்பார்க்க இயலுமா என்று கேட்டாரில்லை! தவறு கண்ட இடத்து அஞ்சாமல் சுட்டிக்காட்டும் இயல்பினர் சங்கத்துச் சான்றோர் என்பதில் ஐயமில்லை. இப்பாடல்களில் கண்ணகியைப் பேகன் சென்றடைதல் வேண்டும் என்றே எண்ணிப் பாடியதால், பொதுவாகப் பரத்தமைக் கண்டிக்கவில்லை என்று அமைதி கூறலாம் என்றாலும், சமுதாயக்கேடு நோக்கிப் பரத்தையிற் பிரிதலைத் தவறெனக் காட்டுவதில் வள்ளுவர் முதலிடம் பெறுகிறார்.”* [7] என்கிறார் மேஜர் கதிர். மகாதேவன்.

*“பேகனோ ஏனையோர்போல மனைவியைப் பிரியவில்லை; அவளைத் துறந்தான் காண். அதனால் புலவர்தம் புறப்பாடல்களுக்குப் பொருளானான். அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாகப் புலவர்கள் பாடினர் என்ற துறைக்குறிப்பால், “துறக்கப்பட்ட” என்ற வினை நிலையைத் காண்க. துறவாது, பிறர் போல் வந்துபோகும் பிரிநிலையளவில் பேகன் நடந்திருப்பானாயின் புலவர்கள் பாடுகிறார் அன்றோ? அவன் பரத்தமை இல்லற எல்லை கடந்து சென்றமையால், இடித்துரை நிறுத்தவேண்டிய கட்டுப்பாடு நட்புடைய புலவர் பாலதாயிற்று. இதனால் அளவுப்பட்ட பரத்தமை புறப்பொருள் ஆகாது அகப்பொருளாம் எனவும், சமுதாயம் அதனைச் சிந்தனை செய்யாது, கடியாது எனவும் அறிகின்றோம்.”* [8] என வ.சுப.மாணிக்கம் விளக்குகிறார்.

### *5.7 தொகுப்புரை:*

அரசரே தவறு செய்கிறார் என அறிந்த புலவர்கள் அரசர் தரும் பரிசிலான பொன்னும்பொருளுமே பெரிது என எண்ணாது அரசரையும் நல்வழிப்படுத்தி நாடும் அரசும் சிறக்க வழி செய்கின்றனர். அரசன் பரத்தமையொழுக்கம் மேற்கொண்டதை அறிந்த புலவர்கள், அவனை அறிவுரைகூறி நல்வழிப்படுத்தியமை புலனாகிறது. இதன்வழி அரசனின் பரத்தமை ஒழுக்கத்தைப் புலவர்கள் விரும்பவில்லை என்பதும் புலனாகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.127
2. மாணிக்கம், அ., (உ.ஆ), சங்க இலக்கியங்கள் தொகுதி-12,புறநானூறு, பக்.16
3. மு.கருணாநிதி, சங்கத் தமிழ், பக்.262
4. மேலது, பக்.262
5. மேலது, பக்.264
6. மேலது, பக்.264
7. மகாதேவன், மேஜர் கதிர், பழந்தமிழர் வீரப்பண்பாடு, பக்.16
8. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பக்.224

# இயல் - ஆறு

## பொருளடக்கம்

# இயல் - ஆறு

# பத்துப்பாட்டும் பரத்தமையும்

**6.0 முன்னுரை:**

> ***"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளே***
> ***பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே".***
>
> *(திருவெம்பாவை 7:163:1-2)*

என்னும் மாணிக்கவாசகரின் கூற்று சங்க இலக்கியப் பெருமையைப் பறைசாற்றும். சங்க இலக்கியங்கள் மக்களின் அக வாழ்வையும் மற்றும் புறவாழ்வையும் எடுத்தியம்புகின்றன. ***'பாட்டும் தொகையும்'*** என்று பழைய உரையாசிரியர்கள் கூறியதன்வழி சங்க நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனப் பிரிக்கப்பட்டுள்ளன. பதினெட்டு வகையான சங்க நூல்களில், நெடும் பாட்டுகளாகவும் பாவொப்புமையை வரம்பாகக் கொண்டும் பிரிக்கப்பட்டன. இவ்விலக்கியங்கள் நாட்டின், சமுதாயத்தின் பிரதிபலிப்புகள்; சமூக மக்களின் பண்பாடு, வணிகம், உணவு, உடை, ஆபரண, பழக்க வழக்கங்கள், சமயம், தொழில் என அனைத்தையும் எடுத்துரைக்கின்றன. அச்சிறப்புமிகு பத்துப்பாட்டில் இடம் பெறும் பரத்தமை பற்றி ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

***6.1 பத்துப்பாட்டின் பெருமை:***

'***பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதமாவது'*** போல் செம்மொழியான பைந்தமிழின் இலக்கியச் சிறப்புக்குச் சங்க இலக்கியங்களே சான்றாக அமைகின்றன.

தொகை தொகையாக வகை செய்யப்பட்ட சங்க நூல்களில் பாட்டெனப் பகரப்பட்டது பத்துப்பாட்டாகும். இது பத்து நெடும் பாடல்களைக் கொண்ட தொகுப்பாக அமைந்துள்ளது.

"*பத்துப்பாட்டு ஒரு பண்பாட்டுச் சுரங்கம். வரலாற்றுப் பெட்டகம், கலைகளின் இருப்பிடம். தமிழர் வாழ்க்கையைக் காட்டும் ஓவியம். உலகளாவிய தமிழரின் வணிகத்தை உணர்த்தும் இலக்கியம்*" [1] என்பர் ச.வே.சுப்பிரமணியன்.

*"சேர சோழ பாண்டியர் என்னும் இம்மூவேந்தருள் தமிழைச் செம்மையாக வளர்ப்பதற்காகச் சங்கம் வைத்துத் தமிழ்ப் பணியாற்றியவர்கள் பாண்டியர்களாவர். அவ்வாறு சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த காலத்தில் தோன்றிய இலக்கியங்களே சங்க இலக்கியங்கள்"* [2] ஆகும்.

"*சான்றோர் உரைத்த தண்தமிழ்த் தெரியல் ஒருபது பாட்டும் என்று நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப் பாயிரம் கூறும்"* [3] என்கிறார் ச.வே.சுப்பிரமணியன்.

*"பத்துப் பாட்டுகள் அனைத்தும் நீண்ட பாடல்கள். பாட்டு முழுவதையும் இணைப்பதற்குச் சொற்களைக் கொண்டுகூட்டிப் பொருள் சொல்வதைக் கொண்டுகூட்டு அல்லது மாட்டு என்று கூறுவது உண்டு"* [4] *இதனை*

*"அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்*
*இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்*
*மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்"* *(தொல்.பொருள்:511)*

என்ற நூற்பாவால் அறிய முடிகின்றது

பத்துப்பாட்டில் உள்ள ஒவ்வொரு பாடலும் '***தனிநூல்***' அமைப்பைக் கொண்ட சிறப்புடையதாகும். அனைத்து நூல்களும் ஆசிரியப்பாவால் அமைந்தவை. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நக்கீரரால் இயற்றப்பெற்ற இறையனார் அகப்பொருள்உரையில் பத்துப்பாட்டு பற்றிக் குறிப்பு இடம்பெற்றமையால் இ∴து காலத்தால் பிற்பட்டது எனப்படுகிறது. கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னும் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னும் இந்நூல் தொகுக்கப்பட்டது

*"நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே*

*ஏறிய அடியின் ஈரைம் பாட்டுத்*

*தொகுப்பது பத்துப்பாட்டெனப்படும்"* *(பன்னிரு பாட்டியல்-384)*

என்னும் சூத்திரத்தால் இளம்பூரணரின் தொல்காப்பிய உரையிலும் மயிலைநாதரின் நன்னூல் உரையிலுந்தான் ***'பத்துப்பாட்டு'*** என்ற பெயர் காணப்படுகிறதென்பர். இப்பத்துப்பாட்டினை முதன்முதலாக நன்கு பதிப்பித்துத் தமிழுலகிற்கு வழங்கிய பெருமை உ.வே.சாமிநாதையரைச் சாரும். இந்நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

***"பத்துப்பாட்டு பொருந்தாத உவமைகளுக்கும் கற்பனைகளுக்கும் இடமின்றிப் பண்டைத் தமிழர் தம் வாழ்வியலையும் வரலாற்றையும் விளக்கும் காலக் கண்ணாடியாகத் திகழ்கின்றது எனவேதான்***

***"ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து***
***சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்***
***ஒரு பது பாட்டு"***

***என்று நச்சினார்க்கினியரும்,***

***"பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ***
***எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே"***

***என்று மனோன்மணீய ஆசிரியர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களும் பத்துப் பாட்டின் பெருமையைப் பாராட்டுகின்றனர்"*** [5] என்று மு.சாயபு மரைக்காயர் எடுத்துரைக்கிறார்.

**"பாடியவருள் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் கேடில் பதினெட்டுக் கீழ்க் கணக்கும்"** [6] எனத் தமிழ்விடு தூது ஆசிரியர் குறிப்பிடுவதாக ச.வே.சுப்பிரமணியன் எடுத்துரைக்கிறார்.

***"வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன் மெய் கூறுவல்" என்னும் மருதனிளநாகனார் பாடல் வரிகளுக்குக்கேற்ப வாழ்ந்த சங்ககால மக்களின் வாழ்வியலைப் பத்துப்பாட்டு நூல் வழியாகக் காண முடிகிறது"*** [7]

***6.2 பத்துப்பாட்டும் நூலமைப்பும்:***

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) என்பன பத்துப்பாட்டில் அடங்கும் (இயல்-2,பக்....பார்க்க) பத்துப்பாட்டில் ஒவ்வொரு பாட்டும் ஒரு நூலாகத் திகழ்ந்து மூவாயிரத்து ஐநூற்று ஐம்பதிரண்டு வரிகளை உள்ளடக்கியது.

***"முருகு நல்வாடையும் கீரன்; முடத்தாமக் கண்ணி பொருந்;***
***மருவுபாண், பாலை உருத்திரங்கண்ணன்; மகிழ்சிறுபாண்***
***புரியுநத் தத்தன்; மருதன் நன் காஞ்சி; நப்பூதன் முல்லை;***
***வருமெங் கபிலன் குறிஞ்சி; மலைகடாம் கௌசிகனே!"***

என்ற பாடலில் பாடலாசிரியர்கள் பற்றிய குறிப்புகள் காணப் பெறுகின்றன. இதே போன்று பத்துப்பாட்டின் பாட்டுடைத்தலைவர் யாரென்பதை

***"முருகாறு செவ்வேள்; பொருநாறு, பாலை***
***கரிகால்; நெடுஞ்செழியன் காஞ்சி; - இரு பாணும்***
***நல்லியக் கோடன்; இளந்திரையன்; நன்னன் கடாம்"***

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இவற்றின் வாயிலாக எட்டுப் பாவலர்கள் பாட்டுத் தலைவர்களைக் கொண்டு பத்துப்பாட்டை உருவாக்கியுள்ளனர் என்பது அறிய முடிகிறது.

பத்துப்பாட்டில் தொகுக்கப்பெற்ற பத்து நூல்களில் ஐந்து நூல்கள் ஆற்றுப்படை நூல்களாகும். இவ்வைந்தும் பாடாண் திணையைச் சேர்ந்தவையாகும்.. திணை அடிப்படையில் ‘***குறிஞ்சி, முல்லை, பாலை ஆகிய மூன்று நிலத்திற்கும் முறையே குறிஞ்சிப் பாட்டு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை***’ என மூன்று நூல்கள் இயற்றப்பெற்றுள்ளன. இம்மூன்றும் அகம் சார்த நூல்களாகும். மதுரைக் காஞ்சி ***‘வாழ்வின் நிலையாமையை’*** எடுத்துரைக்கும் புறநூல் ஆகும். ***‘அகம்’*** என்றும் ***‘புறம்’*** என்றும் பிரித்துக் காண இயலாத நூல் நெடுநல்வாடை ஆகும்.

### *6.3 பத்துப்பாட்டில் பரத்தமை:-*

சங்க இலக்கியமான பத்துப் பாட்டு இலக்கியச் சுவை மிக்கது. மேலும் மக்களின் நல்வாழ்விற்கு வழிகாட்டும் அறச் செய்திகள், செய்ந்நன்றியறிதல், கொடை, புகழ், கல்வி, நட்பு, கடமை, செல்வச்சிறப்பு என அனைத்தும் இந்நூல்களில் காணப்படுகின்றன.

சங்க இலக்கிய எட்டுத் தொகையில் பரத்தையர் இற்பரத்தை, காதற் பரத்தை, சேரிப்பரத்தை, பொருட்பெண்டீர், காமக்கிழத்தி, பொதுமகளிர் என்று பலவாறு அழைக்கப்பட்டனர். இப்பரத்தையர் பத்துப்பாட்டில் ‘***கொண்டி மகளிர்’*** என அழைக்கப்படுவதைப் பட்டினப்பாலை மற்றும் மதுரைக் காஞ்சி வழியாகக் காண முடிகிறது. பரத்தையருள் ‘***கொண்டி மகளிர்’*** என்றழைக்கப்பட்ட இவர்கள் பத்துப்பாட்டில் மிகச் சில இடங்களிலே சித்திரிக்கப் பட்டுள்ளனர்.

***“பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே***
***நிலத்திரி பின்ற.'. தென்மனார் புலவர்”*** *(தொல்.பொருள்:220)*

எனத் தொல்காப்பியர் பரத்தையர்பிரிவுப் பற்றிக் கூறியிருப்பதால், எட்டுத் தொகைக்கே இக்கூற்று மிகுதியாகப் பொருந்தும் என்பது வெளிப்படை. எட்டுத் தொகையின் நான்கு நிலங்களிலும் பரத்தையர் காணப்பட்டாலும், மருதத் திணையிலே மிகுதியாக அவர்கள் இருந்தனர். பத்துப்பாட்டில் பட்டினப்பாலை மற்றும் மதுரைக் காஞ்சியில் மட்டுமே சில இடங்களில் பரத்தையர் பற்றிப் பேசப்பட்டுள்ளது. பிற பத்துப்பாட்டு நூல்களில் பரத்தையர் அல்லது கொண்டி மகளிர் பற்றிய குறிப்பு காணமுடியவில்லை. அப்பத்துப்பாட்டு நூல்களில் அரசர்களின் புகழ், வீரம், கல்வி, கொடை போன்ற புறக் கூறுகளே மிகுதியாகக் காட்டப்பட்டுள்ளன.

### *6.4 கொண்டி மகளிர் ஒரு விளக்கம்:*

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பண்டைத் தமிழர்களின் பழக்க வழக்கங்கள், நாகரிகம், பண்பாடு என எடுத்துரைக்கும் பட்டினப்பாலையில் பரத்தையரைக் ***‘கொண்டி மகளிர்’*** என்று காட்டுகிறார் உருத்திரங்கண்ணனார். பண்டைக் காலத்து மன்னர்கள் தம் பகை நாட்டிலிருந்து வெற்றியின் அடையாளமாகப் பொன் பொருளோடு மகளிரையும் கொண்டு வந்தனர். இவ்வாறு கொண்டுவரப்பட்ட பெண்டீரே ***‘கொண்டி மகளிர்’*** எனப்பட்டனர்.

‘‘கொண்டி என்னும் சொல்லுக்குக் கொள்ளை என்ற பொருளும் உண்டு. *ஆதலால் பண்டைக் காலத்து மன்னர்கள் தம் பகை நாட்டிலிருந்து கொள்ளையிட்டுக் கொணர்ந்த பெண்டிரைக் கொண்டி மகளிர் என அற்றைக் காலத்தவர் அழைத்திருக்கலாம். அவர்கள் பிறர் பொருளைக் கொள்ளைக் கொள்ளும் பொருட்டுக் கொண்டி மகளிர் எனவும் குறிப்பிட்டிருத்தல் கூடும்”* [8] என்பார் ந.மு.வேங்கடசாமி நாட்டார்.

*“பகைவரை வென்றபோது அந்நாட்டு மகளிரைச் சிறைப்பிடித்து வருவது வழக்கம். அப்பெண்டிர் கொண்டி மகளிர் எனப் பெற்றனர்”* [9] என ச.வே.சுப்பிரமணியன் விளக்கம் தருகிறார்.

‘‘*பிற நாட்டிலிருந்து கொணரப்பட்ட மகளிர் பரத்தை யாக்கப்பட்டனர். இதற்குப் போர்நெறி வழி வகுத்தது. முற்காலத்தில் போர் வெற்றியின்போது பொருள்களோடு பெண்களும் கவரப்பெற்றனர்.*

*“வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்*
*பல்லிருங் கூந்தல் முரற்சியால்*
*குஞ்சர வொழுகை பூட்டி”* (பதிற்று.:5)

*என்ற பதிற்றுப்பத்து பதிகத்தின் (பதி.ப.5) செய்தி மகளிரை அடிமைப் படுத்திய நிலையை விளக்குகின்றது. போரில் கைப்பற்றிய பொருள்களைப் பட்டியலிடும் கலிங்கத்துப் பரணி ‘நவநிதிக்குவை, மகளிர்’ என்று மகளிரையும் குறிப்பிடுகின்றது. மிகப் புராதன காலத்தே போரில் வெற்றி பெற்றோர் தோல்வியடைந்தோரைக் கொன்றொழித்தனர். அவர் தம் பெண்களைப் பணிவிடைக்காகக் கைப்பற்றினர். அவ்வாறு கைப்பற்றப்பட்ட மகளிரையே ‘கொண்டி மகளிர்’ என்று பழைய தமிழ்ச் செய்யுட்கள் குறிப்பிடுகின்றன என்ற கருத்தும் எண்ணத்தக்கது (கைலாசபதி)”* [10] என்று சிலம்பு நா.செல்வராசு விளக்கம் தருகிறார்.

*“பத்துப்பாட்டு இலக்கியங்களான மதுரைக் காஞ்சியிலும் (583) பட்டினப்பாலையிலும் (246) என இரு இடங்களில் கொண்டி மகளிர் என்ற சொல்லாட்சி கையாளப் பெற்றுள்ளது. கொண்டி மகளிர் என்பவர்*

***யாவரெனில் 'கொள்க' எனத் திறைப்பொருளாகக் கொடுக்கப்பெற்ற ஆடல் மகளிர் (ஆ) நாடக மகளிர் ஆவர்"*** [11] என்கிறார் வாணி அறிவாளன்.

***"கொள்க எனக் கொடுத்தமையால் திறைப்பொருளாகக் கொண்டு வரப்பெற்ற நாடக மகளிர் அல்லது தேர்தர வந்த மகளீரையே கொண்டி மகளிர் எனப் பத்துப்பாட்டு குறித்துள்ளது. கொண்டி மகளிரை பரத்தையராகவும் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளமையால் கொண்டிக்கு அகராதியாளர்கள் பரத்தை என்றும் தவறாகப் பொருளுரைத்துள்ளனர். 'கொள்க' எனக் கொடுக்கப்பெற்றுத் திரைப் பொருளாகக் கொண்டு வரப்பெற்றமையால் மட்டுமே கொண்டிமகளிர் எனக் குறிக்கப்பெற்றனர் என்பதால் அவர்களுடைய பரத்தமைக் குணத்தைக் கொண்டு கொண்டிக்குப் பரத்தை எனப் பொருள் கூறல் மிகத் தவறு"*** [12] என்ற வாணி அறிவழகனின் மாற்றுக் கருத்து உற்று நோக்கத்தக்கதாகும்.

### *6.5 பட்டினப்பாலை காட்டும் பரத்தமை:*

### *6.5.1 பட்டினப்பாலை நூற் சிறப்பு:*

கடியலூார் உருத்திரங் கண்ணனார் பாடிய நூல் பட்டினப்பாலை ஆகும். இது கரிகால் பெருவளவனின் பெருமையையும் புகழையும் விளக்குகிறது. இது முன்னூற்றி ஒன்று(301) அடிகளைக் கொண்ட அகநூல் ஆகும். '***வஞ்சி நெடும்பாட்டு'*** என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படும் இந்நூல் பெரும்பான்மை வஞ்சியடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் பாடப் பெற்றுள்ளது.

***"பட்டினப்பாலை பாடியதற்கு, அக்காலச் சோழ மன்னன் திருமாவளவன் என்ற கரிகால் சோழன், பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்துப் பாராட்டினான் எனப் பிற்காலத்து எழுந்த கலிங்கத்துப் பரணி கூறுகிறது.***

***"தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்***
***பத்தொடு ஆறு நூறாயிரம் பெறப்***
***பண்டு பட்டினப்பாலை கொண்டதும் (கலிங்)***

***என்ற அடிகள்”*** [13] எடுத்துரைக்கின்றன.

***“இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணையாகலின், இதற்குப் பட்டினப்பாலை என்று பெயர் கூறினார் நச்சினார்க்கினியர்”*** [14]

***“திருமா வளவன் தெவ்வர்க்கு ஓக்கிய***
***வேலினும் வெய்ய கானம்; அவன்***
***கோலினும் தண்ணிய தடமென் தோளே!”*** *(பட்டினப்: 299-301)*

***என்ற வரிகளே பட்டினப்பாலையின் உயிர்ப்பொருளை உணர்த்தி நிற்கின்றன. இந்நூல் ‘அகம்’ சார்ந்த நூல் எனப் பறைசாற்றப்படுகிறது”*** [15]

காவிரி பாயும் சோழ நாட்டுப் பெருமை, காவிரிப் பூம்பட்டினச் சிறப்பு, கரிகால் வளவனின் வீரம், ஆட்சித் திறன், பரதர் வாழ்வு, கடல் வாணிபம், மற்றும் அவர்களின் இயல்பு என அனைத்தும் விளக்கப்படும். இந்நூலில் பொருளீட்டல்பொருட்டுப் பிரியும் செலவழுங்குதல்துறை குறித்தும் பாடப்பட்டுள்ளது.

***“முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்***
***வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய***
***வாரேன் வாழிய நெஞ்சே”*** *(பட்டினப்.218-220)*

என்ற வரிகளால், தலைவியைப் பிரிய எண்ணும் தலைவனின் செலவழுங்குதல் குறித்துக் கூறுவது அறிய முடிகிறது.

***6.5.2 நம்பிக்கைகள்:***

காவிரிப் பூம்பட்டினத்தின் வளத்தைக் கூறுமிடத்தில், காவிரிப்பூம்பட்டினத்தில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற ஏரிகள் இருந்தமையும், அவற்றிலே மூழ்கிக் காமனைவழிபடும் பெண்கள் கணவரோடு இம்மையிலும் மறுமையிலும் இன்புறுவர் என்றும் கூறுகின்றார் உருத்திரங் கண்ணனார். இதனை, ***“இரு காமத்து இணையேரி”*** …(பட்டினப்-39) என்ற சொற்குறிப்பால் உணர முடிகிறது.

சங்க மக்களுக்கு உணவை விடவும், உயிரை விடவும் தெய்வமே உயர்வு என்பதைத் தொல்காப்பியர், அகக் கருப்பொருளில், **“தெய்வம்**

**உணாவே மா மரம்....”** (தொல்.பொருள்.17) என்று தெய்வத்தை முதன்மைப்படுத்தியமையால் புலப்படுகின்றது. சங்ககால மக்கள் தெய்வ வழிபாடு, சடங்கு ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை முருகாற்றுப் படையும் பறைசாற்றுகிறது. மேலும், குன்றக்குரவை முதலாகத் துணங்கைக் கூத்து வரையான கூத்துக்களில் இறைவனின் பெருமையே பாடப்பட்டுள்ளது. இப்பட்டினப்பாலையிலும் ‘***தூணிலே தெய்வம்’*** உள்ளதென்று வணங்கியமை ‘***கந்திற் பாவை’*** என்ற வழிப்பாட்டால் அறிய முடிகிறது.

### *6.5.3 பட்டினப்பாலையில் கொண்டி மகளிர்:*

கொண்டி மகளிர் நீர்த்துறைக்குச் சென்று மூழ்கிப் பின் அணையா விளக்குகளை ஏற்றினர். பின் அவ்விடத்தில் மணம் வீசும் புதுப் பூக்களால் அலங்காரம் செய்தனர். தெய்வம் உறைந்திருக்கும் இடமாதலால் பொதுமக்கள் பலரும் வந்து தொழுதனர். அப்பொதுவிடமான அம்பலத்தில் ***‘கொண்டி மகளிர’*** தங்கும் உரிமையும் பெற்றிருந்தனர். இதனை,

> ***“கொண்டி மகளிர், உண்துறை மூழ்கி,***
> ***அந்தி மாட்டிய நந்தா விளக்கின்,***
> ***மலரணி மெழுக்கும், ஏறிப் பலர் தொழ***
> ***வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்”*** *(பட்டினப்.:246-249)*

என்னும் வரிகளால் அறியமுடிகிறது. இதற்கு ஞா.மாணிக்கவாசகன், ***“தோற்றப் பகை அரசர் மனைவியரைச் சிறைப்பிடித்த மன்னர், அவர்களைப் பணிப் பெண்களாக வைத்துத் தரைமெழுகிக் கோலமிட்டு விளக்கேற்ற செய்வது வழக்கமாயிருந்திருக்கிறது.”*** [16] என்று விளக்கம் தருகிறார்.

உருத்திரங் கண்ணனாரைப் போல் சீத்தலைச் சாத்தனாரும் கொண்டி மகளிரைப் பற்றி மணிமேகலையில், ***‘ஒருமைப் பெண்டிரல்லர் பொருட் பெண்டிர் தாம்’*** என்று குறிப்பிடும் கருத்தினை ***‘இனிய மொழிகளால் பொருட்களையும் வாங்கி, தேனை உண்டு மலரைத் துறக்கும் வண்டினைப் போலப் பொருள் கொடுத்தாரைப் பின்பு துறக்கும் இயல்பினர் கொண்டி மகளிர்’*** எனக் கூறுவதால் அறிய முடிகிறது. இதனை

***"நாடவர் காண நல் அரங்கு ஏறி***
***ஆடலும் பாடலும் அழகும் காட்டி***
***கருப்பு நாண் கருப்பு வில் அருப்புக் கணை தூவச்***
***செருக் கயல் நெடுங் கண் கருக்கு வலைப் படுத்துக்***
***கண்டோர் நெஞ்சம் கொண்டு அகம் புக்குப்***
***பண் தேர் மொழியின் பயன் பல வாங்கி***
***வண்டின் துறக்கும் கொண்டு மகளிர்"*** *(மணி:18:105-109)*

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

பட்டினப்பாலையில் கூறப்பட்ட ***'கொண்டி மகளிர்'*** என்ற சொற்களே பிற்காலத்தில் ***'தேவரடியார்கள், தேவதாசிகள்'*** என்று அழைக்கப்படுவதற்குக் காரணமாயின. மேலும், கொண்டி மகளிர் போன்று ***'கொண்டி மாடு'*** என்ற சொல் இன்றளவும் கிராமங்களில் வழக்குச் சொல்லில் காணப்படுவதும் அறிய முடிகிறது.

***"அரசனால் சிறைப்படுத்திக் கொண்டுவரப்பட்ட பகை மன்னர்களின் உரிமைமனைவியர் பலரும், நீர் உண்ணும் துறைகளில் நீராடுவர். அம்பலங்களை மெழுக்கிட்டுத் தூய்மைப்படுத்துவர். அந்திப்பொழுதில் விளக்குகளை ஏற்றித் தெய்வம் உறையும் தறிகளுக்கு மலர் சூட்டி வழிபாடுசெய்வர்"*** [17]

***"பைந்தழை மா மகளிரோடு (பட்டினப்.91) என்ற அடியால் சேரியில் வாழந்த இவர்கள் தழையாடை அணிந்தனர் என்பது அறிய முடிகின்றது."*** [18] என்று ச.வே.சுப்பிரமணியன் கூறுகிறார்.

பட்டினப்பாலை (244--249) அக்காலச் சமுதாயத்தில் பரத்தையரென்னும் கொண்டி மகளிர் இருந்தமையைப் புலப்படுத்துகிறது.

### *6.6 மதுரைக் காஞ்சி காட்டும் கொண்டி மகளிர்:*

#### *6.6.1 நூல்சிறப்பு:*

***'பெருகுவள மதுரைக் காஞ்சி'*** என்னும் சிறப்புப் பெற்ற இந்நூலை மாங்குடி மருதனார் இயற்றியுள்ளார். எழுநூற்றெண்பத்திரண்டு அடிகளால்

ஆன நெடியநூலாகும். ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் கலந்து பாடப்பெற்ற சிறப்புடைய புறத்திணை நூலாகும். ***"ஆசிரியர் நச்சினார்க்கினியர், இந்நூலைத் தலையளவு வஞ்சிப்பாவிற்கு எடுத்துக்காட்டாகக் கூறியுள்ளார்."*** [19]

***"மதுரையிடத்து அரசற்குக் கூறிய காஞ்சியென அமையும் என இதற்கு நச்சினார்க்கினியர் விளக்கந் தந்துள்ளார்."*** [20]

தொல்காப்பியர் காட்டும் ஏழுவகைப் புறத்திணைகளில் காஞ்சித் திணையும் ஒன்று. காஞ்சி என்பது ***நிலையாமையை'***க் குறிக்கும் சொல் என்பர் சான்றோர். நிலையாமையானது, ***'இளமை, செல்வம், யாக்கை'*** என்ற மூன்றின் நிலையற்றத்தன்மையைக் குறிப்பதாகும்.

***"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே***
***பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்***
***நில்லா உலகம் புல்லிய நெறித்தே"*** *(தொல்.பொருள்:76)*

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் விளக்குகிறார்.

வீடுபேறு இன்பம் நிமித்தமாகவே இந்நூல் பாடப்பெற்றது. ***"பெருந்திணையாகிய அகத்திணைக்குப் புறமாவது காஞ்சித் திணையாகும். வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமை பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர்."*** [21] என்று சுட்டிச்சொல்கிறார் வி.நாகராஜன்.

***"மேலும் நிரம்பா வாழ்வின் அமைதி வேண்டிக் கூறப்பட்டதாகும்."*** [22] என்கிறார் வி.நாகராசன். ***"கொற்றவர்தம் கோன் ஆகுவை"*** [23] (மதுரைக்-74). இந்நூல் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் போர் மரபு, வெற்றி, புகழ், வீரம் மற்றும் மதுரை நகரின் அமைப்பு, சிறப்பு ஆகியவற்றைப் பற்றிப் பாடுகிறது.

### *6.6.2 புலவர் சிறப்பு:*

***'பெருகு வள மதுரைக் காஞ்சியை'*** இயற்றியவர் மாங்குடி மருதனார். இவர் பாண்டியன் நெடுஞ்செழியன் அவையில் தலைமைப் புலவராக விளங்கியவர். மன்னரால் பெரிதும் மதிக்கப்பட்ட இவரை,

***"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி***
***மாங்குடி மருதன் தலைவன் ஆக***
***உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்***
***புலவர் ….."*** *(புறம்:-72:13-16)*

எனப் புறநானூற்றுப் பாடலில் பாராட்டிப் பாடினார் நெடுஞ்செழியன்.

'**மாங்குடிக் கிழார்**' என்று இவரை உ.வே.சாமிநாதையர் தனது புறநானூற்றுப் பதிப்பில் பதித்துள்ளார். இவரது போர்க்களக் காட்சியே பரணி நூல் தோன்றக் காரணமும் ஆகும்.

***"மதுரைக் காஞ்சி பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு உலக நிலையாமையை யுணர்த்திக் - கந்தழிப் பொருள் காட்டுவதென்பர்"*** [24] நச்சினார்க்கினியர். மாங்குடி மருதனார் இந்நூலின் பல்வேறிடங்களில் நிலையாமையை எடுத்துக் காட்டுகிறார்.

***6.6.3 மதுரைக் காஞ்சியில் பரத்தையர்:***

பாடல் சான்ற பாண்டி நாடெனப் புகழ்பெற்ற மதுரை மாநகரில் பரத்தையர் சேரி இருந்தமை ***"மணங்கமழ் சேரி"*** (மதுரைக்:329) என்று கூறப்படுவதால் அறிய முடிகிறது.

***"மணங்கமழ் சேரி என்றது பரத்தையர் சேரியினைப் பரத்தையர் எப்பொழுதும் தம்மை மலர் முதலிய மணப் பொருள்களால் ஒப்பனை செய்து கோடலின் ஆண்டு இடையறாது மணங்கமழும் என்க"*** [25] என்று விளக்குகிறார் பொ.வே.சோமசுந்தரம்.

நிலையாமையைக் குறிக்கும் புறநூலான மதுரைக் காஞ்சியின் பாட்டுடைத் தலைவனின் வீரம், புகழ் நாட்டுவளம் பற்றிக் கூறுமிடத்தில் பரத்தை பற்றிய குறிப்பினைக் காணமுடிகிறது.

***6.6.4 பரத்தையர் ஒப்பனை:***

பரத்தையர், வீதியோடு விண்ணகமும் கமழும் படியாக மனம் மிக்க வெண்ணிற மாலையுடன் குவளை மலர்களையும் பல வாசனை

மலர்களையும் மாலையாகத் தொடுத்துத் தம் கூந்தலில் சூடிக் கொள்வர். ஒளிபொருந்திய வளையல் ஒலிக்க நாணமின்றி நடந்து உலா வருவர். மாயப்பொய் பலப்பேசி விரும்பும் ஆடவருடன் புணர்வர். அதனால் கலைந்த ஒப்பனையை மீண்டும் பொலிவுறுமாறு செய்து கொள்வர். தளிர்களையும் அரும்புகளையும் கொண்டு தொடுத்த தழையாடையை அணிவர். இவ்வாறு பரத்தையர் ஒப்பனை செய்து கொள்ளுவதை,

***"வீழ்துணை தழீஇ வியல் விசும்பு கமழ***
***நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்டு***
***ஆய்கோல் அவிர்தொடி விளங்க வீசி***
***போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ***
***மேதகு தகைய மிகுநலம் எய்தி,***
***பெரும்பல் குவளைச் சுரும்புபடு பன்மலர்***
***திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்***
***கொண்டன் மலர்ப்புதல் மானப்பூ வேய்ந்து"*** *(மதுரைக்.561-568)*

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும் இப்பரத்தையரது நிலை, '***தேனை நுகர்ந்து நீங்கும் வண்டின் வாழ்வினைப் போன்றது***'.

***6.6.5 பரத்தையர் செயல்கள்:***

மணம் வீசும் புதுப்பூக்கள் சூடியும் தனிப்பெரும் ஒப்பணையால் அழகுடன் திகழ்ந்த பரத்தையர் தம்மை நாடி வந்த பல செல்வந்தர்களை வஞ்சனையுடைய பொய்மொழி பல பேசி நுண்ணிய பூண்களையுடைய மார்பினைத் தம் மார்பில் வடுப்படும்படித் தழுவி முயங்குவர். அன்புடையவர்களைப் போல் மீண்டும் மீண்டும் முயங்கி, அவர்களின் பொருள்கள் தீரும் அளவும் அவர்தம் செல்வங்களை வாங்கிக் கொள்ளும் பண்புடையவர்கள் ஆவார். இப்பண்பானது பொருளுக்காகவே வரும் காதற்பரத்தையின் பண்பை ஒத்ததாக அமைகிறது.

இளம்பூரணர் காட்டும் மூவகை காமக்கிழத்தியருள் ஒத்தக் கிழத்தியர் பொருளுக்காக வாழ்பவள் என்பதை, ***"ஒத்தகிழத்தியர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல்."*** [26] ***"பரத்தையர்கள் காமத்துய்ப்பிற்கான***

***பொருட்பெண்டிராக மாறிப்போன நிலையைப் பரத்தமை உடைமைச் சமுதாயத்தின் ஒரு அங்கமாக மாறிப்போனதைக் கொண்டிமகளிர் எனும் இந்தச் சொல் காட்டுகின்றது."*** [27] பூக்கள் மலரும் காலம் அறிந்து அதன் இனிய தேனை உண்டு பின் தேனற்ற மலரை நினையாது துறந்து செல்லும் வண்டினைப் போலத் தம்மை அடைந்தவர்களிடம் இன்பம் நுகர்ந்து தாம் அவ்விடம் விட்டு நீங்குவர். மேலும் பழுத்த பழங்கள் நிறைந்த மரத்தின் பழத்தை ஆராய்ந்து உண்ட பறவைக் கூட்டத்தைப் போன்று இப்பரத்தையர்களின் செயல்கள் அமைந்திருப்பதை,

***"நுண்பூண் ஆகம் வடுக்கொள முயங்கி,***
***மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து***
***சேயரும் நணியரும் நலன்நயந்து வந்த***
***இளம்பல் செல்வர் வளம்தப வாங்கி***
***நுண்தாது உண்டு வறும்பூத் துறக்கும்***
***மென்சிறை வண்டினம் மானப் புணர்ந்தோர்,***
***நெஞ்சு ஏமாப்ப, இன்துயில் துறந்து***
***பழம்தேர் வாழ்க்கைப் பறவை போல"*** *(மதுரைக்:569-576)*

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

கலைந்த ஒப்பனையை மீண்டும் சரிசெய்து கொள்ளுவர் பரத்தையர்கள், ***"பழுத்த மரம் தேடிப் பறக்கும் பறவைகள் போல, அவ்வப்போது புதிதாக கிடைத்தவர்களோடு கூடி வாழும் வாழ்க்கை - இந்தப் பரத்தையர் வாழ்க்கை"*** [28] என்று ஞா.மாணிக்க வாசகன் விளக்கம் கூறுவர்.

ஒள்ளிய விளக்கின் ஒளியில் வளமை நிறைந்த செல்வந்தர்களை ஒருங்கே கூடும் பரத்தையர் நீல நிறத்தை உடைய ஆகாயத்தில் உலாவரும் தேவமகளிரைப் போல் கண்டோரின் நெஞ்சம் வருந்தும்படி அழகு செய்துகொள்வர். இப்பரத்தையர், வளம் நிறைந்த மனைகளை நாடிச் சென்று இளையரோடும் உறவு கொள்வர். இத்தகு பரத்தையரின் செயலினைக்

***"கொழுங்குடிச் செல்வரும் பிறரும் மேஎய,***
***மணம்புணர்ந்து ஓங்கிய அணங்குடை நல்இல்***

***ஆய்பொன் அவிர்தொடிப் பாசிழை மகளிர்***
***ஒண்சுடர் விளக்கத்துப் பலருடன் துவன்றி***
***நீல்நிற விசும்பில் அமர்ந்தனர் ஆடும்***
***வானவ மகளிர் மானக் கண்டோர்***
***நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்***
***யாம நல்யாழ் நாப்பண் நின்ற***
***முழவின் மகிழ்ந்தனர் ஆடிக் குண்டுநீர்***
***பனித்துறைக் குவவுமணல் முனைஇ மென்தளிர்***
***கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர***
***நெடுந்தொடர்க் குவளை வடிம்புற அடைச்சி***
***மணங்கமழ் மனைதொறும் பொய்தல் அயர"*** *(மதுரைக்:577-589)*

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன. இத்தகு மகளிர் செயலினை ***"மாலைக்காலம் நீங்கியவுடன், தம்மை அலங்கரித்துக் கொண்டு போய் பல பேசித் தம் இன்பத்தைக் கருதி வந்தோர் செல்வத்தை முழுவதும் கவர்ந்துகொண்டு, அவர்களை நீங்கிப் பின்னும் கண்டோர் நெஞ்சை வருத்தமடையச் செய்து பொருள் கவரும் பரத்தையர்கள், மனைதொறும் இளைஞரோடு விளையாடுவார்கள்"***[29] என கூறப்படுகிறது. மேலும்,

***"நுண்தாது உண்டு வறும்பூத் துறக்கும்***
***மென்சிறை வண்டினம் மானப் புணர்ந்தோர்"*** *(மதுரைக்.:573--574)*

எனவும்,

***"பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல"*** *(மதுரைக்.:576)*

எனவும் மருதனார் விளக்குகிறார். ***"இவர்கள் நகர்மயமாதலின் ஓர் அங்கமாக, நிலைத்த வளமான குடியிருப்பினை உடையவராக ஆகிப்போன சூழலை மதுரைக்காஞ்சி வெளிப்படுத்துகின்றது"***[30]

இத்தகைய கொண்டி மகளிராம் பரத்தையரது செயல்களைச்,

***"செறி தொடி தெளிர்ப்ப வீசிச் சிறிது அவண்***
***உலமந்து வருகம், சென்மோ"*** *(நற்.:20)*
***"நல் அகம் வடுக் கொள முயங்கி "*** *(அகம்.:100)*

***“பழுமரம் உள்ளிய பறவையின்”*** *(பொருநராற்.:64)*

***“பழுமரம் தேடும் பறவை போல”*** *(பெரும்பாண்-20)*

***“விரல் கவர்ந்து உழந்த கவர்வில நல்யாழ்***
***யாமம் உய்யாமை”*** *(நற்.335)*

***“கிளைக் களின்று எழுதரும் கீழ்நீர்ச் செவ்வரும்பு”*** *(திருமுருகு.29)*

போன்ற வரிகளால் உணர முடிகிறது. இவ்வரைவில் மகளிரியல்பினை,

***“அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்***
***இன்சொல் இழுக்குத் தரும் -*** *(குறள்.911)*

என்பார் வள்ளுவர்.

***“நறுந்தாது உண்டு, நயனில் காலை***
***வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்”*** *(மணி:18-19)*

என்கிறார் சீத்தலைச் சாத்தனார்.

மேற்கண்ட பரத்தையர்களது வாழ்க்கைச் செழிப்பினைக் கூறுமிடத்து, திருத்தக்கத்தேவரது சீவக சிந்தாமணியில் இராசமாபுரத்துப் பரத்தையர் சேரிகளைப் பற்றிப் பாடியமை நினைவு கூரத்தக்கது. அவை, ***“பரத்தையர் சேரி எத்தகையவரையும் கவரும் பொலிவோடு திகழ்ந்தது. அச்சேரியைச் சார்ந்த இடமும் திண்ணைகளும் குங்குமத்தாலே மொழுகப்பட்டிருக்கும். மாளிகைக்குள் மெல்லிய மலர்கள் பரப்பிய படுக்கைப் பொலிவுறும். விண்ணவரையும் அங்கு விரும்பும் படியாகச் செய்யும் அத்துணை சிறப்புகளோடு அச்சேரி விளங்கியது. அங்கு வாழ்ந்த பரத்தையர்கள், அழகு மிக்க தோழியரை ஆடவர்பால் தூதாக அனுப்பி அவர்களைத் தம்பால் இழுப்பர். பரத்தையர்கள் தம்மிடம் வந்த ஆடவனுக்குத் தன் உடலைச் செம்பொன் ஒன்று முதலாக ஆயிரத்தெட்டுக் “கழஞ்சு பொன்” ஈறாக விலைபேசி விற்பர். பரத்தையர் சேரி எங்கும் இனிய இசையொலி எங்கும் பரவி நிறைந்திருக்கும், நிகரில்லை என்று வியக்கின்றார் திருத்தக்க தேவர்***”[31] என்கிறார் தா.ஏ.ஞான மூர்த்தி

திருத்தக்கத் தேவர் இப்பரத்தையர் சேரியை அகழியோடு ஒப்பிடுவதையும் காண முடிகிறது. அதனை தா.ஏ.ஞானமூர்த்தி ***“தன்னை***

*அடையும் தலைமகன் ஒருவனை அழிக்கும் தன்மையுடையவள் பரத்தை. அது போலத் தன்கண் அகப்பட்டாரை ஆழ்த்திக் கொள்ளும்; மணம் செய்த குலமகள் அழகுடன் விங்குவாள்; அகழி தன் கண்ணுள்ள மலர்களினால் அழகுடன் ஒளிர்ந்தது”*[32] என வியந்துக் கூறுகிறார்.

*“போரின் போது பகைவரின் நாடு கொள்ளையடிக்கப்படும். இவ்விதம் பெறப்படும் கொள்ளைப் பொருள் கொண்டி(கொள்>கொண்டி) எனப்படும். மகளிரும் இவ்விதம் கொள்ளையடிக்கப் பட்டனர் என்பதைக் கொண்டி மகளிர் எனும் தொடர் புலப்படுத்தும். போர்களின் போது அனைத்துத் தரப்பு மகளிரும் சொல்லொனாத் துயரத்திற்கு ஆளானார்கள். போரில் மாய்ந்த வீரர்களின் மனைவியர் விதவைகளாயினர் (புறம் 25). பகைவரின் உரிமை மகளிரைச் சிறைப்பிடித்துக் கூந்தலை மழித்துக் கயிறு திரித்து அக்கயிற்றால் யானைகள் கட்டப்பட்டனவாகும் (நற்.270; பதி5ம் பத்தின் பதிகம்). இவ்விதம் சிறைப் பிடிக்கப்பட்ட கொண்டி மகளிர் அடிமைகளாக நடத்தப்பட்டனர். ஊர் மன்றத்தில் கொண்டி மகளிர் விளக்கேற்றும் பொறுப்பில் இருந்துள்ளனர் (பட்246) எனும் செய்தி அவர்கள் வெற்றிபெற்ற சமூகத்தின் பொதுச் சொத்தாகவே கருதப்பட்டனர் என்பதைப் புலப்படுத்தும். மதுரை நகரில் இடம்பெற்ற கொண்டி மகளிர் (மதுரை 583) பரத்தையராகவே செயல்பட்டனர் என்பதை அறியமுடிகிறது. மதுரை போன்ற நகரியங்களில் பரத்தையர் தொழில் முறையில் நிறுவனப்பட்ட* ***(institutionalized)*** *பாலியல் தொழிலாளர்களாகவே செயல்பட்டனர் என்பது மதுரைக் காஞ்சியில் (549, 589) பதிவாகியுள்ளது.”* [33] என்று வீ.மாணிக்கம் கூறியுள்ளது உற்றுநோக்கத்-தக்கதாகும்.

*“சங்க சமுதாயத்தில் உருவான அரசமைப்பில் பரத்தமை ஒரு நிறுவனமாக இருந்ததை மதுரைக்காஞ்சி (559-589) காட்டுகின்ற பரத்தையர் குடியிருப்பு பற்றிய செய்தி வெளிப்படுத்துகின்றது.”* [34] என்று பரத்தமை ஒரு நிறுவனமாகச் செயல்பட்டது என பெ.மாதையன் எடுத்துரைக்கிறார்.

### *6.7 தொகுப்புரை:*

***“கொண்டி மகளிர்”*** என்று அழைக்கப்பட்ட பரத்தையரைப் பட்டினப்பாலை மற்றும் மதுரைக் காஞ்சி நூல்கள் எடுத்துகாட்டுகின்றன. இவ்விலக்கியங்களில் கொண்டி மகளிர் என்னும் பரத்தையர், சேரிப்பரத்தையராகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். போருக்குச் செல்லும் வீரர்களும் நீண்டநாள் பாசறையில் தங்கிப்போரிடும் சூழலில் மன உளைச்சலுக்கு ஆளாகின்றனர். இதனை ஆற்றிக் கொள்ளவே பரத்தையை நாடினர். இதனை அரசரும் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை என்பதும் கருத்திற் கொள்ளக் கூடியது. இதன் விளைவாகச் சமூகத்தில் பரத்தையர் தோன்றினர்.

பட்டினப்பாலையில் கொண்டி மகளிர் ஊர்ப் பொது மன்றில் வைக்கப்படுவோர், மாலைப் பொழுதில் அணையா விளக்கேற்றும் பணியைச் செய்வோர் எனப் பணி நிமித்தமாக உள்ளோர் என்றே சித்திரிக்கப்படுகின்றது. ஆனால், மதுரைக் காஞ்சியில் வரும் கொண்டி மகளிராம் பரத்தையர் வண்டுகள், பறவைகள் போல மிக்க செல்வர்களின் பொருளுக்காக அவர்களுடன் தங்கி இன்பமும் பொருளும் பெற்ற பின் வேறோர் மனையகத்து இளையோரை நாடிச் செல்லும் பண்புடையவர்கள் எனச் சித்திரிக்கப்பட்டுள்ளமையும், விண்ணுலகத் தேவலோக மங்கையை விட அழகானவர்கள் மணங்கமழ் வெண்பூச்சூடி மிக்க ஒப்பனைக் கொண்டவர்கள் என்றும் மாங்குடி மருதனார் படைத்தமையும் அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ), சங்க இலக்கியம், பத்துப்பாட்டு,பக்.5
2. தமிழ்ப்பிரியன், சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, முல்லைப்பாட்டு, பக்.7
3. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ), மேலது, பக்.5
4. மேலது, பக்.50
5. சாயபு மரைக்காயர், மு., சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பக்.12
6. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ), மேலது, பக்.6
7. தமிழ்முடி, சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு,பக்.5
8. வேங்கடசாமி நாட்டார், ந.மு., பத்துப்பாட்டு மூலமும் உரையும், பக்-----
9. சுப்பிரமணியன், ச.வே., மேலது, பக்.455
10. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கியம், மறுவாசிப்பு, பக்.165-166
11. வாணி அறிவாளன், செந்தமிழ்ச்செல்வி(அக்டோபர் 2012), பக்.18,19
12. மேலது, பக்.19
13. சாமிநாதையர், உ.வே., (உ.ஆ), சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, பக்.422
14. அரவிந்தன், மு.வை., உரையாசிரியர்கள், பக்292
15. சாயபு மரைக்காயர், (உ.ஆ), மு., மேலது, பக்.14
16. மாணிக்க வாசகன், ஞா., (உ.ஆ), பத்துப்பாட்டு மூலம் -விளக்க உரையுடன், பக்.374-375
17. மாணிக்கம், அ., (உ.ஆ), சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, பக்.354-355
18. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ),மேலது, பக்.21
19. இராமமூர்த்தி, இராம., (உ.ஆ), சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, பக்.7-8
20. மேலது,பக்.7-8
21. நாகராஜன், வி., (உ.ஆ), சங்க இலக்கியம், பத்துப்பாட்டு, பக்.xxxix
22. மேலது,பக். xxxix
23. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், பக்.141
24. நாகராஜன், வி., (உ.ஆ), மேலது, பக்.xxxix

25. சோமசுந்தரம், பொ.வே., (உ.ஆ), பத்துப்பாட்டு, மூலமும் உரையும், தொகுதி-II, பக்.123
26. இளம்பூரணனார் உரை, (உ.ஆ), தொல்காப்பியம், பொருளதிகாரம், பக்.107
27. மாதையன், பெ., மேலது, பக்.142
28. மாணிக்கவாசகன், ஞா., மேலது, பக்.266
29. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ), மேலது, பக்.261
30. மாதையன், பெ., மேலது, பக்.142
31. ஞானமூர்த்தி, தா.ஏ., சிந்தாமணிச் செல்வம், பக்.16-17
32. மேலது, பக்.15
33. மாணிக்கம், வீ., தமிழர் வாழ்வியல் (கி.பி.300 வரை), பக்.417
34. மாதையன், பெ., மேலது, பக்.146

# ***ஆய்வு முடிவுரை***

***'சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு'*** என்ற தலைப்பில் அமைந்துள்ள இந்த ஆய்வேட்டில் உள்ள பரத்தமைப் பற்றிய கருத்துகள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. ***'மாற்றம் ஒன்றே மாறாதது'*** என்பது போல உலகின் அறிவியல் வளர்ச்சிக்கேற்ப நாகரீகமும், மனித வாழ்வும் மாறுதலுக்குட்பட்டது. மனிதனின் பண்பையும், அறத்தையும், இன்பத்தையும் எடுத்துரைக்கும் ***'சங்க இலக்கியம்'*** மட்டும் மாறாதது. கற்கக்கற்கச் சுவையையும், அறிவையும், இன்பத்தையும், சிந்தனையையும், அள்ளித் தந்து சங்கக்கால மக்களின் வாழ்க்கை முறையை அறிந்து கொள்ள பெரும் பயனாக இவ்விலக்கியம் இருக்கின்றது.

மானுட சமூக வளர்ச்சி அந்தந்தக் காலச் சூழலுக்கேற்பப் பரிணாம வளர்ச்சி அடைவதைக் காட்டுவன இலக்கியங்களாகும். தனித்தனி இனக்குழுவாக வாழ்ந்த சமூகத்தின் ஒட்டு மொத்தமான இலக்கணத்தையும் கூறுவது கடினமானது. ஆனால் அக்கடினத்தையும் எளிமைப்படுத்தித் தந்தவர் தொல்காப்பியர். அவர்தம் தொல்காப்பிய இலக்கண நூலில் மானுடவியலின் இயல்புகளையும் வாழ்க்கை முறையையும் ***'பொருளியலில்'*** வகைமைப்படுத்தி விளக்கியுள்ளார். ***"தொன்மை+காப்பு+இயல்"*** எனத் தொல்காப்பியம் தொன்மையைக் காக்கும் நூலாக உள்ளது. சங்க மக்களின் வாழ்க்கை ***'அகம், புறம்'*** என இரண்டு வகையாகப் பிரித்துரைக்கப்பட்டுள்ளது. கற்பொழுக்கத்தைக் கடைப்பிடிக்காத பெண்கள் ***'பரத்தையர்'*** என்ற பெயரில் இடம் பெறுகின்றனர். அப்பரத்தையர்கள் சங்க காலத்தில் பெற்றிருக்கும் இடத்தைக் காண்பது பற்றிய ஆராய்ச்சி இந்த ஆய்வேடு மேற்கொண்டுள்ளது.

***'இலக்கணமும் பரத்தமையும்'*** என்ற முதல் இயலில் பரத்தையர்களின் இயல்பும் வகையும் பரத்தமைத் தோன்ற காரணங்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. பெண்களுக்கென்று தனி இடம் தந்த சங்கச் சமூகத்தில் ஆண்களின் காம இச்சைக்காகவே படைக்கப்பட்டவர்களாய்ப் ***'பரத்தையர்'*** காணப்படுகின்றனர். இவர்கள் ஆண்களின் நலனையும்

இளமையையும் நுகர்வது மட்டுமல்லாது அவர்தம் பொருளையும் பெற்றுக் கொள்ளும் பண்புடையவர்களாக வாழ்ந்தனர். தொல்காப்பியர் தூது, ஓதல், பொருள், பகை, காவல் எனப் பிரிவின் வகைகளை அகத்திணையில் கூறியவர் பரத்தையர் பிரிவை மட்டும் கற்பியலில் கூறி விரித்துள்ளமை கவனிக்கத்தக்கது. இப்பரத்தையர்களை ***'காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை'*** என்று அவர்களின் இயல்புகளைக் கொண்டு மூன்று வகைப்படுத்துகிறார் இளம்பூரணர். தலைவியின் பூப்புக் காலத்திலும் மகப்பேறு காலத்திலும், தன் அடங்காத காமம் காரணமாகத் தலைவன் பரத்தமை மேற்கொண்டான் என்பது தொல்காப்பியம் (தொல்.பொருள்.44) வழியாக அறியமுடிகிறது. காமக் கிழத்தியருள்ளும் ***'ஒத்த கிழத்தியர். இழிந்த கிழத்தியர், வரையப்பட்டோர்'*** என மூன்று வகைப்பட்டாரும் உளர் என வகைப்படுத்தி விளக்குகிறார் இளம்பூரணர். தலைவனின் தீராக் காமம் காரணமாகப் ***'பரத்தையர்கள்'*** தோன்றவும் பொருளாதாரம் ஒரு காரணமானாலும், சமூகப் பாதுகாப்பும் இன்றியமையாதது. மேலும் போரின் காரணமாகவோ, வேறுசூழல் காரணமாகவோ, கணவனை இழந்த பெண்கள் வேறு ஆடவர்களுடன் கொண்ட தொடர்பு காரணமாகப் பரத்தமை தோன்றியது. மேலும் இல்லற வாழ்வில் மனநிறைவு பெறாத ஆடவன் வேறு பெண்களை நாடிச் சென்றமையும் ***'பரத்தமை'*** தோன்றக் காரணம் ஆகும். இதன் அடிப்படையில் 'உடலியல், உளவியல் சார்ந்து தம் உணர்வுகளுக்கு இடம் கொடுக்க நேர்ந்தமையே பரத்தமைக்குக் காரணம் என்பது இவ்வியல் எடுத்துரைக்கின்றது.

***'சங்க அக இலக்கியங்களில் பரத்தையர் கூற்று வழிப் பரத்தமை'*** இயல் ஒத்த காமம் கொண்ட ஐந்திணை மாந்தர்களுக்கும் சுட்டிப் பெயர் கூறாமல் பொதுப்பெயராக அழைக்கப்பெறும் சிறப்புடைய சங்க இலக்கியம், ***'அகம், புறம்'*** என்ற கூற்றுக்களின் அடிப்படையில் எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என்று பகுக்கப்பட்டுள்ளதை விளக்குகிறது. எட்டுத்தொகை நூல்களான ***'நற்றிணை, ஐங்குறுநூறு, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை'*** என்ற ஐந்து இலக்கியங்களிலும் தலைவியின் துன்பத்திற்கும், மருதநில உரிப்பொருளான ஊடலுக்கும் ***'பரத்தை'****யே* காரணமாகிறாள். இப்பரத்தையர் ***'பாலை'*** நிலத்தைத் தவிர்த்து ஏனைய நான்கு நிலங்களிலும்

காணப்படுகிறார்கள். அவற்றுள்ளும் குறிஞ்சி, முல்லை நிலங்களில் ***'புணர்தல், இருத்தல்'*** நிமித்தம் காரணமாகப் பரத்தமையொழுக்கம் மிகக் குறைவாகவே காணப்படுகின்றது; நெய்தல் நிலத்தில் பரவலாகவும் மருதத்தில் மிகுந்தும் காணப்படுகின்றது. பரத்தமையொழுக்கம் மேற்கொள்ளும் தலைவனது குணத்தையும், பரத்தையர் குணத்தையும், தலைவியின் பண்பையும் பரத்தையர் வாயிலாக (பரத்தைக் கூற்று) அறிய முடிகின்றது.

சங்க இலக்கியப் பரத்தையர்களுக்கு கற்புடைமையும் ஒருமைப்போக்கும் வரையறுக்கப்படவில்லை. ஆயின் நற்றிணையில் கடுவன் இளமள்ளனார் என்னும் புலவர் காட்டும் பரத்தை தன் நெஞ்சம் பலர்பால் செல்லாமல் ஒருவனுக்கே உரிமையாகக் கருதுவதைக் காணமுடிகிறது. தலைவனைத் தண்டிக்கும் உரிமை பரத்தைக்கும் அவள் தாய்க்கும் உண்டு என்பதை நற்றிணைப் பாடலில் பரணர் வெளிப்படுத்துகிறார். வளையலைப் பறித்த தலைவனின் செயலைத் தலைவியிடம் கூறிவிடுவேன் என்று பயமுறுத்துவதும், நடுங்கியத் தலைவனைத் கண்டு நகைத்தலும் எனப் பரத்தையின் பேச்சு சுதந்திரத்தைப் புலப்படுத்துகிறார் பரணர் என்பது வெளிப்பாடு. ஆலங்குடி வங்கனார் பாடிய பாடல் ஒன்றில், தலைவி தலைவனை ஆட்டிப் படைக்கும் குணத்தாளாகவும், தலைவனின் விருப்பப்படி நடந்து கொள்பவளாகவும் பரத்தை சித்திரிக்கப்பட்டுள்ளாள். தலைவனிடத்தே தலைவிக்கு இருக்கும் உரிமைப் போல் தனக்கும் உள்ளது எனக் காமக்கிழத்தி சேரிப்பரத்தையிடம் அங்கலாய்த்துக் கூறுவதை குறுந்தொகைப்பாடல் எடுத்துரைப்பதையும் அறியமுடிகிறது. ஓரம்போகியார் பாடிய ஐங்குறுநூறு, மருதப் பரத்தை ஒருத்தி, தலைவியை விட்டுவிட்டுத் தன்னுடன் மட்டுமே நீராட வேண்டும் என்று உறுதிப்படக்கூறுவதில் இருந்து அவள் தனது உரிமையை நிலைநிறுத்துவதையும் அதிகாரம் செய்வதையும் காணமுடிகிறது.

குழந்தைப் பெற்றுக்கொள்ளும் உரிமை தலைவிக்கு மட்டுமே உண்டு; பரத்தைக்கு இல்லை என்ற காரணத்தால் பரத்தை தன் வருத்தத்தை மறைத்துக் கொண்டு பெருமிதத்துடன் தலைவியின் புதல்வனைத் தன் புதல்வனாக ஏற்கும் பண்பை ***'தன்புதல்வன் தாய்க்கே'*** (குறுந்.8) ***'எம்மோடு***

***புலக்கும் அவன் புதல்வன் தாயே'*** (ஐங்.90) போன்ற பாடலடிகள் வெளிப்படையாக உணர்த்துகின்றன. தன் அழகில் தலைவனைத் தன்பால் இருத்திக் கொள்ளும் குணமுடைய பரத்தையர் தலைவியைத் ***'தங்கையாக'*** ஏற்றுள்ளமையை, ***'ஊரனை எவ்வை'***(ஐங்.88) என்ற வரி வெளிப்படுத்துகிறது.

கலித்தொகை மருதத்தில் பரத்தையர்கள் ***'காமக்கிழத்திகளாக'*** வலம் வருகின்றனர். இக்காமக் கிழத்திகளோடு சேரிப்பரத்தையர், இற்பரத்தையரும் தலைவனின் பரத்தமையொழுக்கதிற்குக் காரணமானவர்கள். தலைவனின் மார்பு மட்டும் தனக்கு நிலையாகக் கிடைத்தால் போதும் என்று எண்ணம் கொண்ட காமக்கிழத்தி தலைவன் தன்னை விட்டுப் பிரிவது, ***'கனவில் கிடைத்தச் செல்வம் போல்'*** உள்ளது என்று கூறி வருந்துவதை மருதக்கலிப் பாடல் தெளிவுப்படுத்துகிறது.

தலைவியைப் போன்றே தலைவன்மேல் அதிக அன்பு கொண்டவள் காமக்கிழத்தி. ஆதலால் தலைவன் வந்து உடனே நீங்கிவது, வாடிய நெற்பயிருக்குச் சிறு மழைத்துளிப் போன்றது என வருத்திக் கூறுவது புலப்படுத்தப்பட்டுள்ளது.

***'மணவரம்பு'*** என்பது ***'ஆண்களுக்கு இல்லை; பெண்களுக்கு மட்டுமே!'*** என்று சங்கக்காலம் முதலே விதிவகுக்கப்பட்டமையை மருதக்கலியில் இளநாகனார் பாடியுள்ளார். தலைவன் தன்னை விரும்பாத பரத்தையை விடுத்துப் புதிய சேரிப்பரத்தையை நுகர்ந்து பின் காமக்கிழத்தியிடம் வந்த தலைவனின் பலமண இயல்பை ***'மெய்ப்பரத்தமை பொய்ப்பரத்தமை'*** என்ற இரு நிலையில் வைத்துப் பாடியமை புலப்படுகிறது. மேலும் இச்செயல்களால் மருதக்கலித் தலைவன் காம உணர்வு மிக்கவன் என்பது வெளிப்படை.

தன்னை நாடி வரும் தலைவனுக்குப் பெண்மை நலனும் கலைநலனும் அள்ளித் தந்து தன்வயப்படுத்தும் திறம்படைத்தவள் அகநானூற்றுக் காமக்கிழத்தி. பரணர் தம் பாடலில் காட்டும் காமக்கிழத்தி, தலைவன் தன்னைவிட்டுச் சேரிப்பரத்தையுடன் சென்றாள் என அறிந்தவுடன் ***'சங்ககாலப் பரத்தையரின் பழக்கவழக்கமான கைவளை உடைத்துக் கொள்ளும்'*** செயலைச் செய்யாமல் தலைவி போல் தலைவன் மீண்டும் தன்னிடத்தே

வந்து விடுவான் என ஆற்றிக் கொண்டிருந்த இயல்பைத் தெளிவுப்படுத்துகிறது. ஆலங்குடி வங்கனார் என்ற புலவர் பாடிய பாட்டில் வரும் பரத்தை, தலைவனைத் தான் கைக்கொள்வதால் தலைவி தன் துயரை வயிற்றில் அடித்துக் கொண்டு அழுது வெளிப்படுத்தினாள் எனத் தலைவியை இகழும் குணத்தைக் காட்டுகிறது. இவ்வாறாகத் தலைவனைக் கைக்கொள்வதால் ***'தலைவி துன்பம் அடைய வேண்டும்'*** எனத் தவறான எண்ணம் கொண்ட பரத்தயரை அகநானூற்றுப் பாடல்களும் (106,216) தெளிவுப்படுத்துகின்றன.

நெய்தல் நிலத்தில் காட்டப்பட்ட நற்றிணைப் பரத்தை ஒருத்தி, ***'ஊரறிய மணம்செய்த தலைவியை விடுத்துத் தன்னிடத்தே தங்கிய தலைவனுக்கு, அவன் செய்த தவறினைச் சுட்டிக்காட்டி அறிவுரைக் கூறும்'*** நிகழ்வையும் காண முடிகிறது. ஐங்குறுநூறு நெய்தல் தலைவன், ***'வண்டல் பாவையுடன்'*** விளையாடும் விளையாட்டுப் பருவமுடைய தலைவியின் அறியாமையைக் காட்டி மிக்க இளமையுடன் உள்ள பெதும்பைப் பருவப் பரத்தையரையே விரும்பிச் சென்றமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தலைவிக்குத் தோழி எல்லா நிலையிலும் துணை நிற்பதுபோல் பரத்தைக்கும் தோழி இருந்தமை ஓரம்போகியாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் வழி உறுதிசெய்யப்பட்டுள்ளது. தலைவி இடத்தில் நின்று தோழி, தலைவியின் உணர்வுகளை வெளிக்காட்டுவது போல் பரத்தையின் தோழியும் புலவிக்குப் பரத்தையை அழைத்த தலைவனிடம் நின்று பேசுகிறாள். இதனை ***"நீ யார் மகனையெம் பற்றி யோயே"*** (ஐங்.79:4) என்ற அடியால் உணர்த்துகிறார் ஆசிரியர். இத்தகு சிந்தனையுடன் பாடிய பாடலும் சங்க இலக்கியம் சித்திரித்துக்காட்டுகிறது.

***'தலைவி தோழிக் கூற்றில் உள்ளுறைவழிப் பரத்தமை'*** தலைப்பிலான இயலில் தலைவிக் கூற்றிலும், தோழிக் கூற்றிலும் பேசப்பட்ட தலைவனின் பரத்தமையொழுக்கமும் பரத்தையின் குணமும் உள்ளுறைவழி விரித்துரைக்கப்பட்டுள்ளன. புலவர்கள் தங்களது கற்பனையை இயற்கை நிகழ்வோடும், அந்நில உயிரினங்களோடும் ஒப்பிட்டுப் பாடும் சிறப்பைக் காட்டுவதற்குத் தக்க சான்றாக விளங்குவது சங்க இலக்கியமே ஆகும்.

ஓரம்போகியாரின் ஐங்குறுநூற்றுத் தலைவி தனக்கு இணையாகப் பரத்தையைக் கருதும் தலைவனின் போக்கை விரும்பாமல், அவ்வேதனையை இழிவான பொருளைக் கொண்டு பரத்தைக்கு உள்ளுறையால் உவமிப்பதை உணரமுடிகிறது. தலைவியின் துன்பத்தை விடவும் தன் காம உணர்விற்கே முக்கியத்துவம் தந்த தலைவனின் பரத்தமையை அக்காலச் சமூகம் ஒரு பெரிய குறையாகக் கருதவில்லை என்பதே உண்மை.

உயர்குலத் தலைவன் தன் இழிவான காமத்திற்கு ஈடாக நெல்லைத் தரும் அளவிற்கு வளம் கொண்டவனாகத் திகழ்கிறான். தன் சிற்றின்பத்திற்காக தானும் பொய்க்கூறி, பாணனையும் பொய்க்கூற வைக்கும் தலைவனின் செயல் கவனத்திற்குரியதாகிறது. தலைவியோடு சேர்ந்து மகிழ்ந்திருக்க வேண்டிய இந்திரவிழாவில் தலைவன் புதுப்புதுப் பரத்தையரோடும் வெவ்வேறு ஊர்ப்பரத்தயரோடும் மகிழ்ந்து திரிவது அவனின் பண்பில்லாத தன்மையை எடுத்துக் காட்டுகிறது.

ஐங்குறுநூற்றின் தலைவி ஒருத்தி தனது பிள்ளைப்பேற்றை முன்னிருத்தித் தலைவனைப் பரத்தமைக்கு அனுமதிப்பதையும் காட்டும் சங்கசமூகம் வழியாகத் தலைவனின் காம இச்சைக்கு உடன்படுபவளாகவே தலைவி உள்ளாள் என்பதைத் தெள்ளத்தெளிவாக உணரமுடிகிறது. கற்புச் சிறப்பில்லாத பரத்தை தலைவனின் மனைவியாகக் கூறித் திரிந்து ***‘குலமகளாகவே’*** கருதும் செயலைத் தலைவியால் கண்டிக்க முடியவில்லை. இது சங்க காலத்தில் தலைவிக்கு இல்லாத சுதந்திரம் பரத்தைக்குத் தலைவனால் கிடைக்கப் பெற்றிருந்தமையைக் காட்டுகிறது.

பரத்தையின் ஆற்றாமையைக் கண்ட தலைவி அப்பரத்தையைத் தங்கையாக எண்ணி இரக்கம் கொண்டு தலைவனைப் பரத்தையிடத்தே அனுமதிப்பது அக்காலத் தலைவி பரத்தமையை வெறுக்கவில்லை தலைவனுக்கு இன்பம் தர இயலாத காலத்தில் பரத்தமையே சிறந்தது என்று கருதும் அவளின் எண்ணமும் கவனிக்கத்தக்கதாகிறது. பரத்தையின் நினைவை விடமுடியாமலும் தன் புதல்வனை விட்டு நீங்க மனமில்லாத தலைவனையும் மருதக்கலி எடுத்துக்காட்டுகிறது. இதனின் தலைவன் காம உணர்வு மிக்கவனாக இருந்தாலும் பிள்ளைச் செல்வத்திற்கே முதன்மைஇடம்

தரும் சிறந்த குணமுடையவனாகவும் இருந்துள்ளான் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.

சிறப்பில்லாத பரத்தையையே தலைவன் நாடினாலும் தனக்கே பிள்ளைப் பெற்றுக் கொள்ளும் உரிமை இருந்ததைப் பெருமிதத்துடன் கூறும் தலைவியின் கூற்றால் பரத்தை தலைவனின் இன்ப நுகர்ச்சிக்கு மட்டுமே உரியவள்; குழந்தைப் பேற்றிற்கோ சொத்துரிமைக்கோ உரியவளில்லை என்பது அறியமுடிகிறது.

தீயபரத்தையொழுக்கத்தை மேற்கொண்டால் இறைவனின் தண்டனைக்குத் தலைவன் உள்ளாவான் என அஞ்சும் தலைவி இறை நம்பிக்கையையும், சகிப்புத் தன்மையையும் உடையவளாக மருதக்கலியில் வலம்வருவதை உணரமுடிகிறது.

***'பரிபாடலில் பரத்தமை'*** என்ற இயலில் மதுரையைக் குளிர்விக்க வந்த வையைப் புதுவெள்ளத்தில் காதற்பரத்தையுடன் நீராடும் தலைவன் காமம் மிகக் கொண்டவனாகவும் புதுப்புதுபரத்தையரை நாடுபவனாகவும், தன் பரத்தையொழுக்கத்திற்காகத் தலைவியின் ஆரமும், வளையலும் பரத்தைக்குத் தருவதாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளது. தலைவனின் காமப்பெருக்கை வையையின் வெள்ளப்பெருக்கோடு ஒப்பிடும் போக்கு உணரப்படுகிறது. தலைவன் தன் காம இச்சைக்காகப் புதுப்பரத்தையிடம் ***'பணிபொசி பண்ப'*** என்று பணிந்து நின்றதும் இப்பரிபாடல் உணர்த்துகிறது.

பரிபாடல் தலைவனின் போக்கு இவ்வாறிருக்க, செருக்குமிக்க காதற் பரத்தை தலைவியிடம் நேருக்குநேர் நின்று வாதிடும் குணம் கொண்டவளாகவும், தலைவனுடன் ஊடிக்கொள்பவளாகவும் முதுப்பரத்தையின் சொல்லுக்கு இணங்குபவளாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளாள். மேலும் அக்காலத்தில் வையையில் நீராடப் பரத்தையர் குதிரைமீதும், யானைமீதும் ஏறிச் சென்றதையும் உணரமுடிகிறது. தலைவியைப் போன்று பரத்தையும் பூப்புக் காலத்தில் தலைவனைப் பிரிந்திருக்க வேண்டும் என்ற செய்தியும் பெறப்படுகிறது.

***'மிகுந்த பொருள் தரும் காமுகர்களுக்கே இன்பம் தரும் பரத்தையர்கள்'*** யாழிசைத்துத் தலைவனின் காமத்தைக் கூட்டுவதையும்

காணமுடிகிறது. அக்காமத்திற்காகக் கள்வனாகத் தலைவன் மாறுவதும் இப்பரிபாடல் உணர்த்துகிறது. நல்லந்துவனார் என்னும் புலவர் காட்டும் தலைவி ஒருத்தி காதற்பரத்தையை ***'மாற்றாளாக'*** ஏற்றுக்கொண்டு தலைவனையும், அவனால் தரப்பட்டபட்டதுமான தன் தந்தை தனக்கு தந்த ஆபரணங்களையும் திருப்பித் தருமாறு கேட்கும் குணம் படைத்தவளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளாள். பொருட் பெண்டிராக வலம்வரும் இக்காதற்பரத்தையர் யாருக்கும் அஞ்சாதவர்களாயும் தலைவியை எதிர்ப்பவர்களாகவும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றித் திரிபவர்களாகவும் திகழ்வதைப் பரிபாடல் உணர்த்துகிறது. தலைவனின் பரத்தமையொழுக்கத்தையும், அவ்வொழுக்கத்திற்காக அவன் கள்வனாவதையும் தலைவி அறிந்திருந்தும் சமூகப் பாதுகாப்புக் கருதி ***'மணவிலக்குப்'*** பெற்றுப் பிரிந்து வாழவோ, எதிர்த்துப் பேசவோ துணிவின்றி, அத்தலைவனையே சார்ந்து நிற்க வேண்டிய சூழலும் இருந்தமை சங்ககாலச் சமூகவழி வெளிபடுவது திண்ணம் என்பதை இவ்வியல் எடுத்துக் காட்டுகிறது.

***'புறநானூறும் பரத்தமையும்'*** என்னும் இயலில் சிற்றரசனான பேகன் தன் மனைவி கண்ணகியை விடுத்துப் பரத்தமையொழுக்கம் மேற்கொண்டிருந்தமையை அக்காலப் புலவர்கள் கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர்கிழார் என நால்வரும் இல்லறம் ஓம்புமாறு அறிவுறுத்துவதைக் காணமுடிகிறது. இப்புலவர்களின் கண்டிக்காதப் போக்கால் சங்ககாலத்தில் பரத்தமையொழுக்கத்தைப் புலவர்களும் வெறுக்கவில்லை என்பதை இவ்வியல் எடுத்துரைக்கிறது.

***'பத்துப்பாட்டில் பரத்தமை'*** என்ற இயலில் உத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலையில் தோற்ற அரசனின் நாட்டுப் பெண்களை தம் நாட்டுக் கோயில்களில் விளக்கேற்றிப் பணிபுரிய வைத்தனர். அப்பெண்டிர் ***'கொண்டி மகளிர்'*** என அழைக்கப்பட்டனர். பண்பாட்டின் புதையலாக விளங்கும் பத்துப் பாட்டின் மதுரைக்காஞ்சி காட்டும் பரத்தையர்கள் மாலைக் காலத்தில் மணமிக்கப் பூக்களாலும், வாசமிகு திரவியங்களாலும் தம்மை அலங்கரித்துக் கொண்டு இனிய மொழியால் ஆடவரைக் கவர்ந்த செயலும், தன்னை அடையும் ஆடவரின் அனைத்து பொருளையும் கவரும் பண்பினராகக் சித்திரிக்கப்பட்டுள்ளதை இவ்வியல் காட்டுகிறது.

முடிவாக, சங்க காலத்தில் தலைவன் தன் காமத்திற்கு முதலிடம் தந்து பரத்தமை மேற்கொண்டு ஒழுகியதை நோக்கும்போது தொல்காப்பியர் முதல் சங்கப் புலவர்கள் வரை பரத்தமைக் கூடாது என்று அறுதியிட்டுக் கூறவில்லை என்பதும், தலைவியும் தலைவனைக் கண்டிக்கவில்லை என்பதும், பாணனும் தலைவனின் பரத்தமைக்குத் துணை நின்றான் என்பதும் சங்கப் பாடல்கள்வழி அறிந்து கொள்ள முடிகிறது. பரத்தமை மேற்கொண்டால் தண்டனை உண்டு என்று அழுத்தமாகக் கூறிய மனுதர்ம சாஸ்திரம் பரத்தையரே இருத்தல் கூடாது என்று கூறவில்லை என்பதும் உணர முடிகிறது. திருவள்ளுவர் வரைவின் மகளிருடன் கூடாவொழுக்கம் வேண்டாமென்று அறிவுறுத்தினர். தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தில் தலைவிக்கு விருப்பமில்லை எனினும் சமூகப் பாதுகாப்பு கருதியும், தன் குழந்தைபேற்றின் காரணமாகவும், பொருளாதாரச் சூழல் கருதியும், தலைவனின் தவறைத் திருத்த இயலாத பெற்றோரும், சமூகமும், ஆணாதிக்கம் காரணமாகவும் தவறு செய்யும் தலைவனையே சார்ந்து வாழவேண்டிய கட்டாயச் சூழலுக்குத் தலைவி போன்ற பெண்கள் தள்ளப்பட்டுள்ளதை இவ்வாய்வு மூலம் அறியமுடிகிறது. மேலும் பெண்ணடிமைக்கு இவ்விடமே தொடக்கம் என்பதும் உணர முடிகிறது. இறுதியாக இவ்வாய்வு உயர்பண்புடைய தலைவியை விட பரத்தைக்கு முதலிடம் தந்ததை எடுத்துரைக்கிறது.

இவ்வாய்வு எட்டுத்தொகை தலைவி கூற்றுப் பாடல்களை முழுவதும் ஆய்வுக்கு உட்படுத்தினால் பரத்தையொழுக்கம் பற்றிய செய்திகள் அடுத்த ஆய்வுக்கு வழிவகுக்கும்.

**வாழ்க தமிழ்! வளர்க தமிழ்!**

# உவமமும் பொருளும்

| தலைவன் | தலைவி | பரத்தை |
|---|---|---|
| வயலை (ஐங்.11) | கரும்பு (ஐங்.12,18) | வேழம் (ஐங்.11,12,18) |
| நண்டு (ஐங்.21,22,23,24) | உளை (ஐங்.13) | வேழம் வெண்பூ (ஐங்.13,17) |
| முதலை (ஐங்.5,24,41) | வெண்குருகு (ஐங்.17) | சேறு (ஐங்.22) |
| ஆமை (ஐங்.43) | தாமரை (ஐங்.68,கலித்.77) | முள்ளிவேரளை (ஐங்.23) |
| குட்டம் (ஐங்.63) | பெடை (ஐங்.85) | வாளைமீன் (ஐங்.63) |
| நீர்நாய் (ஐங்.63) | பிள்ளை (ஐங்.151) | ஆம்பல் (ஐங்.21,65,68,95,கலித்.75) |
| சுரும்பு (ஐங்.65) | காஞ்சிமலர் (ஐங்.1) | பழனப்பன்மீன் (ஐங்.70) |
| நாரை (ஐங்.70,151,155,160) | நீலம் (கருங்குவளை) (ஐங்.2) | வெள்ளாங்குருகு (ஐங்.151,155,160) |
| சம்பங்கோழி (ஐங்.85) | காய்த்துப் பயன்படும் நெல் (ஐங்.3,4) | சிறிய அயிரைமீன் (ஐங்.164,165,169,170) |
| எருமை (காளை) (ஐங்.95) | உயிருடைய யானை (ஐங்.55) | தேர்ந்தெடுக்கப்பட்டமீன் (ஐங்.184) |
| சுரும்பு (ஐங்.65) | நெய்தல்மலர் (கலித்.75) | சிறுமீன் (ஐங்.1) |
| சிறுவெண்காக்கை (ஐங்.164,165,169,170) | -- | நெய்தல்பூ (ஐங்.2) |
| குருகு (ஐங்.184) | -- | பூத்துப்பயன்தராத கரும்பு (ஐங்.3) |
| வண்டு (கலித்.66) | -- | முதுமீன் (ஐங்.5) |
| செந்நெல் (கலித்.79) | -- | உயிரற்ற பொறி எந்திரம் (ஐங்.55) |
| -- | -- | மலர், தேன், முல்லை (கலித்.66) |
| -- | -- | பறவைகள் (கலித்.77) |
| -- | -- | தாமரை (கலித்.79) |

# முதன்மை ஆதாரங்கள்

| | | |
|---|---|---|
| 01 | அகநானூறு<br>களிற்றியானை நிரை | **ந.மு.வேங்கடசாமி நாட்டார்,(உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், திருநெல்வேலி.<br>பதிப்பு : 1957 |
| 02 | அகநானூறு<br>நித்திலக்கோவை | **ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், திருநெல்வேலி.<br>பதிப்பு : 1957 |
| 03 | அகநானூறு<br>மணிமிடை பவளம் | **ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், திருநெல்வேலி.<br>பதிப்பு : 1959 |
| 04 | எட்டுத் தொகையுள் ஒன்றாகிய<br>**ஐங்குறுநூறு**<br>(மூலமும் விளக்கவுரையும்) | **துரைசாமிப்பிள்ளை, சு., ஔவை (உ.ஆ)**<br>அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,<br>சிதம்பரம்,<br>பதிப்பு: 1957. |
| 05 | எட்டுத்தொகையுள் ஒன்றாகிய<br>**நற்றிணை நானூறு**<br>(மூலமும் உரையும்) | **நாராயணசாமி ஐயர். அ., (உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட்,522, டி.டி.கே. சாலை,<br>சென்னை-18.<br>பதிப்பு: 2001. |
| 06 | எட்டுத்தொகையுள்<br>ஐந்தாவதாகிய<br>**பரிபாடல்**<br>மூலமும் பரிமேலழகருரையுடன் | **சாமிநாதையர், உ.வே.,(பதிப்பாளர்)**<br>உ.வே.சாமிநாதையர் பதிப்பகம்,<br>டாக்டர் உ.வே.சாமிநாதையர்<br>நூல்நிலையம், திருவான்மையூர்,<br>சென்னை-41.<br>புதிப்பு: 1980 |

| | | |
|---|---|---|
| 07 | ஐங்குறுநூறு | **சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ)**<br>கழக வெளியீடு<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்ப்பதிப்புக் கழகம், லிமிடெட்,522, டி.டி.கே. சாலை, சென்னை-18.<br>பதிப்பு: 2009. |
| 08 | **கலித்தொகை** | **நச்சினார்க்கினியர் உரை,**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், திருநெல்வேலி. |
| 09 | **கலித்தொகைச்**<br>சொற்பொழிவுகள் | கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை-1.<br>பதிப்பு : 1970 |
| 10 | **குறுந்தொகை** | **சாமிநாதையர், உ.வே.,(பதிப்பாளர்),**<br>ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை.<br>பதிப்பு : 1955 |
| 11 | சங்க இலக்கியங்கள்<br>**அகநானூறு,**<br>(மூலமும் உரையும), | **மாணிக்கம், அ., (உ.ஆ),**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>21, இராமகிருஷ்ணா தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை-17. |
| 12 | சங்க இலக்கிகயங்கள்<br>**ஐங்குறுநூறு**<br>(மூலமும் உரையும்) | **மாணிக்கம், அ., (உ.ஆ),**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>21, இராமகிருஷ்ணா தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை-17. |
| 13 | சங்க இலக்கியங்கள்<br>**பரிபாடல்,**<br>(மூலமும் உரையும்) | **மாணிக்கம், அ., (உ.ஆ),**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>21, இராமகிருஷ்ணா தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை-17. |

| | | |
|---|---|---|
| 14 | சங்க இலக்கியங்கள்<br>**புறநானூறு**<br>(மூலமும் உரையும்) | **மாணிக்கம், ஆ.,(உ.ஆ),**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>21, இராமகிருஷ்ணா தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை-17. |
| 15 | சங்க இலக்கியம்<br>**அகநானூறு** | **ஜெயபால், இரா., (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-98.<br>பதிப்பு : 2004 |
| 16 | சங்க இலக்கியம்,<br>**ஐங்குறுநூறு** | **சிங்காரவடிவேலன், அர.,(உ.ஆ),**<br>கோவிலூர் மடாலயம்,<br>கோவிலூர் - 630 307.<br>பதிப்பு: ஏப்ரல் 2003. |
| 17 | சங்க இலக்கியம்<br>**ஐங்குறுநூறு** | **தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 18 | சங்க இலக்கியம்<br>**கலித்தொகை** | **விசுவநாதன், அ., (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 19 | சங்க இலக்கியம்<br>**குறுந்தொகை** | **தமிழண்ணல், (உ.ஆ),**<br>கோவிலூர் மடாலயம்,<br>கோவிலூர் -630 307.<br>பதிப்பு: 2002. |
| 20 | சங்க இலக்கியம்<br>**குறுந்தொகை** | **நாகராசன், வி., (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |

| | | |
|---|---|---|
| 21 | சங்க இலக்கியம்<br>**நற்றிணை** | **பாலசுப்பிரமணியன், கு.வெ.,(உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 22 | சங்க இலக்கியம்<br>**பத்துப்பாட்டு**<br>(மூலமும் தெளிவுரையும்) | **சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ),**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>31, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை-18.<br>பதிப்பு : டிசம்பர் 2010 |
| 23 | சங்க இலக்கியம்<br>**பத்துப்பாட்டு,**<br>**பட்டினப்பாலை**<br>(தெளிவுரை) | **சாயபு மரைக்காயர், மு.,(உ.ஆ),**<br>கங்கை புத்தக நிலையம்,<br>23,தீனதயாளு தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை-17.<br>பதிப்பு : ஜீன் 2010 |
| 24 | சங்க இலயக்கியம்<br>**பத்துப்பாட்டு,**<br>**மதுரைக்காஞ்சி**<br>(தெளிவுரை) | **இராமமூர்த்தி, இராம., (உ.ஆ),**<br>கங்கை புத்தகநிலையம்,<br>23, தீனதயாளு தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை–17.<br>பதிப்பு : ஜீன் 2010. |
| 25 | சங்க இலக்கியம்<br>**பரிபாடல்** | **1) சுப்பிரமணியன்,பெ.,(உ.ஆ),**<br>**2) பாலசுப்பிரமணியன்,கு.வெ., (உ.ஆ),**<br>**3) தட்சிணாமூர்த்தி,(உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 26 | சங்க இலக்கியம்<br>**புறநானூறு**<br>(மூலமும் உரையும்) | **1) பாலசுப்பிரமணியன்,கு.வெ.,(உ.ஆ),**<br>**2) விசுவநாதன், அ.,(உ.ஆ),**<br>**3) நாகராசன், வி.,(உ.ஆ),**<br>**4) ஆரோக்கியசாமி,இரா., (உ.ஆ),**<br>**5) திலகவதி. க., (உ.ஆ),**<br>**6) சத்தியநாராயணன், வெ. (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 27 | **தொல்காப்பியம் -**<br>**பொருளதிகாரம்** | **இளம்பூரணர் உரை,**<br>கழக வெளயீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், திருநெல்வேலி.<br>பதிப்பு : ஜீலை 1956 |

| | | |
|---|---|---|
| 28 | **தொல்காப்பியம் - பொருளதிகாரம்** | **இளம்பூரணனார் உரை,**<br>சாரதா பதிப்பகம்,<br>ஜி-4, சாந்தி அடுக்ககம்,<br>ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>பதிப்பு : மே 2005 |
| 29 | **தொல்காப்பியம் - பொருளதிகாரம்**<br>(பொருளுரை) | **இராஜா, கி., (உ_ஆ),**<br>பாவை பப்ளிகேஷன்ஸ்,<br>142, ஜானி ஜான் கான் சாலை,<br>இராயப்பேட்டை,சென்னை-14.<br>பதிப்பு : 2013 |
| 30 | நாற்கவிராச நம்பி<br>**அகப்பொருள் விளக்கம்** | **கா.ரா.கோவிந்தராச முதலியார்,(உ_ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், சென்னை. |
| 31 | நாற்கவிராச நம்பி<br>**அகப்பொருள் விளக்கம்**<br>(முழுமையான விளக்கங்களுடன்) | **சுதமதி, இரா., (உ.ஆ),**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-98. |
| 32 | **பத்துப்பாட்டு**<br>தொகுதி-2<br>(மூலமும் உரையும்) | **சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட்,522, டி.டி.கே. சாலை,<br>சென்னை-18.<br>பதிப்பு: 2008. |
| 33 | **பரிபாடல்**<br>(மூலமும் உரையும்) | **சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ),**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>லிமிடெட், சென்னை-1.<br>பதிப்பு: 1957. |

# துணைமை ஆதாரங்கள்


| | | |
|---|---|---|
| 01 | உரையாசிரியர்கள் | **அரவிந்தன், மு.வை.,**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>8/7, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை – 800 108.<br>பதிப்பு : 1995 |
| 02 | கற்பெனும் சிறையினிலே | **புலவர் குடந்தையன்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: 1996. |
| 03 | சங்க இலக்கிய ஒப்பீடு<br>இலக்கியக் கொள்கைகள் | **தமிழண்ணல்,**<br>மீனாட்சி புத்தக நிலையம்<br>மயூரா வளாகம்,<br>48, தானப்ப முதலி தெரு,மதுரை-1.<br>பதிப்பு : 2008 |
| 04 | சங்க இலக்கியத்தில் குடும்பம் | **மாதையன், பெ.,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-600 098.<br>பதிப்பு: ஜீன் 2010. |
| 05 | சங்க இலக்கியத்தில் சமூக<br>ஆய்வுகள் | **ஜோதிராணி, க.அ.,**<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>இரண்டாம் முதன்மைச் சாலை,<br>மையத் தொழில்நுட்பப் பயிலக<br>வளாகம், சென்னை – 600 113.<br>பதிப்பு: 2011. |
| 06 | சங்க இலக்கியத்தில் மருதப்<br>பாடல்கள்<br>மூலமும் தெளிவுரையுடன் | **சுப்பிரமணியன், ச.வே.,**<br>மெய்யப்பன் பதிப்பகம்,<br>53, புதுத் தெரு, சிதம்பரம் - 608 001.<br>பதிப்பு: 2010. |
| 07 | சங்க இலக்கிய மறுவாசிப்பு | **செல்வராசு, நா., சிலம்பு,**<br>வெளியீடு : காவ்யா,<br>16, இரண்டாம் குறுக்குத் தெரு,<br>டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,<br>சென்னை – 600 024,<br>பதிப்பு : 2009 |
| 08 | சங்க இலக்கியமும்<br>பண்பாட்டுச் சூழலியலும், | **தனஞ்செயன், ஆ.,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |

| | | |
|---|---|---|
| 09 | சங்ககால வாழ்வியல் | **சுப்பிரமண்யன், ந.,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-600 098.<br>பதிப்பு: ஜனவரி 2010. |
| 10 | சங்கத் தமிழ் | **மு.கருணாநிதி,**<br>திருமகள் நிலையம்,<br>புதிய எண் 16, பழைய எண் 55,<br>வெங்கட்நாராயணா சாலை,<br>தி.நகர், சென்னை – 600 017.<br>பதிப்பு: மார்ச் 2001. |
| 11 | சங்கத் தமிழ்ச்<br>செய்யுட்கோவை | **ஜெயராமன், நா.,**<br>முத்துப் பதிப்பகம்,<br>மதுரை<br>பதிப்பு : 1977 |
| 12 | சங்க மரபு | **தமிழண்ணல்,**<br>சிந்தாமணிப் பதிப்பகம்,<br>பதிப்பு : 2009. |
| 13 | சிந்தாமணிச் செல்வம் | **ஞானமூர்த்தி, தா.ஏ.,**<br>மெர்க்குரி புத்தகக் கம்பெனி,<br>ராஜவீதி, கோயம்புத்தூர்-1,<br>பதிப்பு: 1964 |
| 14 | செந்தமிழ்ச் செல்வி<br>சிலம்பு-84, பரல்-3<br>கட்டுரை-3 | **முருகாசாமி,** (கட்டுரையாளர்)<br>261/120, லிங்கிச் செட்டித் தெரு,<br>சென்னை – 600 001.<br>பதிப்பு : நவம்பர் 2009 |
| 15 | செந்தமிழ்ச் செல்வி<br>சிலம்பு-88, பரல்-2<br>கட்டுரை-3 | **வாணி அறிவாளன்,** (கட்டுரையாளர்)<br>261/120, லிங்கிச் செட்டித் தெரு,<br>சென்னை – 600 001.<br>பதிப்பு : அக்டோபர் 2012 |

| | | |
|---|---|---|
| 16 | தமிழ் இலக்கிய வரலாறு | **வரதராசனார், மு.,**<br>சாகித்திய அகாதெமி, 'இரவீந்திர பவன்', 35, பெரோஸ்ஷா சாலை,<br>புது தில்லி – 110 001.<br>பதிப்பு : 1972 |
| 17 | தமிழக் காதல் | **மாணிக்கனார், வ.சுப.,**<br>ஶ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,<br>40, பிஞ்சால சுப்பிரமணியம் தெரு,<br>(உஸ்மான் ரோடு), த.பை.எண்:1040,<br>தியாகராய நகர்,<br>சென்னை – 600 117.<br>பதிப்பு : ஜீன் 2009 |
| 18 | தமிழ்ச் செவ்வியல்<br>இலக்கியங்கள்<br>காலமும் கருத்தும் | **மாதையன், பெ.,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை-600 098.<br>பதிப்பு: ஜீலை 2011. |
| 19 | தமிழர் வாழ்வியல்<br>(கி.பி. 300 வரை) | **மாணிக்கம், வீ.,**<br>கிளியோ பப்ளிகேஷன்ஸ்,<br>9/2, இராமுபிள்ளை சந்து,<br>தெற்கு வெளி வீதி,<br>மதுரை – 625 001.<br>பதிப்பு: ஏப்ரல் 2010. |
| 20 | திருக்குறட் குமரேச வெண்பா | **கவிராஜ பண்டிதர்**<br>**ஜெகவீரபாண்டியனார்,**<br>தமிழ் நிலையம்,<br>40, சரோஜினி தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை – 600 017.<br>பதிப்பு : 2010. |
| 21 | திருக்குறள்<br>பரிமேலழகர் உரை | பூம்புகார் பதிப்பகம்,<br>127(ப.எண் 63), பிரகாசம் சாலை<br>(பிராட்வே), சென்னை – 600 108.<br>பதிப்பு : மார்ச் 2004. |

| | | |
|---|---|---|
| 22 | திருக்குறள்<br>வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி – பகுதி-2 | **சரவண ஆறுமுக முதலியார்,**<br>திருமதி சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை<br>பதிப்பு : 1971. |
| 23 | திறனாய்வுக் கலை, | **நடராசன், தி.சு.,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-98.<br>பதிப்பு: ஏப்ரல் 2004. |
| 24 | பத்தினிப் பெண்டிர் அல்லோம் (பரத்தையர் கணிகையர் தேவதாசியர் பற்றிய பதிவுகள்) | **அழகர்சாமி, அ.கா.,**<br>கருத்து – பட்டறை<br>2, முதல் தளம், மிதேசு வளாகம், நான்காவது நிறுத்தம், திருநகர், மதுரை – 625 006.<br>பதிப்பு: டிசம்பர் 2011 |
| 25 | மனுதர்ம சாஸ்திரம் | **திருலோக சீதாராம்,**<br>அலைகள் வெளியீட்டகம்,<br>சென்னை – 600 024.<br>பதிப்பு : ஜீன் 2003 |
| 26 | வரலாற்றில் தேவதாசிகள் | **முருகேசன், சி.எஸ்.,**<br>குறிஞ்சி,<br>21, டீச்சர்ஸ் கில்டு காலனி,<br>இராஜாஜி நகர் விரிவு,<br>வில்லிவாக்கம், சென்னை – 600 049.<br>பதிப்பு : 2009 |
| 27 | வள்ளுவரும் வரைவின் மகளிரும்<br>ஒரு வரலாற்றுப் பார்வை | **வீரமணி, பா.,**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,522, டி.டி.கே. சாலை,<br>சென்னை – 600 018. |

# அகராதி

| | | |
|---|---|---|
| 01 | மதுரைத் தமிழ்ப் பேரகராதி (முதல் பாகம்) | **சந்தியா நடராசன் (பதிப்பாளர்),**<br>சந்தியா பதிப்பகம்,<br>ஃப்ளாட்: ஏ., நியூடெக் வைபவ்,<br>57-53-வது தெரு, அசோக் நகர்,<br>சென்னை – 600 083,<br>பதிப்பு: 2004. |
| 02 | மெய்யப்பன் தமிழகராதி | **சுப்பிரமணியன், ச.வே., (பதிப்பாசிரியர்),**<br>மணிவாசர் பதிப்பகம்,<br>சென்னை.<br>பதிப்பு: 2009 |
| 03 | வாழ்வியல் களஞ்சியம் தொகுதி-5 | **பேரா.டாக்டர்.நா.பாலுசாமி,**<br>முதன்மை பதிப்பாசிரியர்,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்<br>பதிப்பு: 1991 |
| 04 | வாழ்வியல் களஞ்சியம் தொகுதி-12 | **பேரா.டாக்டர்.அ.மா.பரிமணம், எம்.ஏ.,எம்.லிட.,பி.எச்.டி., மொழி, மொழியியல், தத்துவம்.**<br>முதன்மை பதிப்பாசிரியர்,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்<br>பதிப்பு: 1992 |

# சங்க இலக்கியங்களில் பரத்தமை – ஓர் ஆய்வு

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கு.கோ.உமா மகேஸ்வரி**

பதிவு எண் : 3897

மேற்பார்வையாளர்

**முனைவர் ஜலஜா கோபிநாத்**

இணை மேற்பார்வையாளர்

**முனைவர் எஸ். விஜயன்**






திருக்குறள் ஆய்வகம்

சமயங்கள் தத்துவம் மற்றும் மனிதநேயச் சிந்தனைப்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை – 625 021


டிசம்பர் 2019